ராகங்களும், வர்ணங்களும், கீர்த்தனங்களும் ஒன்றின்மே லொன்றாய்ப் படிப்படியாய் இசைச் செல்வத்தோடு பொங்கி வருதற் பொருட்டு நலம் நிரம்பி நின்ற வீணை போல, இவரது பண்பு மிக்க உள்ளந்தானும், கவித்வ சக்தியின் வேகத்தால் பண் கனிந்தூறும் இனிய கருத்துக்கள் அடுத்தடுத் தெழுந்து ஒன்றோடொன்று இசைந்து நவநவமான கானவிலாசத்துடன் ஒழுகிவரும் பக்குவ மெய்திற்று. மதுரமிக்க இவ் இருதய கானத்தை யுணர்த்துதற்கென்றே அமைந்த தென்னலாம் இவரது அரிய சொற் செல்வம். தமிழணங்கு இவ் அருந்திறற் பெரியாரது குறிப்புணர்ந்த மாத்திரையில், அவர் விரும்பியவண்ணம் இன்சுவை கனிந்த நன் மொழியினைத் தட்டின்றி யுதவிவரக் காத்து நின்றனள். தமிழ் மொழியின் இனிமையினையும், அழகினையும், ஆற்றலையும், இவர்போல் முற்ற உணர்ந்தார் பிறர் யாரும் இல்லையென்றே கூறலாம். தமிழ்மொழி இவரது தனியரசினுக்கு அன்புற்றடங்கிநின்று குற்றேவல் புரிகுவதாயிற்று.

இங்ஙனம் உத்தமப் பெருங்கவிஞர்க்குரிய உத்தம லக்ஷணங்க ளனைத்தும் ஒருங்கு நிரம்பி விளங்கினர் கம்பர் பெருமான்.

பாரததேவியின் அருந்தவம் முற்றுப்பெறுங் காலமாயிற்று. அவ் அம்மை பல நூற்றாண்டுகளாக ஆசையொடு எதிர்நோக்கியிருந்த ஸம்பூர்ண - ராமபிரானை வாசாரூபமாக உலகினர்க் களிக்கக் கம்பர் பெருமான் திருவுளம்பற்றினர். எத்தகைய மங்கல நன்னாளில் நமது கவிஞர் இங்ஙனம் எண்ணித் துணிந்ததென யாவரால் அளவிட்டுரைக்கத்தகும்! தம்முயிர் போற் கம்பர் பெருமானைப் பாதுகாத்துத் தமக்கும் தமிழ்க்கும் அழியாப் புகழ் தேடிக்கொண்ட சடையப்ப வள்ளலார் தூண்ட இராமசரிதம் பாடுங் கருத்து எழுந்த

தெனச் சிலர் கூறுவர். ஆனல் இத் தெய்வமாக்கதையைப் பாடவேண்டுமென்று கம்பரது உயிரே அளவு கடந்த ஆசை கொண்டிருந்தது என்பதுதான் உண்மை. 'ஆசைபற்றி யறையலுற்றேன்' என்றே நமது கவிஞர்சிகாமணியும் நமக்கு உணர்த்துகின்ருர். பிறர் யாரேனும் வேண்ட இத் தெய்வ நறுங்கனி ரஸம் ஊறிப் பழுத்ததாகமாட்டாது. மேலும், இப் பெருங் கருத்து கம்பரது இளமைப் பிராயத் திலேயே அவரது திருவுள்ளத்தில் தோன்றியிருத்தல் வேண்டும். இளமைதொட்டே தம்மை இராமாயணத்திற் கெனத் தத்தஞ் செய்தனர். தமது வாழ்வின் தனிப் பெரு நோக்கம் இராம காதையை யியற்றுதலே யென்று கடைப் பிடித்தனர். இவரது சிந்தை இராமசரிதத்தையே சுற்றிச் சுழன்றது ; இவரது சொற்கள் யாவும் இராம சரித்திரம் பற்றியே விளைந்தன ; இவரது செயல்கள் யாவும் இராம சரிதத்தை முற்றுவிக்கும் பொருட்டே எழுந்தன.

'ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற்றேன் பெரு நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னெடும் போய் வெய்ய கானடைந்த
காரே கடல்கொளுந்தச் சிலைவாங்கிய காகுத்தனே'

என்ற அழகிய செய்யுளின் பொருள் கம்பர் பெருமானது திருவுளத்தன்மையை நினைக்கும்பொழுதுதான் நமக்குப் புலப்படுகின்றது.

'உண்ணும் நீரினு முயிரினு மவனையே யுகப்பார்'

என்ற தெய்வத்திருவாக்கின் இன்னிசையிலே நமது மனம் கட்டுண்டு கிடப்பதன் காரணம் இப்பொழுதுதான் நாம் அறிகின்ருேம். இவரது அகன்று பரந்த அக உலகிலே இராம சரித மொன்றே தனியாட்சி புரிந்துவந்தது. காலம் அளவு முத

ஸிய வரையறையின்றிச் செவிநுகர் கனிகளைச் சொரிந்து தரவல்ல கம்பரென்னும் கற்பக தருவினை, அது வெயில் முதலியனவற்றுல் வாடி வருந்தாதபடி, நீர்பெய்து பாது காத்துவந்த சடையப்பவள்ளலார் தாமும் இராம சரிதத் திற்கு அடுத்தபடியாகவே நம் கவிஞர் பெருமானது அன்பிற் குரியராயினர். பல வருஷங்களாக, இரவும் பகலும், இராமா யண விஷயத்தையே கம்பர் சிந்தனைசெய்து வந்தாராதல் வேண்டும். கதைப் போக்கினை அழகுபெற ஒழுங்குபடுத்து தலினும், பலவேறு கட்டங்களில் நிகழும் சம்பாஷணைகளின் முக்கியாம்சங்களைத் தெரிந்தெடுத்து அழகுபடுத்துதலினும், கதாபாத்திரங்களின் குண விசேஷங்களை அவ்வவர்க் குரிய சொற்செயல் முதலியவற்றுல் விளங்க அமைப்பதிலும், இவர் வாழ்வு காலத்தின் முற்பகுதி கழிந்திருத்தல் வேண் டும். இராம சரிதம் என்னும் புண்ணிய தீர்த்தத்திலே இவர் தோய்ந்து தோய்ந்து அதன்கண் தம்மை ஊறவைத்திருத்தல் வேண்டும். தம்மை இராமசரித மயமாக மாற்றியிருத்தல் வேண்டும். பலரும் இவரைப் பித்தரெனவும் பேதை யென வும் கூறுமாறு தமது உளங் கோயில்கொண்ட தெய்வப் பெருஞ் சரிதத்திலே ஈடுபட்டுப் பக்தராய் விளங்கினர்.

> ' பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்
> பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ !"

என்று நம் கவிஞர்பெருந்தகை கூறுவதன் குறிப்பு உணரத் தக்கது. இவர்தம் பெருங் காப்பியத்தைப் பாடியது பிறரது ஆணையை மேற்கொண்டன்று ; பிறர் கேட்டு உளங் குளிரும் பொருட்டு மன்று ; தமது ஆத்ம - தாகத்தைத் தணிக்கும் பொருட்டுத் தாம் பெய்துகொண்ட கானவர்ஷமேயாகும் இவரது ' இராமாவதாரம்'. இப் பெருந்தகையாரது கவித்வ

சக்தி இராம சரித்திரத்தை அலங்கரித்தற் பொருட்டாகவே அரும்பி மலர்ந்து ஒளி சிறந்து மணங் கமழ்ந்து விளங்கியதாகும். இத் தெய்வகீதத்தைப் பாடுதற்பொருட்டாகவே அமைந்து நின்ற ஓர் அரும்பெறல் வீணையென்று நம் புலவர் பெருமானைக் கூறின் அது மிகவும் பொருத்தமுடையதேயாகும்.

இராம காதையைப் பாடுதற்கெனத் தம்மைப் பக்குவப் படுத்தி அவ் அருஞ்செயலினை மேற்கொள்ளுதற்கண்ணே தாம் ஈடுபட்டிருந்த போதிலும், கம்பர் பெருமானது உள்ளத்தில் இடையிடையே சிறிது தளர்வு தோன்றாமற் போகவில்லை யென்று கருதற் கிடமுண்டு. வான்மீகி மஹரிஷியின் பெருமையை நன்குணர்ந்தார் யார்தாம் அவரோடு கவிதையில் இகலி வெற்றிகொள்ள மனமொருப்படுவர்? பாடுதற் கமைந்த தெய்வசரிதத்தின் பெருமையை நன்குணர்ந்தார் யார்தாம் அச்சரிதத்திற்குத் தமது கவித்வ-சக்தி போதியதாகுமென இறுமாந்திருப்பர்? இவ்வகைத் தளர்வு தோன்றியிருத்தல் வேண்டு மென்பதற்கு,

'நொய்தி னொய்ய சொல் நூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமரம் ஏழ்துளை
எய்த எய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே.'

என்னுஞ் செய்யுள் சான்றாகும். இங்ஙனம் மனந்தளர்ந்த காலங்களிற் சடையப்பவள்ளலாரே நமது கவிஞர்க்கு ஊன்றுகோலா யுதவினர். தம் உயிர்நண்பரது கவித்வ சக்தியின் பெருமையைப் பலவாறாக அறிந்த சடையப்பர் அவரை அடிக்கடி யூக்கி மனத்தளர்வகற்றி இராம சரித்திரம் பாடுஞ் செயலினை மேற்கொள்ளச் செய்திருத்தல் வேண்டும்.

இதனை யடிப்படையாகக் கொண்டே இராமகாதை சடையப்ப வள்ளல் தூண்டலாற் பாடப்பெற்றதென்னும் பாரம்பரை வரலாறு எழுந்ததாகல் வேண்டும்.

தமது கவித்வ சக்தியின் பெருமையினாலும் சடையப்பரது அன்பினாலும் கம்பர் பெருமானின் உள்ளத்தில் ஏகதேசமாய்த் தோன்றிய தளர்வு அறவே நீங்கியது. தோன்றாத் துணையாய் நின்று உலகனைத்தையும் இயங்கச்செய்யும் இறைவனது திருவருளால் நமது கவிஞர் பெருந்தகையின் சிந்தை செயலாகப் பரிணமித்தது. இராமாயண கானம் இனிதெழுந்து சப்திக்கத் தொடங்கிற்று. பாரத மாதாவின் தவமுற்றி அவளது உயிராசை நிரம்புவதாயிற்று. அவள் மனத்திற்குகந்த புருஷோத்தமன் என்றும் அழியாத வாசாரூபத்தில் தோன்றுவானாயினன். இராமாவதாரப் பேரிதிஹாஸம் உருப்பெறலாயிற்று. பல நூற்றாண்டுகட்கு முன்னர் நிகழ்ந்த இவ் அரிய சம்பவம் இப்பொழுதும் நம்மால் அன்போடும் மகிழ்ச்சியோடும் நினைந்து இன்புறத்தக்கதா யுள்ளது. கம்பர்பெருமானோடு உடனுண்டுறைந்து அவரைத் தம்முயிரினு மேலாகப் பாதுகாத்து வந்த சடையப்பவள்ளலார் எத்துணை யன்போடு இப் பெருநிகழ்ச்சியைப் போற்றியிருத்தல் வேண்டுமென அறிதல் கூடுமோ? அவரது அன்பின் திறம் யாவரால் உணரத்தக்கது! 'அன்பென்ப தொன்றின் றன்மை யமரருமறிந்த தன்றால்' என்று கம்பர் தாமே அருளிச்செய்தது தமது ஆருயிர் நண்பராகிய வள்ளலது பேரன்பினை மனத்தகத்துக்கொண்டே போலும்! சடையப்ப வள்ளல் தம் ஊர்ப்புறத்துள்ள ஓர் அழகிய பூஞ்சோலையிலே அவரது அன்பே வடிவெடுத்தாற்போன்ற பெருமை வாய்ந்த மணிமண்டப மொன்று வனப்புத்தோன்ற அமைத்தனரென்று நாம் கருதல் வேண்டும். அப் பூஞ்சோலையிலே

பிரகிருதிதேவி நிச்சப்தமாய் அமைதியுற்று விளங்குகின்றாள். மணிமண்டபத்தினுள்ளே கம்பர் பெருமான் அறிவும் அன்பும் கவித்வசக்தியும் தமது திருமுகமண்டலத்தே ஒளி சிறந்து தோன்ற நடுவிருந்தருளுகின்றார். சிறிது தூரத்தே விரைந்தேற்குஞ் செவியும் சோர்வறியாத ஞாபகமுமுடைய தமிழறிஞர் பலர் ஏடும் எழுத்தாணியுங்கொண்டு இவரைச் சூழ்ந்திருக்கின்றனர். வாயிற்படியினருகே, சடையப்ப வள்ளலார் ஓர் ஆசனத்தின்மீது அமர்ந்தருளியிருந்து எவ்வகை யிடையூறும் எய்தா வண்ணம் கவலையொடு நோக்கி அன்புபூண்டு விளங்குகின்றார். பூஞ்சோலையிலே அந்நியரது வரவு தவிர்க்கும் பொருட்டுக் காவலாளர்கள் நிற்கின்றனர். தமிழார்வம் தாங்கலாற்றாத தமிழ்ச் செல்வர் சிலர் தமது ஆசை யிழுத்துச் செல்லுதலால் அறிமுகமுள்ள காவலாளரைக் கடந்துசென்று மணிமண்டபத்தருகில் வந்து இராம சரிதமாகிய கீதவமுதைச் செவிமடுத்தற்கு ஒற்றியிருந்தனர். 'உலகம் யாவையும் தாமுளவாக்கலும்' என்னும் பொருள் நிரம்பிய மதுரத் திருவாக்கு நமது கவிஞர் சிகாமணியின் இதயத்தினின்றும் பொங்கி யெழுந்தது. மணிமண்டபமுழுவதும் நிறைந்து பூஞ்சோலையிற் பரந்துலவி மக்களிதயத்தே குடிகொண்டு நின்றது இத் தெய்வத் திருவாக்கு. ஏடெழுதும் ஒலி கேட்கலாயிற்று. கம்பர் பெருமானது திருவுள்ளம் இராமாயண-கீதமாகக் கரைந்துபெருகி எட்டிற் பிரவஹித்துப் பாய்குவதாயிற்று.

இங்ஙனம் தொடங்கிய இராமாவதாரம் முற்றுப் பெறுதற்கு வருஷங்கள் பலப்பல சென்றிருத்தல் வேண்டும். சிறந்த ஆங்கில கவிஞரும் நுண்ணிய ஆராய்ச்சியாளருமாகிய கோலரிட்ஜ் என்பவர், பத்து வருஷ காலம் இதிஹாஸப் பொருளினைக் குறித்துக் கவிஞர் சிந்தனை செய்வதற்கும்

பத்து வருஷகாலம் அதை எழுதி முடித்தற்கும் ஆக, இருபதுவருஷ காலமேனும் ஓர் இதிஹாஸம் பாடி முடித்தற்கு வேண்டப்படுமென்று ஒரு வகையாற் கணக்கிடுவித்தனர். ஆனால், இங்ஙனம் கணக்கிடும்போது கம்பரது இராமாவதாரம் போன்ற பேரிதிஹாஸத்தினை அவர் கனவிலும் நினைத்திரார் என்பது திண்ணம். மில்டன் எழுதிய 'சுவர்க்க நீக்கம்' என்னும் ஆங்கில இதிஹாஸத்தினையும், ஹோமர், வர்ஜில் முதலானோரது இதிஹாஸங்களையும் மனத்திற்கொண்டே மேற்கூறிய காலவரையறை செய்திருத்தல் கூடும். சுவர்க்க நீக்கத்தினைக் காட்டினும் இராமாவதாரம் நான்மடங்கு பெரிது. அதனை யெழுதி முற்றுதற்கு ௪௦-வருஷங்களேனும் முன் குறித்த கணக்கின்படி வேண்டுமெனக் கருதலாம். இங்கே ஒரு விஷயம் மனங்கொள்ளுதற்குரியது. மேல் நாட்டுக் கவிஞர்கள் கவிதை எழுதும் முறை வேறு; நமது நாட்டுக் கவிஞர்கள் கவிதை எழுதும் முறை வேறு. மேல் நாட்டுக் கவிஞர்கள், தமது மனத்தின்கண் கவிதை தோன்றியவுடன், அதனைத் தாமே யெழுதிக்கொள்ளுதல் பெருவழக்காகும். இதனால் கவிதைப் பிரவாஹமானது இடையீடின்றிச் செல்லுதற்குச் சிறிது முட்டுப்பாடு உளதாகின்றது. கவித்வ-ஆவேசம் நிலைநின்று விளங்குவதற்கும் சிறிது தடை ஏற்படுதல் கூடும். நமது நாட்டுப் பெருங்கவிஞர் கவிதைகள் தோன்றத் தோன்றச் சொல்லிவருதலும் அவர்களது மாணாக்கர்களும் பிற தமிழறிஞர்களும் உடனிருந்து அவற்றை ஏட்டில் எழுதிக்கொள்ளுதலுமே பெருவழக்காக ஏற்பட்டுள்ளது. கவிதைகள் எத்துணை விரைந்து பெருகிவரினும் ஏடெழுதுவோர் அவற்றை வரன் முறையே ஒவ்வொன்றாகப் பங்கிட்டுத் தமது திண்ணிய ஞாபக சக்தியால் விரைந்து எழுதிவந்தனர். அன்றியும்

விருத்தம் முதலிய தமிழ்க் கவிதை இசையோடு கலந்தன்றித் தோன்றுதலில்லை. இவ் இன்னிசை இடையீடின்றிச் செய்யுட்கள் விரைந்து வருவதற்குப் பெரிதும் அநுகூலம் செய்கின்றது. இங்கே கூறிய இரண்டு காரணங்களாலும் கோலரிட்ஜ் கணக்கிட்ட முறை நமது நாட்டிற்குப் பொருந்துமாறில்லை. இராமாவதாரம் பாடி முடிதற்கு இத்தனை வருஷங்கள் ஆகியிருத்தல் வேண்டுமென நிச்சயமாய் வரையறுத்துக் கூறுதல் எலாது. எனினும் ஒன்று மாத்திரம் ஐயமின்றிக் கொள்ளுதல் தகும். அறிவு, அநுபவம், கல்வி, கவித்வம் : ஆகிய இவையனைத்தும் முதிர்ந்து விளங்கிய தமது வாழ்வின் உச்ச காலத்தை இராமாவதாரத்திற்கெனக் கம்பர் அர்ப்பணஞ் செய்தனரென்பதே உண்மையாகும். தினமொன்றுக்கு ௭௦௦ செய்யுட்கள் வீதம் இரண்டுவாரத்திற்குள் இராமாயணம் பாடி முடிந்த தெனவும், இத் தினங்களிலே இரவுகள் யாவும் வான்மீகி-இராமாயணம் பொருள் கேட்டலிலே கழிந்தன வெனவும் சிலர் கூறுவர். இதனை,

> '. . . . . . . . . . . . அபிநவ கவிநாதன்
> விழுந்த நாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனூராய்ந்
> தெழுந்த நாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே'

என்ற செய்யுள் ஆதரிப்பதாமென்றுங் காட்டுவர். இவ்வரலாறு முற்றிலும் அசம்பாவிதமாயுள்ளது. உணவருந்துதல் முதலிய அவசிய கர்மங்களால் இடையீடுபடாது இராமாவதாரம் பாடப்பெற்றதெனக் கொள்ளினும் நிமிஷம் ஒன்றிற்குச் செய்யுளொன்று வீதம் பாடப்பெற்றதாகல் வேண்டும்! அன்றியும் மேற்காட்டிய செய்யுள் ஏட்டுப் பிரதிகள் பலவற்றிற் காணப்படவில்லை. பிற்காலத்தே கதை பெருக்குவோர்களால் இது பாடப்பெற்றதாகல்வேண்டுமெனக்

கருதுதல் தகும். மேலும் நூலினகத்து ஆழ்ந்து கிடக்கும் சில சான்றுகளும் இவ்வரலாற்றினை அநாதரிக்கின்றன. கடைசியாக, இராமாயணம் போன்ற பெருங் காவியம் பிறக்கும் கவித்வ-தத்துவத்திற்கு இவ்வரலாறு முற்றிலும் மாறாகவுள்ளது. இக் காரணங்களால் மேற்காட்டிய செய்யுள் சிறிதும் கொள்ளத்தக்கதன்று. ஆனால் இச் செய்யுள் குறிக்கும் வரலாறு மிக அரியதோர் உண்மையினை யறிவுறுத்துகின்றது. கவித்வ-ஆவேசம் நிரம்பி உணர்வு மயமாய்க் கம்பர் பெருமான் விளங்கிய அமயங்களில் இராமாவதாரம் பாடப்பெற்றதாகும். அவ் அமயங்களிற் கவிதைப் பிரவாஹம் சிறிதும் இடையீடின்றிப் பெருகிப்பாய்ந்து, கம்பீரமாயோடும் பெரு நதி போன்று, விரைந்து சென்றது. இதனை யுணர்த்தும் அத்துணையே மேலைச் செய்யுள் உண்மையுடையதாகும்.

வருஷங்கள் சில சென்றன. இராமகாதை முற்றுப் பெற்றது. சம்பூர்ண-ராமபிரான் வாசாரூபமாகத் தமிழ் நாட்டில் திருவவதரித்துப் பாரதமாதாவின் திருவுளத்தை மகிழ்வித்தனன். கம்பர் பெருமான் தமிழுலகிலே தோன்றியதன் பயன் இனிது முற்றியது. அவரது ஆன்மா இராம சரித-வடிவமாய் உருவெடுத்து விளங்கியது. தமது இராம காதையினைத் தமிழ் மக்கட்குப் பொதுவுடைமையாகவும் குலதனமாகவும் அரங்கேற்றி ஈந்தருளுவதொன்றே அவராற் செயற்பாலதாய் எஞ்சி நின்றது.

புண்ணிய தினமொன்று தெரிந்துகொள்ளப்பட்டது. கம்பரது இதிஹாஸத்தில் நாயக நாயகிகளுக்கு விவாஹ மஹோத்ஸவம் நிகழ்ந்ததாகக் கூறும் பங்குனி யுத்தரத்தின் மறுதினமாகிய பங்குனியத்த நாளே மிக்க பொருத்தமுடைய தினமாகக் கொள்ளப்பட்டது. ஸ்ரீ ரங்கநாதரது

திருச்சந்நிதியே* அரங்கேற்றுதற்குரிய இடமாயமைந்தது. சடையப்ப வள்ளலாரால் அழைக்கப்பெற்ற தமிழ்நாட்டுப் புலவர் சிகாமணிகளும் பிரபு சிகாமணிகளும் அரங்கேற்று மண்டபத்தில் வரன் முறையே வீற்றிருந்தனர். பக்தர் குழாங்கள், பள்ளத்துப் பாயும் நன்னீர் போல, நானு திசைகளினின்றும் வந்து சூழ்ந்தனர். பண்டிதர்களும் பாமரர்களும் இடம்பெறாது மிடைந்து நெருங்கினர். மண்டபத்தின் அகத்தும் புறத்தும் புடைசுற்றித் தமிழ் மக்கள் திரண்டு கூடினர். அதன் நடுவே சிறிது உயரிய பீடத்தின்மீது கம்பர் பெருமான் எழுந்தருளியிருந்தனர். †அவரது திருமுகத்தே பேரறிவும் ஆழ்ந்த சாந்தியும் பெருங்கவித்வ சக்தியும் நர்த்தனம் புரிகின்றன; அவரது நயனங்கள் ஆழ்ந்தகன்று உள்ளமனைத்தையும் ஒருங்கு தோற்றி விளங்குகின்றன; நோக்குவோரை யெல்லாம் வசிகரித் தமைகின்றன; அன்பு அலையெறிந்து படர்கின்றது. அறிவு கூர்த்து விளங்குவதனை யொப்ப அவரது நாசியும் நீண்டு கூர்ந்திருக்கின்றது. அவரது உதடுகள் இளநகையரும்பி விகசிக்கின்றன. அகன்ற மார்பும் திரண்ட புயமும் பேரழகு பயக்கின்றன. அவரது தடக்கைகள் தாள்களைத் தொட்டு நீண்டிருக்கின்றன. அவரது திருமேனி முழுவதும் தெய்வ

---

*திருவரங்கத்திலே கம்பர் தமது காவியத்தை அரங்கேற்றியதாகக் கூறுவர். அரங்கநாதன் சந்நிதி வெண்ணெய்நல்லூரி லுள்ள தென்று கொள்ளும்படி 'எண்ணிய சகாத்தம்' என்னுஞ் செய்யுள் அமைந்திருக்கின்றது.

†திருவரங்கத்திலுள்ள கற்சிலையொன்று கம்பர் பெருமானது திருவுருவமாகச் சிலாற் கருதப்படுகின்றது. இங்ஙனம் கருதுதற்கு ஆதாரம் யாதுமில்லை. இக் கற்சிலை கம்பர் திருவுருவன்றென்பதே உறுதி.

வொளி பரந்து சுடர்கின்றது. இப்புலவர் பெருமானை யடுத்து யாரினுமினிய பேரன்பினராகிய சடையப்ப வள்ளல் வீற்றிருக்கின்றனர்; கருணையின் நிலயம்; கவிஞரின் புகலிடம். தமிழ் நாட்டுப் புலவர்கள் பலகாலமாக ஈட்டி வந்த புண்ணியம் அனைத்தும் ஒருங்கு திரண்டு வடிவெடுத்து வந்தாற்போன்று அமைந்திருக்கின்றனர். அகக்கண் கொண்டு நுனித்து நோக்குவோமாயின் வேறு சில அற்புதக் காட்சிகளும் காணலாகும். தெய்வ கணங்கள் களிசிறந்து குலவுகின்றன. பாரததேவி எல்லையற்ற சாந்தியுடனும் எல்லையற்ற ஆனந்தத்துடனும் விளங்குகின்றாள். அவளது திருமுக மண்டலத்தைச் சுற்றியிலகும் சோபாவலயத்தினூடே உளத்து நின்றும் பொங்கிவரும் களிப்பின் சிற்றருவி மெல்லென வீழ்ந்து ஒழுகுகின்றது. இத் தேவியை யடுத்துத் தமிழன்னை அழகு சிறந்து ஒளிருகின்றாள். அவளது திருமுடிமீது நூதனமா யமைக்கப்பெற்றதும் விலையற்ற இரத்தினங்களால் இழைக்கப் பெற்றதுமான கிரீடமொன்று குளிர்ந்த ஒளிபரப்பி நிலவுகின்றது; அவளது செந்தாமரைக் கண்கள் கருணைநில வெறித்து மிளிர்கின்றன; திருமேனி முழுதும் அன்பின் செழுமையால் பொடித்துத் துடிக்கின்றது. ரிஷிகணங்கள் ஒருபால் குழுமியிருந்தனர். அவருள்ளே வான்மீகியும் வள்ளுவரும் தலைமை தோன்ற விளங்குகின்றனர். ஆதிகவியாகிய மஹரிஷியின் சிரத்தின் மீது சடைமாமகுடம் இலங்குகின்றது. இராம கதாம்ருதத்தை உலகிற்கருளிய அவரது தெய்வத் திருவதாரத்தின் கீழ் முதுமையாற் பஞ்செனவெளுத்துத் தோன்றும் தாடி நீண்டு அடர்ந்து பொலிகின்றது. அவரது ஆழ்ந்து தெளிந்த கண்களிலே கவித்வ வொளி இன்னும் நிரம்பிப் பிரகாசிக்கின்றது. மழித்த சிரமுடையவராய்ச் சாந்த மூர்த்தியாய்

அமர்ந்திருக்கின்றனர் வள்ளுவப் பெருந்தகையார். பேரறிவும் பொருளும் அவர் கண்களிற் கனிந்து இலங்குகின்றன. தமிழ்த் தாய் வயிற்றில் தம்மோடு உடன்பிறந்த கவிஞர் பெருந்தகையார் மீது அவரது அளவுகடந்த காதல் படர்ந்து செல்லுகின்றது. அவரது துரிசிலாத் திருமனத்தே இன்று சிறிது கர்வம் இடம் பெற்றிருப்பதுபோலத் தோன்றுகின்றது.

அரங்கநாதன் சந்நிதியில் இத்துணை விசேஷமான திருக்கூட்டம் என்றும் இருந்ததே இல்லையெனலாம். யாண்டும் கண்கள்! யாண்டும் செவிகள்! அனைவரும் ஏகாக்கிர சித்தராய்க் கம்பர் பெருமானை நோக்கிய வண்ணமா யிருக்கின்றனர். 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்கும் — சிந்தையேயாக' என்ற அருமைத் திருவாக்கு எத்துணை யுண்மையுடையதென இன்று ஒருவாறு அறியலாகும். குறித்த அமையம் நெருங்கிற்று. உலக மனைத்தையும் ஆக்கியளித்துத் துடைத்தலையே தனது திருவிளையாட்டாகவுடைய பரம்பொருளை நெஞ்சுற வழுத்திக் கம்பர் தமது இதிஹாஸ கீதத்தைப் பாடி அரங்கேற்றலாயினர். உள்ளத்தை யுருக்கி யுருவஞ் செய்ததுபோலத் தோன்றிய கம்பர் பெருமானது கம்பீரத் தொனி மண்டபமுழுவதும் பரந்து சென்றது; கேட்டோர் இதயத்தினின்றும் எதிரொலி யெழுந்தது. இராமாயணமாகிய அமுத கீதத்தில் ஆண்டிருந்தோர் மனங்கள் லயித்து மயங்கின.

'வயிரியர் மதுர கீதம் மங்கைய ரமுத கீதம்
செயிரறு மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்
பயிர்கிளை வேயின் கீதம் என்றிவை பருகி விண்ணோர்
உயிருடை யுடம்பு மெல்லாம் ஓவிய மொப்ப நின்றார்'

என்று கூறியதனேடொப்ப அனைவரும் சித்திரப்பதுமைகள் போன்று செய்கையற்றிருந்தனர். இராமசரிதம் படிப்படியாய் வளர்ந்தது. செஞ்சொற் கவியின்பம் இனைத்தென்பது இன்றுதான் உணரலாயிற்று. சிலபொழுது அவையகத்தார் வியப்புமேலிட்டு மதிமருண்டு கிடப்பர்; சிலபொழுது உவகை மேலிட்டு ஆநந்தவாரியில் திளைத்திருப்பர்; சில சமயம் சோகத்தால் உளங்கலங்கி நைந்து வருந்துவர்; சில சமயம் பக்தியால் உளங்கனிந்து உருகுவர். ஒருகால் நகைச் சுவை மீதூர்ந்து மெய்குலுங்கச் சிரிப்பர்; ஒருகால் பயங்கொண்டு வெருண்டு நடுநடுங்குவர்; ஒரு சமயம் வீரம் மேலிட்டுப் புயம்பூரித்து எழுந்தெழுவர். 'அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்?'

பூலோகத்திலும் வானுலகத்திலும், நாட்டிலும் காட்டிலும், நதிக்கரையிலும் கடற்கரையிலும், யுத்த களத்திலும் ஆகாய மார்க்கத்திலும், நிகழ்ந்த சம்பவங்களெல்லாம் திருவரங்கர் சந்நிதியிலே நடித்துக் காட்டப்பெற்றன. அயோத்தி நீங்கிய அரசர் பெருந்தகை புஷ்பக விமானமேறிச் சீதா லக்ஷ்மண சமேதராய் வானர பரிவாரங்களுடன் திரும்பத் தனது நகரமடைந்து,

'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை'

வாழ்வித்தருளினன். கைகேசியின் சூழ்வினையால் தடையெய்தி சீதாபஹரண மென்னும் சோக-சம்பவத்தால் இடையீடுபட்ட பட்டாபிஷேக மஹோத்ஸவம் விமரிசையாய் நிகழ்கின்றது.

'அரியணை யனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி பற்ற

**விரிகடலுலக மேத்தும் வெண்ணைமன் சடையன் வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'**

என்ற சிறப்பு மிக்க செய்யுளைக் கம்பர் பெருமான் பாடினர். பாடினஅளவில் அவைக்கணிருந்தோர் அனைவரும் சடையப்ப வள்ளலாரை நோக்கி அவரது பெருமையையே உள்ளத் தெண்ணினர்கள். வள்ளலாரோ தலைவணங்கி யிருந்தனர்.

இராமாவதாரம் அரங்கேற்றி முடிந்தது. கவிதை வெள்ளத்தின் பெருஞ் சுழியில் அகப்பட்டுத் தம்மையிழந்து நிற்பாரை யன்றிப் பிறரைக் காணுதல் அரிதாயிற்று. திடீரென ஓர் அரவம் உண்டாயிற்று. வான்மீகி-மஹரிஷி புனைந்த சடை முடிதுளக்கிப் புலவரேற்றினை முகம் பார்த்து மெல்ல நடப்பாராயினர். அவரைத் தொடர்ந்து வள்ளுவப் பெருந் தகை, தமிழ் வேதம் எழுதியருளிய அருமைத் திருக்கரத் தில் பொன்கொண்டிழைத்து மணியைக்கொடு புதைந்த மகுடமொன்று தாங்கிப் பின் சென்றனர். இருவரும் தம்மை யடுத்து வந்ததும் கம்பர் பெருமான் எழுந்து வணங்க லுற்றனர். அப்பொழுது தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியுடைய வான்மீகி மஹரிஷி தந்தையினுங் களிகூரத் தழுவி நின்று, 'நீரே கவிச்சக்கரவர்த்தி; எனது அன்பிற்குரிய ஞான புத்திரரை யின்றுதான் காணப் பெற்றேன்' என்று கூறி, வள்ளுவப் பெருந்தகையார் தாங்கிச் சென்ற மகுடத்தை வாங்கிக் கம்பர் பெருமானது முடிமீது புனைந்தருளினர். தமிழ்ப் புலமைத் தெய்வமாகிய வள்ளுவர் அன்பூற்றெடுக்குந் திருநயனங் களாற் கனிந்துநோக்கி முடி புனைந்த சிரமீது தமது திருக் கைகளை வைத்து ஆசிர்வதித்தருளினர்.

பங்குனி அத்த நன்னாள்! இந்தச் சுபதினத்தன்று இற்றைக்குச் சுமார் ஆயிரம் வருஷங்கட்கு முன்னர் மேல்

விவரித்தவாறு கம்பர்பெருமானது இராமாவதாரம் அரங்கேறுதலாயிற்று. இந்நாள்தான் தமிழ்த்தெய்வம் மணிமாமகுடம் புனைந்துகொண்ட பெருநாள். பாரததேவி பன்னெடுங்காலமாக முயன்றுவந்த தவம் பயனிரம்பி முற்றியதும் இந்நாளே. இத்தகைய விசேஷதினத்தைத் தமிழ் மக்களாகிய நாமனைவரும் இன்றுபோல் என்றும் போற்றிப் பாராட்டுவோமாக!

என்னிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நன்னிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி யத்த நாவில்
கன்னிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே.



# ௬. கம்ப ராமாயணச் சிறப்பு

[ராவ் ஸாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி. பி. வி. ஷி.]

கம்ப ராமாயணத்தின் பெருமையை அறியாத தமிழர் இல்லை. அதனில் அடங்கியுள்ள மிக்க அருமையும் இனிமையும் வாய்ந்த கருத்துக்களை அறிந்து ஆனந்திக்கும் பயன் பெறவே, தமிழரல்லாதாரும் தமிழைக் கற்கவேண்டுமென்பது மிகையாகாது.

இவ்வாறு அந்நிய பாஷையில் உள்ள இலக்கியங்கள் தம் பாஷையிலே மொழிபெயர்க்கப்பட்டவற்றைப் படித்த மட்டிலே திருப்தியடையாமல், அவ்விலக்கியங்களை நேராக அறிந்து ஆனந்திக்க விரும்பி, அவைகள் எழுதப்பட்டுள்ள மூலமொழிகளைக் கற்றுத் தேறிய அருங்கலை விநோதர் அநேகர் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உளர். நாகரிகமடைந்த மற்றைத் தேசங்களிலும் அத்தகையார் சிலர் இருக்கின்றனர்.

இவ்வுலகத்துச் செல்வ மெல்லாவற்றையும் ஒருங்கே அடைந்து சகல போகங்களையும் ஆசைதீர அநுபவிக்கும் ராச பதவியே யன்றி, எல்லா வகையிலும் அந்த இராச பதவியிலும் எற்றமான இந்திர பதவியுமே கம்ப ராமாயணம் போலக் கற்றோர்க்கு மனக் களிப்பைத் தரமாட்டாது என்னும் கருத்துப் புலப்பட,

இம்பர்நாட்டிற் செல்வமெல்லாம்
எய்திஅரசாண் டிருந்தாலும்
உம்பர்நாட்டிற் கற்பகக்கா
ஓங்கும்நீழல் இருந்தாலும்

கம்ப ராமாயணச் சிறப்பு

செம்பொன்மேரு அனையபுயத்
　　திறல்சேர்இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போற்
　　கற்றோர்க்கிதயம் களியாதே

என்று கற்றோர் ஒருவர் மனம் கனிந்து கூறியது உபசார மன்று, உண்மையேயாம் எனக் கற்றோரனைவரும் ஒப்புக் கொள்வர்.

யாதாயினு மொரு காவியத்திலே பற்றுடையோர், அக் காவியத்தின் சிறப்பைப் புலப்படுத்த, அதை வேறு காவியங்க ளோடு ஒப்பிடாமல், கம்ப ராமாயணத்தோடு ஒப்பிட்டு அது கம்ப ராமாயணத்தினும் சிறந்ததெனப் பாராட்டி முடிவு கட்டுவது வழக்கம். ஒரு பெண்ணின் அழகைச் சிறப்பாகக் கூறுவோன், அப் பெண் இலக்குமியினும் சிறந்த அழகுடையா ளென்பதனால், இலக்குமியே அழகிற் சிறந்தா ளென்னும் உண்மை பாதிக்கப்படாதது போல, கம்ப ராமாயணம் அதனோ டொப்பிடப்பட்டு உயர்த்திக் கூறப்பட்ட எல்லாக் காவியங்களினும் உயர்ந்ததென்பது உண்மையில் மறுக்கப் படவில்லை யென்பது சொல்லவேண்டியதில்லை.

மலையாள ஜில்லாவில் (Malabar) கோவில்களில் கம்ப ராமாயணத்தைப் பிரசங்கித்தற்கு, மானியங்கள் ஏற்பட்டுத் திருவிழாக் காலங்களில் அயல் மொழியினரான மலையாளிகள் கம்ப ராமாயணப் பாட்டுப் பாடிப் பொருள் கூறும் திருப்பணி செய்துவருகின்றார்கள். இந்தப் பெருமை வேறெந்தத் தமிழ் நூலுக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வழக்கம், மலையாளத்தில், சில நூற்றாண்டுகளுக்கு முன் தமிழே தாய் மொழியாயிருந்த காலத்தில் ஏற்பட்டு, வெகு பிரபலமாய் இருந்திருக்கவேண்டு மென்பதும், அந்தப் பிரபலத்தின் ஆற்றல், அவ்வழக்கத்தைத் தமிழராயிருந்த மலையாளி

களின் தாய்மொழி மலையாளமாக மாறிய பின்னும், நிலைத் திருக்கச் செய்திருக்கின்றது என்பதும் ஊகித்தற்பாலனவா யுள்ளன.

தெலுங்கு ஜில்லாக்களில் கம்ப ராமாயணத்திலுள்ள சுந்தர காண்டம் தெலுங்கெழுத்தில் எழுதப்பட்டுப் பாரா யணம் செய்யப்பட்டு வருவதும் கம்ப ராமாயணச் சிறப்பை வலியுறுத்தும்.

கம்ப ராமாயணப் பிரசங்கமே தங்கள் ஆயுள் முயற்சியா கக் கொண்டு கம்ப ராமாயணப் பிரசங்கிகளென்ற பெயர் வகித்த புலவர் பெருமக்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் பலர் பல இடங்களில் இருந்துவந்திருப்பது, வேறெந்த நூலுக்கு மில்லாத தனிச்சிறப்புடையது கம்ப ராமாயண மென்பதை இறுதியாகவும் உறுதியாகவும் நிலைநாட்டு கின்றது.

உலகத்துப் பல பிரபல மொழிகளில் உள்ள மிகச் சிறந்த காவியங்களுள் ஒன்று வான்மீக இராமாயண மென்பர். வான்மீகி முனிவரது 'உரையின்படி நான் தமிழ்ப்பாவினுல் உணர்த்திய' தென்று கம்பர் வான்மீகத்தின் வழிநூலாக இயற்றிய ராமாயணம், அழகிலே யன்றி* அளவிலும் வான்மீகத்தினும் சிறந்து விளங்குகின்றதென்று இரண்டு நூல்களையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்தோர் சிலர் கூறு வர். இதனை வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லார் எல்லாரும் ஒப்புக்கொள்ளினும், வான்மீகத் துக்கு இழுக்கு அன்று; பெருமையேயாம்; தந்தையினும்

---

* வான்மீகம் உச,000 சுலோகங்களை யுடையது; கம்ப ராமா யணம் கஉ,000 விருத்தங்கள் உள்ளது; ஆயினும் சுலோகங்களின் குறுமையையும் விருத்தங்களின் நெடுமையையும் நோக்கக் கம்ப ராமாயணமே அளவிற் பெரிதாம்.

மகன் சிறப்புடையனுதல், தந்தையின் சிறப்பைக் குறை யாது, (அத்தகைய புத்திரனுக்குப் பிதாவாம் பெருமையால்) அதிகப்படுத்துவதா மாதலால். தந்தை யின்றேல், மகன் இன்மை போல, வான்மீக மின்றேல், கம்ப ராமாயணமு மின் ரும். தக்கவன் ஒருவன் அடைந்த பிதிரார்ச்சிதச் சொத்து, அவனுற் கழித்தற்பாலன கழிக்கப்பட்டும், சீர்திருத்தற் குரியன சீர்திருத்தப்பெற்றும், நூதனமாகச் சேர்க்கத் தக் கன சேர்ப்புண்டும், எல்லா வகைகளிலும் மேன்மையுற்று விளங்குவது போல, முதல் நூலாகிய வான்மீகத்தினும் வழி நூலாகிய கம்ப ராமாயணம் சிறந்து விளங்குகின்றது. இவ் வாறு கூட்டவும் குறைக்கவும் மாற்றவும் பெற்ற பகுதி களிலே, பல, நூலினிமையை அதிகப் படுத்துவனவாம்; வேறு பல, வான்மீகர் கால நாகரிகத்துக்கு இசைய அவர் கூறியவைகள் கம்பர் கால நாகரிகத்துக்கு ஏலாதனவானதனுல் பிந்திய காலத்திற்குப் பொருத்தமாக மாற்றப்பெற்றன வாம்.

தமிழிலே கம்ப ராமாயணம் போல, ஆங்கிலத்திலே, சிறந்த பாரகாவியமாகிய சுவர்க்க நீக்கத்தை (Paradise Lost) இயற்றிய மிலிட்டனுரது சரித்திரத்தை எழுதிய ஓர் ஆங்கில ஆசிரியர், உலக இலக்கியக் காட்சிச் சாலை ஒன்று நியமித்து அச் சாலையில் ஒவ்வொரு மொழியாளரும் தத்தம் மொழியில் இரண்டு இலக்கியப் புத்தகங்களே கொண்டுவந்து வைக் கலாமென நிபந்தனை ஏற்படுத்தினுல், ஆங்கிலேயர்கள், அங்கே, ஷேக்ஸ்பியரது புத்தகத்தையும் மிலிட்டனுரது புத் தகத்தையுமே காட்சிப் பொருளாக வைப்பரென்று கூறியுள் ளார். அப்படிப்பட்ட காட்சிச்சாலையில், தமிழ் மக்கள் கொண்டு வைத்தற்குரிய இரண்டு நூல்கள் குறளும், கம்ப ராமாயணமுமே யென்பது தெளிவாம்.......................

கங்கையாறு தோன்றிய பின் வேறுள்ள ஆறெல்லாம் மேம்பாடிழந்தது போல, சீதை தோன்றிய பின் ஏனை அழகிய மாதரனைவரும் அழகிழந்தார்கள்* என்று கம்பர் கூறியவாறு, கம்ப ராமாயணம் பாடப்பெற்றபின் மற்றெல்லா நூல்களும் சிறப்பற்றனவாயின என்னலாம்.

அவர், 'ஒவ்வோருறுப்புச் சிறந்த அழகுடையதாகப் பெற்றவர் மற்றைய வனப்பு மிக்க மாதர்; அவயவம் அனைத்தும் உத்தம அழகு ஒருங்கு நிரம்பப் பெற்றவள் சீதையொருத்தியே' † என்றவாறு ஏனைய நூல்களெல்லாவற்றிலும் சில சில பகுதிகளே சிறந்தனவாயிருக்க, எல்லாப் பகுதிகளும் ஏற்றமுடையனவாக வுள்ளது கம்ப ராமாயணமொன்றே யென்று கூறலும் ஆம்.

எந்தக் காவியம், தன்னைப் படித்து இன்புறப் பெறுராய்த் தான் தோன்றுமுன் இறந்த காவிய ரசிகரைக் காட்டிலும் தன்னை அறிந்து ஆனந்திப்பாராய்த் தான் தோன்றிய பின் வாழப் பெற்ற காவிய ரசிகர் பாக்கியசாலிகள் என்னும்படி எல்லாவகை வனப்புக்களும் மலிந்து சிறந்து விளங்குகின்றதோ, அந்தக் காவியம் கம்ப ராமாயணமேயாம்.

கம்பர், ஏகம்பவாண முதலியாரது புகழை வருணிக்குமிடத்து, 'வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாளெல்லை'

---

* கணங்குழையாள் எழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறொத்தார் வேறற்றார்.
—கார்முகப் படலம்.

† உழைகுலாம் நயனத் தார்மாட் டொன்றொன்றே
[விரும்பற் கொத்தது
அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்ற வல்லார்!
—கோலங்காண் படலம்.

என்றபடி, அவர் பாடிய ராமாயணச் சிறப்புக்கு எல்லை, அதனை எடுத்துரைப்போர் சொல்வன்மையின் எல்லையே. அச்சிறப்பை உரைப்பவர் எத்துணைச் சொல்லாற்றலுடையாராயினும் அவர் அதனை உரைக்க உரைக்க, அது வளரா நின்று, அவர் 'உரை குறுக நிமிர்'*என்ற இயல்புடையதாய் ஒருவராலும் முற்றக் கூற முடியாததாயுள்ளது. உலகத்துப் பெருமலைகளெல்லாவற்றினும் பெரிதாய், உயர்ந்ததாய்ப், பொன் மயமாயொளிமிகுந்ததென்று சிறப்பித்துக் கூறப்பட்ட மேரு மலை போலப் பெருங் காவியங்களெல்லாவற்றிலும் பெரிதாய், ரசமயமாய், இனிமை மிகுந்தது கம்ப ராமாயணமேயாம். அதன் சிறப்பு இவ்வாறிருத்தலானன்றே, 'கம்பர் கவிச் சக்கரவர்த்தி' என்றும், 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்றும் ஆன்றோர் நன்காராய்ந்து துணிந்து கூறினர்.

அவர், வானர சேனைப் பெருமையை விளக்கக் கூறிய 'கடல்கண் டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்?'† என்றதையே நாமும் அவர் நூலின் பெருமையைப் புலப்படுத்தக் கூறுதலன்றி வேறு கூறுதற்கு யாதும் இல்லை.

கடவுள் சிருட்டியாகிய பிரபஞ்சம் போலக் கம்பர் சிருட்டியாகிய கம்ப ராமாயணமும் நுணுகி நுணுகி நோக்குந்தோறும் நோக்குந்தோறும் நூதன நூதனமான வனப்புக்களும் உண்மைகளும் புல்ப்படுத்தி மேலும் மேலும் விளங்குவதாய் வியப்பும் நயப்பும் விளைப்பதாயுள்ளது.

---

*கம்ப ராமாயணம், பால காண்டம், குலமுறை கிளத்துப் படலம், ௬.

†தானைகாண் படலம், ௯௬

## கம்பர் பெருமை

தமிழ்க் கவிஞருள்ளே அவரவர் காலத்தவரால் கவிச் சக்கரவர்த்தியெனப் பட்டப்பெயர் பெற்றூர், கம்பர் போலச் செயங்கொண்டாரும் ஒட்டக்கூத்தருமாவர். ஆயின் காலக் குறிப்பு அல்லது வேறு குறிப்பின்றி வெறுமனே கவிச் சக்கரவர்த்தி யென்ருல், அது கம்பரையே குறிப்பதும், 'கல்வியிற் பெரியவன்' என்பது கம்பர் காலந்தொட்டுக் கம்பருக்கே வழங்கி வருவதும், அவர் எல்லாக் காலத்து முள்ள கவிஞர் கற்ருர் என்ற இருதிறத்தாருள்ளும் மிக்கா ரென்பதை நிலைநாட்டும். தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர், 'தெய்வப் புலமைக் கம்ப நாட்டாழ்வார்'‡ என, வேறெப் புலவர்க்கு மில்லாத தெய்வப் புலமைச் சிறப்புள்ள இருவர்களுள்ளே கம்பர் ஒருவரா யிருப்பதும் அவருடைய பெருமையை வலியுறுத்தும்.

வீர சிரேட்டரும், தனிக சிரேட்டரும், இராச சிரேட்ட ரும், ஏனைய சிரேட்டருமான எல்லாச் சிரேட்டர்களும், 'கவி சிரேட்டராகிய கம்பராகப் பிறந்தோ மில்லையே!' யென்று பொருமைப்பட்டு ஏங்கி வருந்தும் மகிமை வாய்ந்தவர் கம்பர்.



‡தனியன்கள். உ

# ௬. கம்பர் கவிப் பெருமை*

[ வித்துவான் சு. கிருஷ்ணஸ்வாமி முதலியார் ]

தமிழ்ப் புலவர்களிற் சிறந்தவரான கம்பர், ராம சரித்திரத்தைச் சில வடமொழி நூல்களைப் பின்பற்றி அழியாததொரு காவியமாகச் செய்திருக்கிறார். அவரது முதனூல்களோடு மிகவும் ஜாக்கிரதையாக ஒத்திட்டுப் பார்த்தாலும், நடையிலும் கட்டுரையிலும் கம்பரது காவியம் அவைகளோடு சிறிதும் ஒத்திருக்கவில்லை. அந்த வடநூல்களின் உயர்ந்த நேர்ப்போக்காகக் கதை சொல்லும் முறை கம்பர் காவியத்தில் தோற்றுவிடினும், அதில் தோன்றும் உயர்ந்த காவிய கதியின் நிறைந்த சித்திரப் போக்கு அம் முதனூல்களிலும் கிடையாதென்றே சொல்லிவிடலாம்.

மேற்றிசைப் புலவராகிய ஹோமரது காவியத்தில் தோன்றுவது போல், கம்பர் காவியத்திலும், காவியத்தை எடுத்து முடிக்கும் — படிப்பவர் மனதினுழத்தில் பதியத் தகுந்த — அழுத்தமான நடையினேற்றுமையும், கவியின் உயர்ந்த லக்ஷ்யத்தைக் கௌரவமாகத் தெரிவிக்கக்கூடிய சொற் பொழிவுகளும் இருக்கின்றன. காவியத்தில் பிரசித்தமாக வெளிப்படுத்தப்பெற்றிருக்கிற எண்ணங்களும், சொற்களாலெழுதப் பெற்றிருக்கும் சித்திர உருவங்களும், அந்தச் சித்திர ரூபங்களின் உண்மைத் தன்மைகளும் ஸரளமாகவும்

---

* ௧௮௬௪-ஆம் வருஷத்தில் பதிப்பித்த இராமாயண பால காண்டத்திலுள்ள ஆங்கில முகவுரையின் மொழிபெயர்ப்பு.

நிறைவாகவும் இருக்கின்றன. உணர்ச்சிகளின் உண்மைத் தத்துவங்களைக் கம்பரது கவிப்போக்கு நன்ருய் எடுத்துக் காட்டுகின்றது. அவரது கவிப்போக்கின் வன்மையினுல் படிப்பவர்களது — கேட்பவர்களது — இதயங்கள் தாமதமாகவும் வேகமாகவும் துடிக்கக் காணலாம். மனேசலனம் தாழ்ந்தும் உயர்ந்தும் செல்லக் காணலாம்; எண்ணத்தைக் காட்டிலும் உயர்வாகக் கம்பரது கற்பனைகள் செல்லுகின்றன; அவரது காவியத்தில் கொடுக்கப்பட்டிருக்கிற — துக்க சம்பவங்களைக் குறிக்கிற நடையின் வேகமானது கம்பீரத்துடன் மனதின் ஆழத்தில் பதிந்துவிடுகிறது. அவரது களிப்பைக் குறிக்கும் வர்ணனைகளும் அச்சத்தைக் குறிக்கும் வர்ணனைகளும் உயிரினூடே புகுந்து மனதுக்கு வியப்பையும் கண்கட்கு இடுக்கத்தையும் தந்து நிற்கின்றன. அவரது நடைப்போக்கின் ஆகர்ஷணசக்தியாலும், அவர் எடுத்துக்காட்டும் நிகழ்ச்சிகளின் ஒழுங்கு முறையாலும் சில சமயங்களில் அவரது புலமையின் ஒளியானது இணையில்லாததாக ஒளிருகின்றது. இயற்கைத் தத்துவம், கடவுட்டன்மை, தர்ம மார்க்கம் இவற்றைச் சொல்லு மிடங்களில், கம்பரது பத்திப் பெருக்கமானது ஹோமரை மீறிச் சென்று மில்டனேடு தோள் தட்டி நிற்கின்றது.

சொல்லும் கதைகளின் போக்கானது எளிமையிற் பெருமையும், எளிய சொல் வீழ்ச்சியும், சுத்தமும் கொண்டு பொலிகின்றது. அவர் எடுத்துக் காட்டும் உபாக்கியானங்களிலெல்லாம் நிறைந்த உபதேசங்களும் ஆறுதல்களும் ஜெருஸலத்தில் டாஸோ சொல்லியிருக்குமவற்றைக் காட்டிலும் அதிகப்பட்டிருக்கின்றன. அவரது சம்பாஷணைப் பாகங்களிற் காட்டப்பெற்றிருக்கும் விரிவுரைகளும் இயற்கை வருணனை விஸ்தரிப்புக்களும் அவரது உயர்ந்த கவிசாதுரியத்தால் பிர

காசித்து, வர்ஜிலேவிடப் பூர்ண பக்குவத்தைக் காட்டி நிற்கின்றன. நாயகர் நாயகி, உப நாயகர் உப நாயகி முதலான பாத்திரங்களின் குணங்களை எடுத்துச் சொல்லும் பாகங்கள், ஷேக்ஸ்பியர் நீங்கிய மற்றைப் புலவர்களது கவனத்தைக் காட்டிலும் அதிகமான கவனத்துடன் உண்மைக் குறிப்பாக எடுத்துக் காட்டப்பெற்றிருக்கின்றன. நகர சம்பந்தமான வர்ணனைகளில் கம்பர், 'ஒதீஸிய'த்தில் ஹோமர் சொல்லியிருப்பதைக் காட்டிலும் அழகாகவும் சுலப நடையாகவும் சொல்லிப் போகிருர்; அன்றியும், வீரத்தைக் குறித்து நிற்கும் இடங்களில் ஹோமரைத் தூரத்தில் நிறுத்திச் செல்கிருர். கம்பரது காவிய நடையிலாவது எடுத்துக்காட்டுகளிலாவது பாரஸீகப் புலவராகிய பேர்டுஸீயின் காவிய கதி முதலியவற்றை எடுத்துக் காட்டுவது சிறிதும் தகுதியாகாது. எல்லா விஷயங்களையும் நன்கு அறிந்து தேர்ச்சிபெற்ற கற்பனு சக்தியுடைய எந்தப் புலவராலும், எந்த விவேகியாலும், எந்த ஞானியாலும் செல்ல முடியாத பிரதேசங்களிற் சென்று, ஆராய முடியாதவற்றை யாராய்ந்து, எடுக்க முடியாத புதையல்களை யெடுத்து உலகோர்க்குத் தந்து, பலவேறுபட்ட பக்குவமுடைய எல்லாருடைய இருதயங்களையும் விரிவுறச் செய்து, அவர்க்கு முன்னேற்றத்தை யளிப்பதற்காகச் சிறந்ததொரு வரத்துடன் தோன்றினவராகவே கம்பர் காணப்படுகிருர்.

---

# ரு. கம்பர்

[ ஏ. ஸி. பால் நாடார், பி. ஏ., பி. எல். ]

பூர்விகக் கிரேக்கருக்கு ஹோமர் எப்படியோ, ரோமருக்கு வர்ஜில் எப்படியோ, இத்தாலியருக்கு டாண்டி எப்படியோ, ஆங்கிலேயருக்கு ஷேக்ஸ்பியரும் மில்டனும் எப்படியோ, வடமொழிக்கு வால்மீகி எப்படியோ, அப்படியே தமிழருக்கும் தமிழுக்கும் கம்பர் பெருமை கொடுக்கிறார். இவர்களெல்லாரும் பெருங்காப்பியங்கள் செய்த நூலாசிரியர்கள். பெருங்காப்பியங்கள் அந்தந்தக் காலங்கள் தேசங்களுக்குரிய பழக்க வழக்கங்களையும், கருத்துக்கள் நோக்கங்களையும், அந்தந்தப் பாஷை நடைக்கு இயன்றனவாய் இயற்றப்பட்டவைகளாயினும், எக்காலத்தவருக்கும், எத்தேசத்தவருக்கும், எப்பாஷைக்காரருக்கும், எச்சாதியாருக்கும், இன்பத்தையும் அறிவையும் கொடுக்கின்றன. அந்தந்தத் தேசங்களின் சரித்திர ஸாராம்சத்தையும் பெருமைகளையும் சிறுமைகளையும் அப் பெருங்காப்பியங்களில் பார்க்கிறோம்.

பண்டைக் காலத் தமிழருக்கு வீரமும் காதலுமே பொருள் : ஏனைய வெல்லாம் பொருளாகக் கருதப்படவில்லை. அவர்கள் வீரம் மகா பிரசித்தி பெற்றது. கிரேக்க தேசத்து ஸ்பார்ட்டன் பட்டணத்தார் வீரமே அதற்கிணையானது. உதாரணமாக,

'கெடுக சிந்தை : கடிதிவள் துணிவே :
மூதின் மகளி ராதல் தகுமே.

மேனுள் உற்ற செருவிற் ' கிவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே :
நெருநல் உற்ற செருவிற் ' கிவள் கொழுநன்
பெரு நிரை விலங்கி ஆண்டுப் பட்டனனே :
இன்றும்,
செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து டிஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,
ஒரு மகன் அல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே!' (புற - உ௭௯)

என்ற செய்யுளைப் பாருங்கள்.

ஆனுல் ஸ்பார்ட்டன் பட்டணத்தார் வீரம் ஒன்றையே போற்றினர்; நம் முன்னேரோ, வீரத்தையும் காதலையும் ஒருங்கே வளர்த்தனர். சமணமும் பௌத்தமும் பெரும் பாலும் ஒழுக்கத்தையே போதித்தன: 'ஒழுக்கம் உயிரி னும் ஓம்பப்படும்' என்ருர்கள். வீரமும் காதலும் ஒழுக் கத்தால் மேன்மைப்பட்டன.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்ரேர்க்கு
அறன் ஒன்ரே ஆன்ற ஒழுக்கு

என்பது தமிழரின் இலக்காகிவிட்டது.

எனினும், ஆடல் பாடல்களில் தேர்ச்சியான கணிகை மாதர்களின் பெருக்காலும், திரைகடலோடித் தேடிய பொருள்களின் மிகுதியாலும், பல்லவரின் ஆட்சியாலும், களப்பிரரின் குழப்பத்தாலும், வீரமும் காதலும் ஒழுக்கமும் குன்றிப்போயின.

ஐரோப்பாக் கண்டத்தில் கிறிஸ்துவுக்குப் பின் பதினேந் தாம், பதினறும் நூற்ருண்டுகளில் கிரேக்கு லத்தீன் பாஷை

களிலுள்ள நூற்களைப் படித்ததின் காரணமாக ஒரு பெரிய கிளர்ச்சியுண்டானது. அதன் பயனாகச் சகல கலைகளும் புத்துயிர் அடைந்தன. அதே காலத்தில் மார்க்க - சீர்திருத்தங்கள் உண்டாயின. ஐரோப்பியருக்கு லத்தீன் பொதுப் பாஷையானது. அதில் நூல்கள் எழுதினார்கள். அது கல்விமான்களின் பாஷையாயிற்று. பாமர ஜனங்களின் நன்மைக்காக, கிரேக்கு, லத்தீன் பாஷைகளிலுள்ள சிறந்த நூல்களைத் தேசீய மொழிகளில் மொழிபெயர்த்தார்கள்; அதன் பயனாகத் தேசீய மொழிகள் புத்துயிர் பெற்று எண்ணிறந்த நூல்களைக் கொட்டின. அக்காலங்களில்தான் இங்கிலாந்து, பிரான்சு, ஸ்பெயின், உலாந்தா முதலிய நாடுகளில் தேசீய இயக்கங்கள் உண்டாகி தேசீய அரசாட்சி பலப்பட்டது. சுயாதீன சுதந்தரங்களும் மார்க்க சீர்திருத்தங்களும் கலந்து பிரளயம் போன்ற ஓர் கிளர்ச்சி யுண்டானது. அது போன்ற ஓர் கிளர்ச்சி (கி. பி.) ஏழாவது நூற்றாண்டு முதல் பத்தாவது நூற்றாண்டுவரை நமது தமிழ் நாட்டில் உண்டானது. கங்கை நதி தீரத்திலுண்டான வடமொழி நூற்களை மிகுந்த ஆர்வத்துடன் முதலில் காஞ்சிபுரத்திலும், பின்னால் காவேரி, வைகை, தாமிரவருணி தீரங்களிலும் தமிழர் கற்றார்கள்; ஆராய்ச்சி செய்தார்கள்; வடமொழியில் நூற்கள் செய்தார்கள்; வடமொழி நூற்களைத் தமிழில் மொழிபெயர்த்தார்கள். தமிழ் நூற்களை வடமொழியில் செய்தார்கள்.

அதே காலத்தில் வடவேங்கட முதல் தென்குமரி வரை ஒரு சமயக் கிளர்ச்சியும் உண்டானது. ஓர் பரபரப்பும் பரவசமும் தமிழரை ஆட்டினது. வீரமும் காதலுமே பொருளெனக் கருதிய தமிழர், ஒரே பரம்பொருளைக் கண்டார்கள். ‘இருள் கடிந்தெழுகின்ற ஞாயிறே’ போல் அது தமிழரின் இதயத்தே உதயமானது. அது ஒன்றே அவர்கள் உள்ளத்

தைக் குடிகொண்டது. வடமொழிக் கல்வியும் புதிய பரம் பொருள் ஞான உணர்ச்சியும் கலந்த ஓர் பிரளயத்தால் ஏறக் குறைய ஆயிரம் வருஷங்களாகத் தமிழ் நாட்டை ஆண்டு கொண்டிருந்த சமணமும் பௌத்தமும் ஓட்டம்பிடித்தன. அச் சமயத்தினர் எழுதிய நூற்கள் தலைகாட்ட வழியில்லை. பழைய நூற்கள் மறந்தும் மறைந்தும் போயின. விண்ணும், மண்ணும், பாதலமும் ஒன்றாயின. மானிடர் தேவரானார், தேவர் மானிடரானார். நாகர் இருவருக்கும் மத்திபமானார். எங்கே கேட்டாலும் வேத கோஷங்கள், தேவாரப் பண்கள், திருவாய்மொழிகள். வடநாட்டுத் தேவதைகள் தென்னாட்டில் குடிபுகுந்தன. தென்னாட்டுப் பேர்கள் வடநாட்டு நாமங்க ளாயின. பேய்களும் பூதங்களும் ஆடின இடங்களில் நடராஜர் நடனம் கண்டார்கள். மருத நில ஊர்கள் புண்ணியஸ்தலங்க ளாயின. ஸ்தலங்கள் தோறும் புராணங்கள். குகைகள் எல்லாம் சித்திரங்கள்; அழகிய சிலைகள் உண்டாயின. வட மொழி தேவ பாஷையானது. தமிழ் மொழி சிவபெருமான் தந்ததாயிற்று. ஒழுக்கத்தால் உயர்ந்த அந்தணர் உச்ச நிலையை அடைந்தார்கள். பிறப்பால் வந்த அந்தணரும் அப்பதவியை நாடினர். சதுர்வேத மங்கலங்களும், மானியங்களும், வேள் விச் சாலைகளும், வேள்விக் குடிகளும் ஏற்பட்டன. பிறப் பால் சாதி பேதம் ஏற்பட்டது. நிலமாக்களை நான்கு சாதிக ளாகப் பிரிக்க முயன்றனர். எல்லா வகுப்பிலும் போர் வீரரும் அரசரும் இருந்ததால் க்ஷத்திரியரென்று எவ்வகுப் பினரைச் சொல்வது என்றுதான் தெரியவில்லை. பெருங்குடி வேளாண் மரபினரைச் சூத்திரரென்று சொல்ல நாவெழ வில்லை. ஆகாரத்தால், தொழிலால், தீண்டாமை தமிழ் நாட் டில் நுழைந்தது. யார் பரம்பொருளென்ற சமயக் கட்சி யுண் டானது. அரனே பரம்பொருளென்றார் ஒரு சாரார்; அரியே

பரம்பொருளென்றார் இன்னொரு சாரார். தமிழரசர்கள் பல்லவ அடிமைத்தனத்தினின்று சுயாதீனமானார்கள். களப்பிரர் போன இடம் தெரியாமல் போயினர். சேர, சோழ, பாண்டியர்களுக்குக் 'கேள்வி அந்தணாளர்' பூர்வோத்திரம் ஏற்படுத்தினார்கள். சோழர் சூரியகுலமும், பாண்டியர் சோமகுலமும், சேரர் அக்கினி குலமுமானார்கள். மதுரையைச் சோமசுந்தரக் கடவுளே ஆண்டாரென்று புராணங்கள் உண்டாயின. சோழர்களுக்கு அயோத்தி சக்கரவர்த்திகள் மூதாதைகளானார்கள். மனுதர்ம சாஸ்திரம் தமிழரசர் சட்டமானது; இன்னும் சோழ சாம்ராஜ்யம் வரவில்லை. புகாரும் உறந்தையும் உறங்கிவிட்டன. தஞ்சையும், கங்கைகொண்டான் சோழபுரமும் இன்னும் சோழ ராஜதானிக ளாகவில்லை. அப்படிப்பட்ட காலத்திலே கம்பர் தோன்றினார்.

ஒன்பதாவது நூற்றாண்டில் திருவழுந்தூரில் உவச்சர் குலத்தில் கம்பர் பிறந்தார். குழந்தைப் பிராயமுதல் திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியார் வீட்டில் வளர்ந்தார். 'தேசங்கலந்த மறைவாணர், செஞ்சொல் அறிவாளர் என்றிம் முதலோர்' கூட்டத்திலிருந்தார். இருமொழியுங் கற்று அவைகளிலுள்ள கலைகளை ஆராய்ந்தார். அவைகளைக் காட்டிலும் உலக இயல்பையும் மனுஷத்தன்மையையுங் கிரகித்தார். தமிழர் நாகரிகத்திற்கும் நவீன உணர்ச்சிக்கும் ராமகாதை எவ்வளவு பொருத்தமென்று கண்டார்.

உழக்கு மறை நாலினும் உயர்ந்து உலகம் ஓதும்
வழக்கினும் மதிக்கவியினும் மரபின் நாடி
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... சுடர்க் கடவுள் தந்த தமிழ்

'அளப்பருஞ் சலதி' அதை ஆழங்கண்டார்.

'தென் சொற்கடந்தான் வடசொற்கலைக் கெல்லை தேர்ந் தான்' என்று கதாநாயகனுக்கு ஏற்றிச் சொல்வது கம்பருக்கே பொருந்தும்.

வாங்கரும் பாதம் நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்.

அதை வடமொழி கற்றோர் மட்டும் அனுபவித்தார்கள்.

பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி

தமிழருக்கும் தெரிவிக்கக் கம்பர் ஆசைபற்றி அறையலுற்றார்.

வீரம், காதல், ஒழுக்கம், இவைகளில் சிறந்தோனை ராமனே கம்பரின் பரம்பொருள்.

'விண்ணினில், நிலத்தினில், விகற்ப உலகில்,பேர்
எண்ணினில், இருக்கினில், இருக்கும்என யாரும்
உள்நினை கருத்தினை உறப்பெறுவென் ஆல் என்
கண்ணினில்' எனக்கொடு களிப்புறு மனத்தான்.

ஆயினும்,

அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன் என்(று)
உரைக்கும் அறிவி லோர்க்குப்
பரகதி சென்றடை வரிய

என்பது அவர் அபிப்பிராயம்.

அறியார் சமணர்; அயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார்

என்றார் திருமழிசை ஆழ்வார்.

கம்பர் சரயு நதியின் போக்கை வர்ணிக்கும் இடத்தில்,

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையில் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே,

என்றும்,

*ராமன் மிதிலையில் உலாவும்போது பார்த்த மாதர்,*

தோள்கண்டார் தோளே கண்டார்; தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்; தடக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை யொத்தார்,

என்றுஞ் சொல்லுகிறார்.

*கோதாவரியைக் கூறுமிடத்து அதனை நல்லிசைப் புலவர் பாவிற்கு ஒப்பிட்டார்:*

புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து, புலத்திற் றாகி,
அவியகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறிய ளாவிச்,
சவியுறத் தெளிந்து, தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்.

*ராமனுடைய அம்புகளுக்கு உபமானமாக,*

நல்லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித் தமர்ந்த நாமச்
சொல்லெனச் செய்யுள் கொண்ட தொடையெனத் தொடையை [நீக்கி
எல்லையில் செல்வந் தீரா இசையெனப், பழுதி லாத
பல்லலங் காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ!

என்றார்.

*கம்பர் குறித்த பாவின் தன்மைக ளனைத்தும் அவர் நூலகத்தே உள்ளன.*

* * *

## ௬. கம்பரும் தமிழரும்

[ டி. கே. சிதம்பரநாத முதலியார், பி.ஏ., பி.எல். ]

ஒரு விஷயத்தில் ஆங்கிலேயரைப் போல் யோகக்காரர் உலகத்திலேயே கிடையாது. அவர்களுடைய பாஷை உலகம் எங்குமே பரவி இருக்கிறது. சாமானியமாக எல்லாத் தேசத்தாரும் அனுபவிக்கும்படி ஆங்கிலத்தில் ஏதோ ஒரு புஸ்தகம் எழுதிவிட்டால், அதை வாசிக்கிறவர்களை லக்ஷம் லக்ஷமாகக் கணக்குச் செய்யவேண்டியிருக்கிறது. வாசிக்கிறவர்கள் உலகத்தில் முக்குமுடைகள் எங்கெல்லாமோ இருந்துகொண்டு புஸ்தகத்தைப்பற்றி அப்படியும் இப்படியுமாகப் பேசி அனுபவிப்பார்கள். ஒரு புஸ்தகம் எத்தனை எத்தனை பேரை எல்லாமோ ஒன்றுசேர்த்து ஒருமனப் பாங்குக்குக் கொண்டுவந்துவிடுகிறது. இது ஆங்கில பாஷைக்கும் அதற்குரிய ஆங்கிலேயருக்கும் பெரிய யோகம்.

ஆனால் யோகத்தில் யோகம் என்னவென்றால், முந்நூறு வருஷத்துக்கு முன் எழுதிய புஸ்தகத்தை, அதுவும் தலைசிறந்த கவியை, ஆங்கிலேயர் எல்லாரும் நெடுகிலும் தக்க முறையில் பாராட்டி அனுபவித்து வருகிறார்கள் என்பதுதான். ஷேக்ஸ்பியர் என்றால் தெரியாத ஆங்கிலேயன் கிடையாது. கல்வி பயின்றவனோ ஷேக்ஸ்பியரைத் தன் வாழ்க்கையோடு ஒட்டிய அங்கமாக எண்ணுகிறான். கவிஞனை இப்படி ஏகோபித்துப் பாராட்டி வருவதால், நூலுக்குச் சரியான சக்தி ஏற்படுகிறது, பயிலுகிறவர்களுக்கும் அறிவும் உணர்ச்சியும் எவ்வளவோ உயர்ந்துவிடுகிறது.

ஷேக்ஸ்பியர் ஆங்கிலத்தில் தலைசிறந்த கவி என்பது பற்றி விவாதிக்க மனுஷர்களே கிடையாது. ஷேக்ஸ்பியர் தான் உலகத்திலே சிறந்த கவி என்று ஆங்கிலேயர் சொல்லத் தயங்குவதில்லை. அயர்லாந்து, ஸ்காட்லாந்து தேசத்தார் தங்களுக்கு விரோதமான இங்கிலாந்து தேசத்தான் ஷேக்ஸ்பியர் என்று ஒதுக்குவதில்லை. சமய வேற்றுமைபற்றி விரோதிப்பதும் இல்லை. ஏதோ விதிவசத்தால், ஷேக்ஸ்பியர் தமிழ் நாட்டில் தமிழ்க் கவிஞனுகப் பிறக்க நேர்ந்திருந்தால் அவர் பாடு பெரும்பாடாகத்தான் போயிருக்கும். ஷேக்ஸ்பியர் தப்பி விட்டார்.

கம்பராலோ தப்ப முடியவில்லை. தமிழ் நாட்டில் வந்து பிறக்க நேர்ந்துவிட்டது.

## உ

ஆயிர வருஷமாகவே தமிழர்கள் அவர்மேல் இல்லாத பழியெல்லாம் சுமத்தப் பார்த்திருக்கிறார்கள். கட்டின கதைகளுக்குக் கணக்கில்லை. கம்பருக்கு அம்பிகாபதி என்று மகனொருவன் இருந்தானும். ராஜா மகளை இச்சித்து உண்ட வீட்டுக்கு ரண்டகம் செய்தானும். கம்பரோ ராஜா மகனைக் கொன்றாராம். சோ அரசனோடு சரிசமானமாக இருந்து கொண்டு சகல மரியாதைகளுக்கும் ஆளானவராய் இருந்தாராம். இருக்கும்போது அவருக்கு உயர்ந்த ஜாதிப் பிறப்பு ஒன்றும் கிடையாது என்று ருஜு ஆய்விட்டதாகக் கதை கட்டி விட்டார்கள் அந்தக் காலத்துப் புலவர்கள். பிற்காலத்துப் புலவர்களோ, ஜாதியை மாற்றவேண்டி, பழைய சாற்றுகவி ஒன்றிலுள்ள பாடத்தையே மாற்றத் தலைப்பட்டார்கள்.

இராமாயணத்தைக் கம்பர் திருவெண்ணெய் நல்லூரில் வைத்து அரங்கேற்றியபோது ஒரு புலவர் சம்பிரதாயத்தை

ஒட்டிச் சாற்றுகவிகள் மூன்று * எழுதி வாசித்தார். கம்பர் செல்வந்தராகப் பலருக்கும் கொடை கொடுத்து, வள்ளல்

---

* கம்ப ராமாயணம் பி. நா. சிதம்பர முதலியார் பதிப்பு-பக்கம், 2.

1. நாரணன் விளையாட் டெல்லாம்
   நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தான்
   அறிந்தவான் மீகி என்பான்
சீரணி சோழ நாட்டுத்
   திருவழுந் தூருள் வாழ்வோன்
காரணிக் கோடையான் கம்பன்
   தமிழினாற் கவிசெய் தானே.

2. அம்பிலே சிலையை நாட்டி
   அமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரான் என்னத் தானும்
   தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல்
   கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே
   நாருக்கின் றமுதம் ஈந்தான்.

3. எண்ணிய சகாத்தம் எண்ணூற்
   றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர்
   தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை
   பங்குனி அத்த நாளிற்
கண்ணிய அரங்கர் முன்னே
   கவியரங் கேற்றி னானே.

என்று சொல்லும்படியாகத் திருவழுந்தூரில் வாழ்ந்து வந்தார் என்று புலவர் பாடியிருக்கிறார்.

சீரணி சோழ நாட்டுந் திருவழுந் தூரில் வாழ்வோன்
காரணி கொடையான் கம்பன் தமிழினுற் கவிசெய் தானே.

முதல் அடியில் 'திருவழுந் தூரில் வாழ்வோன்' என்பது, இயல்பான வார்த்தை. அதைத் 'திருவழுந் தூரு வச்சன்' என்று பிற்காலத்தில் மாற்றியிருக்கிறார்கள். இரண்டாவது சாற்றுகவியிலும் வள்ளல் என்று மறுபடியும் புகழ்ச்சியாகப் பாடியிருக்கிறார். திருவழுந்தூருக்குப் பக்கத்தில் இருந்திருக்கக்கூடிய ஒரு கிராம வட்டம் கம்பருக்குரியதாய் அவர் பெயராலே 'கம்ப நாடு' என்று வழங்கப்பட்டிருக்கவேண்டும். இதைக் குறித்து, 'கம்ப நாடுடைய வள்ளல்' என்று சொல்லுவதும் இயல்புதானே! இப்படி எல்லாம் அந்தஸ்துள்ள ஒருவரைப் புகழ்ந்து பாட வந்தவர், 'உவச்சன்' என்று சொல்லியிருப்பாரா? சொல்ல அவசியந்தான் உண்டா?

ஆரோ ஒருவர், வேண்டுமென்றோ அல்லது எழுத்தை வாசிப்பதில் ஏற்பட்ட கஷ்டத்தினாலோ பாடத்தை மாற்றி விட்டார். இந்தப் பிழைபட்ட பாடத்தை இறுகப் பிடித்துக் கொண்டு ஜாதி நிர்ணய ஆராய்ச்சியில் புகுந்துவிட்டார்கள் புலவர்கள். சேரனுடைய சமஸ்தான வித்துவான்களோ பூர்வ காலத்தில் பாடத்தை வேறுவிதமாகத் 'திருவழுந்தூரம்பட்டன்' என்று கூசாமல் மாற்றியிருப்பார்கள். ஜாதியைக் குலைக்க அவர்களுக்கு அவ்வளவு ஆத்திரம். கம்பர் எந்த ஜாதியாய் இருந்தாலும் நமக்குக் கவலையில்லை. உலகத்தில் தலைசிறந்த ஜாதியைச் சேர்ந்தவர் அவர் என்பது உண்மை. அதாவது கவிச்சக்கரவர்த்தி-ஜாதி. வால்மீகி, காளிதாஸர், டாகூர்,

ஷேக்ஸ்பியர், ஹோமர் இவர்களுடைய ஜாதிதான் கம்பர் ஜாதி. இதற்கு மேலான ஜாதி இருக்க முடியாது.

ரு

தற்காலத்து ஆசிரியர்கள், ஜாதியின் தாரதம்மியத்தைப் பாராட்டுவதினுல் அவ்வளவாகக் கம்பருக்குக் குறைவு ஏற்பட்டுவிடாது என்று கருதி, வேருெரு வகையில் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிருர்கள். மேலே குறித்த சாற்றுகவிகளில், முதல்ச் செய்யுளில் கம்பரை இன்னுர் என்று சொல்லிவிட்டு, இரண்டாவது செய்யுளில் கவியின் சிறப்பைக் 'கவிச் சக்கரவர்த்தி' 'நாருக் கமுதம் ஈந்தான்' என்று சொல்லுகிருர். கடைசிச் செய்யுளான மூன்ருவது செய்யுளில் அந்தக் காலத்து வழக்கின்படியும் தற்காலத்து வழக்கின்படியுமே அரங்கேற்றிய நாள், நக்ஷத்திரம், இடம், சபையோர் எல்லாவற்றையும் பற்றி ஒரு குறிப்புக் கொடுத்தார்.

**என்னிய சகாத்தம் எண்ணூற்றேழில்**

அரங்கேற்றினுன் என்ருர்.

எண்ணூற்றேழாவது சகாப்த வருஷம் என்ருல் கி. பி. அஅரு, என்ருகும். அதாவது கூ-வது நூற்ருண்டு கம்பர் காலம் என்று ஏற்படும். இப்படி கூ-வது நூற்ருண்டு என்று, செய்யுளை வைத்துக்கொண்டு சொல்லுவதில் யாதொரு கஷ்டமும் இல்லை. ஆனுலும் சிலர் ஏதோ கஷ்டம் அடைந்து, 'எண்ணூற்றேழு' என்பதற்கு 'எண்ணுகிற நூற்றேழு' என்று பொருள் செய்து, அதற்கு ஆயிரத்தைச் சேர்த்து, ஆயிரத்து நூற்றேழு என்பதாகக் கணக்கிட்டுக் கம்பரைப் பனிரண்டாவது நூற்ருண்டுக்குக் கொண்டுவந்திருக்கிருர்கள்.* கம்பர்

---

*(1) 'எண்ணும் நூற்றேழு' என்று உரை சொல்லுகிறதையே வியக்கிருேம். அதோடு, 'ஆயிரத்தையும் சேர்த்துக்

காலே இன்னும் இறுகப் பிடித்து இழுத்து இருபதாவது நூற்றூண்டுக்கே கொண்டுவந்து விட்டாலும் நமக்குக் கவலே இல்லே.

மேலே குறித்த ஜாதி நிர்ணயம் கால நிர்ணயம் எல்லாம் ஒன்றை மாத்திரம் தெளிவாகக் காட்டுகிறது. தமிழர்களாகிய நம்மவர் ஜாதி வெறிக்கும் மத வெறிக்கும் உள்ளாகி, யாரையும், ஆயிரம் வருஷத்துக்கு முன்னிருந்த மகா கவியையும், தூற்றுவதற்கு முன் வருவார்கள்; அதற்காக ஏட்டைக் கெடுப்பார்கள்; பாட்டைக் கெடுப்பார்கள்.

மேலே சொன்ன விஷயங்களேப்பற்றிப் பேசாமலே விட்டுவிடலாம்; அவைகள் நூலின் பெருமையைப் பாதிப்பன அல்லதான். ஆனுல் சென்ற சில வருஷங்களாகச் சிலர் கம்பரிடத்திலும் அவர் செய்த ராமாயணத்திலும் வேண்டாத ஒரு பகைமையை உண்டாக்கிக்கொண்டு போன போன இடங்களில் எல்லாம் பிரசாரம் செய்யத் தலேப்பட்டிருக்கிறுர்கள்; எழுதவும் ஆரம்பித்திருக்கிறுர்கள். இந்தப் பிரசாரத்தின் ஆர்ப்பாட்டத்தினுல் எதிர்த்துச் சொல்லுவதற்கு மனமில்லாமல் அறிவாளிகளும் பொறுப்பாளிகளுங் கூட அங்கீகரித்த முறையில் ஒத்துப் பாடிவிடுகிறுர்கள். சாமானிய ஜனங்கள் என்ன செய்யக்கூடும்? 'ரொம்பப் படித்தவர்களே இப்படி எல்லாம் சொல்லுகிறுர்கள். உண்மைதான்

---

கொள்ளுங்கள்' என்று சொல்லுகிற தைரியத்தைப் பார்த்தால் என்ன சொல்லுவதென்று தெரியவில்லே.

(2) வீர சோழிய உரை ஆசிரியர் காலம் பதினேராம் நூற்றூண்டாம். அவரும் தமக்குப் பின், நூறு வருஷம் கழித்துவரும், பனிரண்டாம் நூற்றூண்டிலுள்ள கம்பரைப் பற்றிக் குறிப்பிடுகிறுர் என்றுல் அது இலக்கிய ஆரூடந்தான். இவைகளேப் பற்றி வாசகர்கள் தொந்தரவு படுத்திக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேம்.

போலிருக்கிறது !' என்று நம்ப ஆரம்பித்துவிடுகிறார்கள். இப்பேர்ப்பட்ட விளையாட்டும் வினயமும் நாளடைவில் சரித்திர உண்மைகளாக ஆகிவிடுகின்றன. இந்த வேண்டாத விபத்துக்கள் விளையாமல், பரவாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் மேலே சொன்ன விஷயங்களைப்பற்றிக் குறிப்பிட நேர்ந்தது. அதுவும் மனமில்லாமல்த் தான் குறிப்பிட நேர்ந்தது. மேல் நாட்டில் இத்தகைய பிரசாரங்கள் நடந்தால் கேலிக்கிடமாகும்; இங்கோ மதிப்புக்கிடமாய்விடுகிறது. இது நம்முடைய ஜாதக பலன்; வேறென்ன ?

ரு

பொதுவாகப் பண்டைக் காலத்துப் புலவர்கள் சம்பந்தமாக ஜாதி நிர்ணயம் கால நிர்ணயம் செய்வது கஷ்டந்தான். வள்ளுவரைப் பற்றியும் மாணிக்கவாசகரைப் பற்றியும், காரைக்கால் அம்மையாரைப் பற்றியும், பொய்கை ஆழ்வாரைப் பற்றியும் சரித்திரக் குறிப்பு ஒன்றுமே கிடையாது. கிடையாமல்ப் போனால் என்ன? அவர்கள் எழுதிய பாடல்களை விடவா வேறொரு புறம்பான குறிப்பு அவர்கள் இதயத்தோடு நம் இதயத்தை ஒட்டச் செய்துவிடும்!

கம்பர் சம்பந்தமாகச் சரித்திரக் குறிப்புக்கள் (மேலே குறித்த சாற்றுகவிகள் தவிர) அவ்வளவாக ஒன்றுமே இல்லை. மற்றக் கதைகள் கவிகள் எல்லாம் நேரான வார்த்தைகள் என்று எடுத்துக்கொள்ளக்கூடியவை அல்ல. ஏதோ அவ்வக்காலத்தில் உள்ள புலவர்களும் மற்ற ஜனங்களும் கம்பருடைய பாடல்களின் பெருமையையும் நயத்தையும் பற்றி வின்னியாச முறையில் சொன்னவைகளே ஒழிய வேறில்லை. அவ்வை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர், கம்பர் எல்லாரும் ஒரே காலத்தில் இருந்ததாகக் கற்பித்துக்கொண்டு

பிள்ளைகளை 'டிரில்' வாங்குகிற மாதிரி, 'உட்காருங்கள், எழுந்திருங்கள் — ஒன்று, இரண்டு, மூன்று!' என்றெல்லாம் 'டிரில்' வாங்கிக் கதை கட்டியிருக்கிறார்கள். இவைகளை வைத்துக்கொண்டு பிற்காலத்துப் புலவர்கள் ஆராய்ச்சியில் புகுந்து விடுவார்கள் என்று தெரிந்திருந்தால் முன்னோர்கள் அவ்வாறு கதை கட்டி விளையாடி இருக்கமாட்டார்கள்.

இப்படி எல்லாம் ஊன்றிப் பார்ப்பதில் கம்பரைப்பற்றிச் சரித்திரம் இல்லாமல் போய்விடுகிறதே என்று வருத்தப்பட வேண்டியதில்லை. உண்மையில் மகாகவியின் சரித்திரம் அவர் பாடல்களில்தான் கிடக்கிறது. கம்பர் வெகு விரிவாகவே தன்னைப்பற்றிய சரித்திரம் எழுதி வைத்திருக்கிறார் என்று சொல்லலாம். கம்ப ராமாயணத்தில் அவருடைய செய்யுளான ஒவ்வொன்றும் அவருடைய உண்மையான அநுபவத்தை — இதய பாவத்தை — பளிங்கில் வைத்துக் காட்டின மாதிரி காட்டுகிறது. இதைவிடச் சிறந்த சரித்திரக் குறிப்பு ஒரு கவிக்கு இருக்க முடியாது.

ஆகவே நாம் அறிய முயலவேண்டியதெல்லாம் கம்பருடைய இதயம். இந்தப் பூமியையும் பேரண்டத்தையுமே தன்னுள்ளே வட்டமிட்டு ஓடச்செய்து அநுபவிக்கக்கூடிய அவ்வளவு விசாலமானது அந்த இதயம்.

**வேதங்கள் அறைகின்ற உலகெங்கும் விரிந்தனஉன்**
**பாதங்கள் இவை,என்னில் படிவங்கள் எப்படியோ!**

என்று கடவுளின் முடிவில்லாத வியாபகத்தை அளந்து காட்டுகிறார். தமிழர்களுக்கு ஆயுள் முழுதுமே ஊடாடித் திரிந்து களிப்பதற்கு ஓர் உண்மை உலகம் அதாவது பாவ உலகம் கிடைத்திருக்கிறது. ஷேக்ஸ்பியரின் இதய உலகத்தை ஆங்கில மக்கள் ஏகோபித்து அநுபவிக்கிற மாதிரி கம்பரது

இதய உலகத்தைத் தமிழர் ஏகோபித்து அனுபவிப்பார்கள் என்பது ஏற்பட்டுவிட்டால் நமக்குக் கிடைக்கக்கூடிய உல்லாச உயர்தர வாழ்க்கை மாதிரி வேறு யாருக்கும் கிட்டாது என்று சொல்லலாம். இதற்கு ஒப்பாகச் சொல்லவேண்டும் என்றால், கிரேக்க பாஷை வழக்கில் இருந்தபோது ஹோமர் பாடிய கவியைப் பாடிப் பாடி கிரேக்கர்கள் — மேதாவிகள் முதல் சாமானியப் பெண்டுகள் வரை — அனுபவித்து வந்ததைத்தான் சொல்லலாம். இது மிகையல்ல. கம்பர் அவ்வளவு எளிமையோடும், ஆடவர் பெண்டிர் எல்லாருடைய இதயத்தைத் தட்டும்படியான அவ்வளவு தெளிவான பாவத்தோடும் கவிகளைப் பாடியிருக்கிறார். அவருக்கும் நமக்கும் ஆயிரம் வருஷம் இடையே கிடப்பதால் அங்கொரு வார்த்தை இங்கொரு வார்த்தை நம்முடைய வழக்கோடு ஒட்டாமல் இருக்கலாம். மற்றப்படி பாஷை வீட்டு பாஷையே, கம்பராமாயணத்தை ஆர அமர பாவத்தை அழுத்திப் பாடினால் யாருமே அறிந்தனுபவிக்க முடியும் என்பது நம்மில் பலரும் கண்கூடாகக் கண்டதே.

ரு

ஆனாலும் கம்ப ராமாயணப் புஸ்தகத்தை இப்போது இருக்கிறபடி வாசித்து அனுபவிப்பது கஷ்டமான காரியமே. சந்திகளையும் சீரையும் சேர்த்து அச்சிட்டிருப்பதால் வாசிப்பது யாருக்குமே கஷ்டம்; சாமானிய மக்களுக்கு முடியவே முடியாது. இந்தக் கஷ்டத்தை ஒருவாறு இனி நிவர்த்தி செய்துகொள்ளலாம். பழைய காலத்துப் பிடிவாதக்காரரான சந்திப்புலவர்கள் காலம் போய்விட்டது. 'பற்றேய்த்துவா — காற்றுட்டுத்தா — காறள்ளாடுது — பாறருவாருண்டோ

— முட்டைத்துவிட்டது'* என்று எழுதியும் பேசியும் வந்த காலம் போய்விட்டது. சந்தி பிரித்துச் சீர்பிரித்துச் செய்யுள்களை எழுதலாம், அது தமிழுக்குத் துரோகம் அல்ல என்று துணிந்து சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். ஆகவே ஒரு கஷ்டம் எளிதில் நீங்கிவிடும்.

சா

தமிழ் நூல்களில் பாடம் எத்தனையோ விதத்தில் சிதைந்து கிடக்கிறது. ஆனால் கம்ப ராமாயணத்தில் பாடம் சிதைந்து கிடக்கிற மாதிரி வேறொன்றிலும் பார்க்க முடியாது. சில பாடல்களில் சீருக்குச் சீர் பாடபேதம். பாடபேதங்கள் குறித்த எந்தப் பதிப்பைப் பார்த்தாலும் அது தெரியவரும். கண்ணை எடுத்துக் காதில் வைத்திருக்கும்; அப்படியே காதை எடுத்து மூக்கில் வைத்திருக்கும்; கையைப் பிய்த்து இடுப்பிலும், காலை வாங்கித் தோளிலும் தொங்கவிட்டிருக்கும். 'ஆப்பரேஷன்' செய்து உருவம் ஆக்குவது என்றால் எளிதா? 'போதும் போதும், கம்ப ராமாயணம் போதும்!' என்று தோன்றிவிடும். பழைய ஏடுகள் ஏதோ ஒரு வகையில் வழி காட்டலாமே ஒழியப் பூரணமாகத் திருப்தி கொடுத்தபாடாக இல்லை. யூகித்து யூகித்து ரொம்பவும் சிரமப்பட்டுத்தான் பாடங்களைக் கண்டுபிடித்துத் திருத்தவேண்டியிருக்கிறது.

பாடபேதங்கள், அதாவது பார்த்து எழுதுவதில் ஏற்பட்ட பிழைகள், இருந்துவிட்டுப் போகட்டும். கம்பர் பாடாத கவிகளை ஏட்டில் புகுத்தியிருக்கிறார்களே! அதுவும் எத்தனை எத்தனையோ! இதனால் பாத்திரங்களும் கட்டங்களும் உருக் குலைந்து போயிருக்கிறதைப் பார்த்தால் ஏதோ கம்பர் மேல்

* 'பல் தேய்த்து வா — கால் துட்டுத் தா — கால் தள்ளாடுது — பால் தருவார் உண்டோ — முள் தைத்துவிட்டது.'

துவேஷம் கொண்டே புலவர்கள் நெடுகிலும் ஆயிர வருஷமாகச் செய்துவந்த அக்கிரமம் என்று சொல்லத் தோன்றும். இந்தச் செருகு கவிகளையும் சேர்த்து ஒரு கட்டத்தை வாசித்துப் பார்த்தால் கம்பரானவர் கவி அல்லர் என்று மாத்திரம் தோன்றாது, பைத்திய ஆஸ்பத்திரியில் வைத்துப் பந்தோபஸ்துச் செய்யவேண்டிய ஆசாமி என்றே தோன்றும். செருகு கவிகளை எல்லாம் அறவே களைந்துவிட்டுப் படித்தாலொழியக் கம்பரை உணர்ந்தோம் என்று சொல்ல முடியாது. இந்த விஷயத்தில் பேரம் பண்ணிக்கொண்டிருந்தால் கம்பருக்குத் துரோகம் செய்கிறோம் என்றுதான் ஏற்படும். கம்பருடைய இதய பாவங்களையும், ஓசை தாளம் ஆகிய இசைப் பண்புகளையும், கை லாகவங்களையும், பார்த்தனுபவித்த சாதனம் உடையவர்கள் செருகு கவிகளைக் கண்டுபிடித்து ஒதுக்கிவிடலாம். இது ஒருவாறு சித்திஆவதுதான். கம்பரது கவி ஒவ்வொன்றிலும் இருக்கிறது அவர் முத்திரை. ஷேக்ஸ்பியர் கவிகளில் முத்திரை யிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். மகா கவிகள் எல்லாரிடத்திலுமே முத்திரை என்று சொல்லக்கூடிய தனித்த ஒரு அனுபவ தத்துவம் உண்டு. கம்பருடைய தனித்த அனுபவ தத்துவம் ஒரு செய்யுளில் இல்லை என்றால் அந்தச் செய்யுளைத் தள்ளி விடுவதற்கு யோசிக்கவே கூடாது. வைர உட்டாணிகளால் செய்த பதக்கத்தின் இடையே காசுக்கு நாலாக வாங்குகிற கண்ணாடித் தரிப்பு இருந்துவிட்டால் அவைகளை உடனே பிடுங்கி எறியவேண்டியதுதானே முறை. அல்லாத பக்ஷம் குறுணி வந்து கோட்டையைக் கெடுத்தது என்றபடி பதக்கமே தரிப்புப் பதக்கமாய்ப் போய்விடும். செருகு கவிகளோடு கலந்திருப்பதால் கம்ப ராமாயணமும் இந்தச் சிக்கலான நிலையில்தான் இருக்கிறது.

௭

பாடபேதம் போகட்டும். செருகு கவி போகட்டும். அவைகளைத் திருத்திக்கொள்ளலாம், களைந்து கொள்ளலாம். ஆனால், கம்பர் கவிகளில் எத்தனையோ விடுபட்டிருக்கின்றன. நம்மால் அவைகளை நிரப்ப முடியாது. அதற்குத் தெய்விக சக்தியல்லவா வேண்டும்! போனது போனதாகத்தான் முடிந்துவிட்டது. இந்த நஷ்டத்தை இவ்வளவு என்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது. இந்த நஷ்டத்துக்கும், முத்தொள்ளாயிரம் இரண்டாயிரத் தெழுநூற்றில் இரண்டாயிரத் தறுநூறு தொலைந்துபோனதற்கும் தமிழ் மக்கள் என்றென்றும் துக்கம் கொண்டாட வேண்டியதுதான். ஒருகால் முத்தொள்ளாயிர ஏடு கிடைத்தாலும் கிடைக்கலாம்; குக்கிராமம் எதிலாவது இறப்பில் செருகிக் கிடைக்கலாம்: வெளியாகியும் விடலாம். கம்ப ராமாயணம் சம்பந்தமாக அவ்வித நம்பிக்கை வைக்க இடமே இல்லை.

இப்படியாகப் பாடல்கள் தொலைந்துபோன போதிலும் மிஞ்சியுள்ள பாடல்கள் ஆயிரக்கணக்காகவே இருப்பதாலும், கதை தெரிந்த கதையாய் இருப்பதாலும், ஒவ்வொரு செய்யுளுமே பட்டம் பட்டமாகத் திருப்பிப் பார்த்து அனுபவித்துக்கொண்டே இருக்கக்கூடிய தனி இசைத் தமிழ்க் கவியாக (மேல் நாட்டார் 'லிரிக்' என்பார்கள்) இருப்பதாலும் கவிகளெல்லாம் ஆயுள் நாள் முழுதுமே பாடியும் பாடக் கேட்டும் அனுபவிக்கக் கூடியவைகள்தான். இவை தமிழருக்கு நிலையான செல்வந்தான்.

கம்ப ராமாயணம் பற்றிய விபரந் தெரியாத சிலர், அது வால்மீக ராமாயணத்தின் மொழிபெயர்ப்புத்தானே என்று அடிக்கடி கேள்வி கேட்கப் பார்க்கலாம். வால்மீக ராமாயணத்

தின் மொழிபெயர்ப்பையும் கம்ப ராமாயணத்தையும் ஒத்துப் பார்ப்பதற்கு எந்தக் கட்டத்தையும் எடுத்துக்கொள்ளலாம். ஒப்பிட்டுப் பார்த்தால் ஏதோ ராமர், சீதை, இலக்குவன், பரதன், ராவணன் என்றெல்லாம் இரண்டிலும் வரும். குணதிசயங்களை நோக்குவோமானல் இனம் கண்டுபிடிக்க முடியாதபடி அவ்வளவு வித்தியாசமாயிருக்கும். வால்மீகியின் சீதை வேறு, கம்பரது சீதை வேறு. அப்படியேதான் ராமர், பரதன் எல்லாருமே. கட்டங்களை வகுக்கும்போது, கம்பர், தம் இஷ்டம்போல், பாத்திரங்களின் பாவங்களுக்குத் தெளிவும் வேகமும் உண்டாகும்படி மாற்றி வகுத்துக்கொள்ளுகிறார். முக்கியமாகப் பாத்திரங்கள் பேசும்போது தமிழுக்குரிய தனியான தொனியோடு பேசுவார்கள். அவர்களுடைய பேச்சுக்கென்றே, பாவத்துக்கென்றே, சொல்லையும், தாளத்தையும், செய்யுள் உறுப்புக்களையும் தமிழ்த் தெய்வம் ஆதியில் வகுத்ததோ என்று சொல்லத் தோன்றும். உதாரணமாக, அனுமாருடைய உயர்ந்த உருவத்தையும் சக்தியையும் பார்த்துச் சீதை வியக்கிறாள்: 'என்னைக் கண்டுபிடிக்க நீ ஒருவன் இல்லாது போயிருந்தால் இராமருடைய அருளை யார் அறியப்போகிறார்கள்? அவருக்குப் புகழ் ஏது? கிடையாதுதான்: ஆனல் உன்னுடைய பராக்கிரமம் முழுதும் தெரிய வேண்டுமானல் இந்த இலங்கை ஏழு கடலுக்கும் அப்பால் இருந்திருக்கவேண்டாமா!' என்கிறாள்.

'ஆழி நெடுங்கை ஆண்தகைதன்
 அருளும் புகழும் அழிவின்றி,
ஊழி பலவும் நிலைநிறுத்தற்(கு)
 ஒருவன் நீயே உளையானய்!

பாழி நெடுந்தோள் வீரா! நின்
பெருமைக் கேற்பப் பகையிலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்த(து)
ஆகா திருந்த(து) இழிபன்றே!'

இந்தச் செய்யுளைப் பாடப் பாட, அதாவது ஆர அமர பாவத்தை ஒட்டிப் பாடப் பாட, என்ன தோன்றும்! சீதை பேசுவதற்கென்றே சொல், இசை, எதுகை மோனைகளைத் தமிழ்த் தெய்வம் அமைத்ததாகத்தான் தோன்றும்.

இந்தமாதிரிப் பாடல்கள் ஆயிரக்கணக்காக அல்லவா இருக்கின்றன! அவைகள் தமிழ் மக்கள் பூமியில் தோன்றிய ஆதிகாலத்திலிருந்தே அவர்கள் மனத்தில் எழுந்த உணர்ச்சி தத்துவங்கள் எல்லாமே நிறைந்து பரிமளிக்கிற பாடல்கள். ஷேக்ஸ்பியரை ஆங்கிலேயர் ஏகோபித்து அனுபவிக்கிறது போல நாமும் ஒன்றுபட்டுக் கம்பர் பாடல்களைத் தமிழ் வழங்கும் நாடெங்கும் தீவகம் எங்குமே பாடி அனுபவிப்போமானால் தமிழுலகம் வானுலகமாக மாறாதா!

'கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.'



# எ. கம்பனைத் தூய்க்கும் முறை

[ போ. திருகூடசுந்தரன், எம்.எ., பி.எல். ]

சில வருஷங்களுக்கு முன் 'குறள் கற்கும் முறை' என்று ஒரு கட்டுரை எழுதியுள்ளேன். அதுபோல் கம்பனைக் கற்கும் முறை எழுத முடியுமோ? வள்ளுவரைக் கற்கலாம், ஆனால் கம்பனைக் கற்பது எப்படி? மனிதனிடம் அறிவு, உணர்ச்சி, செயல் என்று மூன்று அம்சங்கள் உள. அந்த மூன்று அம்சங்களைக் கொண்டு அறிஞர்கள் இலக்கியத்தை அறிவு நூல்கள், உணர்ச்சி நூல்கள், அற நூல்கள் என்று மூன்று வகையாகப் பிரிப்பர். அற நூல்களும் அறிவு நூல்களுள் அடங்கும்; உணர்ச்சி நூல்கள் தனியாக நிற்கும்; அவையே ஆற்றல் உடையன; ஆதலால் இலக்கிய நூல்களை அறிவு நூல்கள், ஆற்றல் நூல்கள் என்று பிரிக்கலாம் என்று ஆங்கில அறிஞர் டிக்வின்ஸி கூறுகிறார். இந்த உணர்ச்சி நூல்களே உண்மையில் இலக்கியமாகும் என்பது பெரியோர்களுடைய துணிபு. உணர்ச்சி நூல்கள்தான் காவியங்கள். உணர்ச்சி எழாதவரை இலக்கியம் எழுவதில்லை. கவிதை உணர்ச்சியில் உற்பவித்து உணர்ச்சியை உண்டாக்கும். கவிஞன் உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து தன்னை மறந்த லயந் தன்னில் இருக்கும் பொழுது அவனிடம் கவிதை பிறக்கும். அவன் உணர்ச்சியோடு அநுபவித்ததைத் தன்னுள் அடக்க முடியாது வெளியிட்டு அதைப் பிறர்க்கும் ஊட்டுகிறான். கவிஞனின் அநுபவம் அவனுடைய உணர்ச்சியுடனேயே வெளியிடப்படும் பொழுது அதற்கு ஒரு ரூபம் கொடுக்கப்

படுகிறது. அழகிய கருத்தைப் பொதிந்து வைத்துக் கொண்ட ஒரு ரூபம் மட்டும் கவியாகிவிடாது. கவி பெற்ற அந்த அநுபவம் அவன் கவிதையின் மூலம் படிப்போராகிய நம் மனத்தில் தொத்திக்கொள்ள வேண்டும். அந்த அநுபவமும், கவி எந்த உணர்ச்சியோடு அநுபவித்தானோ அதே உணர்ச்சியோடு நமக்கும் ஏற்படவேண்டும். ஆகவே உணர்ச்சியின் வேகம் எவ்வளவு முக்கியமானது என்பது புலனாகும்.

அறிவு நூல்கள், அறநூல்களோ, உணர்ச்சி துளியேனும் தலைகாட்டினால் அவை உண்டாகமாட்டா, உருக்குலைந்து போகும், உண்மை ஒளிந்துகொள்ளும். காய்தல் உவத்தலின்றி ஒருபொருட்கண் ஆயும்பொழுதே இந்த நூல்கள் பிறக்கும். கணிதம், ரசாயனம், சரித்திரம், தத்துவ சாஸ்திரம் முதலியவற்றில் உணர்ச்சிக்கு இடமேது ? ஸயன்ஸோ, சரித்திரமோ, தத்துவமோ இவற்றில் உணர்ச்சி புகுந்துவிடுமானால் அவை உடனே உணர்ச்சி நூல்களாக மாறிவிடும். இருபது வருஷங்களுக்கு முன் நடந்த உலக யுத்தத்தில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று அப்பொழுது பத்திரிகைகளில் வெளிவந்திருந்தது. அதை ஆதாரமாக வைத்து ஸ்ரீ. வ. வெ. ஸு. அய்யர் 'அழேன் ழுக்கே' என்று ஒரு சிறு கதை எழுதியிருக்கிறார். அந்தச் சம்பவத்தைச் சரித்திர நூலில் படிக்கலாம். அதையே அய்யரின் கதையிலும் காணலாம். ஆனால் சரித்திரத்தில் விஷயத்தை அறிவோம்; கதையிலோ அதை உணர்வோம். சரித்திரத்தில் அதைக் கற்கலாம், ஆனால் கதையில் அதைக் கற்கிறோமா அநுபவிக்கிறோமா ? அய்யர் கதையை வாசிக்கும் பொழுது அழேன் ழுக்கேயின் வீரத்தில், அன்பில், தேசபக்தியில் ஈடுபட்டு நம்மையே மறந்துவிடுகிறோம். அதுபோல் சரித்திராசிரியன் நம்மை மறக்கச் செய்ய முடியுமா ?

சந்திர மண்டலத்தை வான சாஸ்திரிகள் ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டறிகின்றனர். ஆனால் நம் சிறு குழந்தை அம்புலியைக் கண்டு ஆனந்திக்கின்றதா, ஆராய்கின்றதா? தாவர சாஸ்திரிகள் செடி கொடிகளைத் தம் ஆராய்ச்சிச் சாலையில் அறுத்துப் பிரித்து அதனுள் மறைந்து கிடக்கும் உண்மைகளைத் தேடுகின்றனர். 'ஆனால் யாரேனும் தன் தாயின் கல்லறையில் படர்ந்துள்ள கொடிகளைப் பார்த்ததும் தாவர ஆராய்ச்சியில் இறங்குவதுண்டோ?' என்று ஆங்கில மகா கவி ஒர்ட்ஸ்வோர்த் கேட்கிறார். சைக்கிள் வண்டியைப் பார்த்தால் 'எஞ்சினியர்', ஒரு சக்கரத்துக்குப் பின் மற்றொரு சக்கரம் ஒழுங்காய்ப் போகின்றதே, அதன் அமைப்பு என்ன என்று யோசித்து ஆராய ஆரம்பிப்பான். ஆனால் கவிஞனுக்கு அந்த விஷயம் மூளையில் படுவதே யில்லை. கவிஞன்,

'அக்காளும் தங்கையும்போல் அவைபோகும் அழகைப்'

பார்த்துக்கொண்டே நின்றுவிடுகிறான்.

ஆகவே அறிவு நூல்களைக் கற்கலாம், அற நூல்களைக் கற்கலாம்; ஆனால் உணர்ச்சி நூல்களைக் கற்க முடியாது. உணர்ச்சி நூல்களை அநுபவிக்கலாம்; அந்த அநுபவத்தில் அறிவு காண முடியாத உயர்ந்த உண்மைகளைக் காணலாம்; உன்னத லட்சியங்களை அடையலாம்; களங்கமற்ற இன்பம் பெறலாம். உணர்ச்சி நூல்கள் தரும் இன்பத்திலும் உயர்ந்த இன்பம் வேறு கிடையாது. அவை உள்ளத்தை உரமாக்கி ஊக்கமும் உற்சாகமும் ஊட்டக்கூடிய இன்பமாகும். அத்தகைய பேரின்பத்தைத் துய்ப்பதே உண்மை இலக்கிய நூல்களைப் படிப்பதன் நோக்கமாகும்.

கம்பனைப் பற்றிப் புலவர்கள் எத்தனையோ ஆராய்ச்சிகள் வெளியிட்டு வருகின்றனர். கம்பன் வால்மீகரை எவ்வளவு

தாரம் தழுவி எழுதுகின்றான் என்பதைப் பற்றி விவரிக்கிறார்கள். சிலர் கம்ப ராமாயணத்தில் வடமொழிப் பதங்கள் எத்தனை, அவற்றிற்குரிய காரணம் என்ன என்பதைப் பற்றி ஆராய்கின்றார்கள். சிலர் கம்பன் தமிழர் நாகரிகத்தைத் தழுவி எழுதுகிறானா, ஆரியர் நாகரிகத்தைத் தழுவி எழுதுகிறானா என்ற விசாரணையில் ஈடுபடுகின்றனர். சிலர் கம்பனில் அற விஷயங்களைக் கூறும் பாடல்கள் எவை என்று தேடுகின்றனர். சிலர் கம்பன் வள்ளுவருடைய குறள்களில் எதையெல்லாம் எடுத்து ஆள்கின்றான் என்று பார்க்கின்றனர். சிலர் கம்பனுக்குச் சைவ சமயத்தில் துவேஷமுண்டா என்ற கேள்வியில் இறங்குகின்றனர். இங்ஙனம் பலவிதமான ஆராய்ச்சிகள். இவைகளில் பல அறிவுக்கு விருந்தாய் அமைகின்றன. ஆனால், இந்த ஆராய்ச்சிகள் மூலம் கம்பனைக் கற்க முயல்கின்றோமே தவிரக் கம்பனைத் துய்க்கின்றோமா? உணர்ச்சி நூலைக் கற்க முயலலாம், ஆனால் அந்த நூல் என்ன பயன் கருதி எழுந்ததோ அந்தப் பயனை அடைய முடியுமோ? மலரைப் பற்றி—இதன் பெயர் என்ன, இதன் ஜாதி என்ன, இது உண்டாகும் நிலம் யாது, இதன் உறுப்புக்கள் எவை என்று ஆராய்ச்சிகள் நிகழ்த்தலாம். ஆனால், முகர்ந்தாலன்றி மலரின் மணத்தைப் பெறமுடியுமோ? மலரின் அழகை நுகராது, மலரின் மணத்தை முகராது எத்தனை ஆராய்ச்சிகள் நிகழ்த்தி என்ன பயன்?

இலக்கிய நூலைப் பற்றிய இந்த ஆராய்ச்சிகள் அதிகமாக நம் கவனத்தைக் கவரவே நாளடைவில் நாம் ஆராய்ச்சிகளை நினைந்து கவியை - இலக்கியத்தையே - மறந்துவிடுகிறோம். எதேனும் ஒரு சமயம் இலக்கியம் - கம்ப ராமாயணம் ஒன்று இருக்கின்றதே - என்ற ஞாபகம் வந்தாலும் அப்பொழுது அதை அநுபவிக்க முடியாதவர்களாக நின்றுவிடுகிறோம்.

ஆராய்ச்சிகள் அநுபவிக்கும் ஆற்றலை அழித்துவிடுகின்றன. ஆராய்ச்சிகள் அவசியமேயானாலும் அவைகளைவிட இலக்கியமே அதிக அவசியம், அதுவே பிரதானம் என்பதை ஒரு பொழுதும் மறந்துவிடலாகாது.

அதுமட்டுமன்று. கம்பனைத் துய்த்த பிறகுதான் கம்பனை ஆராயப் புகவேண்டுமே யன்றி ஆரம்பத்திலேயே ஆராய்ச்சியில் இறங்கிவிடலாகாது. நுகர்ச்சிக்கு முன் ஆராய்ச்சி என்பது குதிரைக்கு முன் வண்டி என்பது போலாகும். ஆராய்ச்சி நுகர்ச்சிக்குரிய ஆற்றலை அழித்துவிடாவிட்டாலும் அதிகமாகக் குறைத்துவிடும். இந்த உண்மைக்குப் பாடசாலைகளில் இலக்கியங்களைப் படிக்கும் மாணவர்கள் சான்று பகர்வர். பாடசாலைகளில் இலக்கியங்களைப் பற்றிப் பல விஷயங்கள் கற்கின்றார்கள். ஆனால் இலக்கியங்களை நுகர யார் பயிற்சிக்கிறார்கள்? நாடகக் கவிகளில் தலை சிறந்த ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் கற்பிப்பதை அனுபவத்தில் அறிவேன். இன்று பத்து வரி, நாளைப் பத்து வரி, இவ்விதமாகவே பாடம். அன்று அன்று கற்பிக்கப்படும் பத்து வரிகளைப் பற்றிய அர்த்தங்கள்; பாட பேதங்கள், மேற்கோள்கள் முதலியன கற்றுத்தரப்படுகின்றன. ஆனால் நாடகத்தில் ஒரு காட்சியேனும் ஒரே தடவையில் வாசிக்கப்படுகிறதா? மாணவர் அதைத் துய்க்க வழி காட்டப்படுகின்றனரா? கிடையாது. ஆதலால் மாணவர்கள் ஷேக்ஸ்பியரின் உன்னதமான நாடகங்களின் சுவையை அறியார். அந்த நாடகங்களைப் பற்றி அறிஞர் செய்துள்ள ஆராய்ச்சிகளையும் வியாக்கியானங்களையுமே அறிவார்கள். இந்த முறையின் அனுஷ்டானத்தால் மாணவர்கள் பாடசாலையில் படிக்கும் காலத்தில் தாங்கள் படிக்கும் நாடகங்களைத் தங்கள் தலையில் சுமத்திய பாரமாக நினைத்துவிடுகின்றனர். அவற்றைத்தான் சுமந்து

தொலையவேண்டும், அவை தவிர ஷேக்ஸ்பியரின் வேறு நாடகங்களை வாசிப்பானேன், அதிகப் பாரம் தேடிக்கொள்வானேன் என்று எண்ணிவிடுகின்றனர். அதே காரணத்தால் பாடசாலையை விட்டு வெளியேறி வாழ்க்கையில் புகுந்த பின், 'அப்பா, பாரம் தொலைந்தது!' என்று படித்த நாடகங்களின் பெயர்களைக்கூட மறந்துவிடுகின்றனர். ஷேக்ஸ்பியர் பெரிய நாடகக் கவிதான், ஆனால் அவரைப் படித்தது போதும் என்று எண்ணிவிடுகின்றனர். ஷேக்ஸ்பியர் நாடகங்கள் உற்சாகம் ஊட்டுபவை, உன்னத லட்சியங்கள் காட்டுபவை, ஆனந்தம் அளிப்பவை, அறிவை விசாலப்படுத்துபவை; ஐயோ இந்த இலக்கியத்தை ஏனோ கசப்பாக்குவதில் முனைந்து நிற்கின்றனர்?

பாடசாலைகளில் ஷேக்ஸ்பியருக்கு ஏற்படும் கதிதான் பாடசாலையிலும், பிரசங்க மேடையிலும், பத்திரிகை அரங்கத்திலும் கம்பனுக்கும் ஏற்பட்டிருக்கிறது. ஆராய்ச்சிகள் நடக்கட்டும். ஆனால் அநுபவம் பெரிதா, ஆராய்ச்சி பெரிதா? அதையும் யோசிக்கட்டும். 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்று கூறி மகிழ்வதைவிட கல்வியிற் பெரியவன் கம்பன் என்று உணர்ந்து மகிழ்வதன்றோ அவசியம்.

ஆராய்ச்சி மிகுதியால் கம்பனைப் பற்றியும் கம்பன் கவிகளைப் பற்றியும் பல அரிய விஷயங்களை அறிய முடியும். ஆனால் கம்பன் மனத்தில் தோன்றி அவன் கவியில் உயிர் பெற்று நிற்கும் உணர்ச்சிகளோ, அவை வாசிப்போர் மனத்தில் எழுப்பக்கூடிய ஆனந்தமோ நம் கைக்கு எட்டுவதில்லை. கம்பன் பாடியது ஆனந்தம் நுகர்விக்கவன்றோ?

ஆராய்ச்சிகளைப் பற்றி இன்னுமோர் விஷயம். மாம் பழத்தைக் குறித்து சாஸ்திரிகள் பலவிதமான ஆராய்ச்சிகள் நிகழ்த்தலாம். ஆனால் அவை சாதாரண மாந்தர்க்கு அர்த்த

மாகுமோ, பயன்படுமோ? சாதாரண மாந்தர் விரும்புவது மாம்பழத்தைச் சுவைத்து நுகர்வது ஒன்றுதானே! அது தானே அவர்கள் சக்திக்கு உட்பட்டதும்! அவர்கள் அவ் விதம் நுகர்வதால் மாம்பழத்தின் பயனை அடைந்தும்விடுவார் கள். அது போல்க் கம்பனைப் பற்றிய ஆராய்ச்சிகள் சாதாரண அறிவினர்க்கு விளங்கா. அவர்க்கு அதனுல் பயன் உண்டாவதில்லை. ஆனுல் அவர்களுக்குக் கம்பனை அனுபவிக் கும் மார்க்கத்தைக் காட்டிவிட்டாற் போதும், கம்பனுல் கிடைக்கக் கூடிய பலனை அடைந்துவிடுவார்கள்.

உலகில் தோன்றியுள்ள மகா கவிகளில் கம்பன் ஒருவன் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் மற்ற மகா கவிகள் பிற தேசங்களில் படிக்கப்படுவது போல் கம்பன் தமிழ்நாட்டில் படிக்கப்படக் காணுேமே! மற்றக் கவிஞர்களின் இலக்கியங் கள் ஏராளமாயும் மலிவாகவும் அச்சிடப்பட்டுத் திரளான ஜனங்கள் வாங்கி வாசிக்கிருர்கள். ஆனுல் நம்முடைய கம்ப ராமாயணத்திற்குப் பிழையில்லாத பதிப்புக்கூட இன்னும் வெளிவரவில்லை! கம்பனைப் பற்றித் தமிழ்நாட்டில் அறிந் தவர் அதிகமாயிருக்கமாட்டார். கம்ப ராமாயணப் பிரதி கள் எத்தனை விற்கப்படுகின்றன? எத்தனை ஜனங்கள் அவை களை வாசிக்கின்றனர்? மிக மிகச் சொற்பமே. காரணம் என்ன? நாட்டில் காணப்படும் எழுத்துவாசனைக் குறைவு ஒரு காரணம்தான். ஆனுல் எழுத்துவாசனையுடையவரும் கம் பனைத் தொடுவதில்லையே, தொட அஞ்சுகின்ருர்களே! காரணம் என்ன? கம்பன் என்ருல், ‘நம்மால் படிக்க முடியுமா? நமக்கு அறிவு போதுமா?’ என்று எண்ணுகின்றனர். அப்படி எண்ணச் செய்துவிட்டனர் ஆராய்ச்சியாளரும், பண்டிதரும். அப்படி எண்ணும்படி அவர்கள் செய்யாவிட்டாலும், கம் பனைப் படிப்பது எளிது, நுகர்ந்து ஆனந்திப்பது சுலபம்

என்று எண்ணும்படி அவர்கள் செய்யவில்லை என்பதை மட்டும் நான் உறுதியாகக் கூறுவேன்.

ஆனால் ஆராய்ச்சிகள் அனாவசியம் என்றோ அல்லது ஆராய்ச்சிகளைப் படிக்கவேண்டியதில்லையென்றோ நான் கூறவில்லை. கம்பனைப் படித்து அனுபவிக்க முயன்றபின், அவனிடம் பெறவேண்டிய உணர்ச்சிகள் அனைத்தையும் பெற முயன்றபின் ஆராய்ச்சிகளைப் படிக்கலாம். நமக்கு விளங்காதிருந்தவற்றை அவை திடீரென்று விளங்கச் செய்யலாம். அதனால் நம் இன்ப உணர்ச்சி அதிகரிக்கலாம். ஆனால், நாமாகக் கம்பனைத் துய்க்க ஆரம்பிக்கு முன் ஆராய்ச்சிகளைக் கையில் எடுத்தல் கூடவேகூடாது. எடுத்தால் பிறகு நாம் கம்பனைக் கையில் எடுக்கப்போவதில்லை. எடுத்தாலும், அப்பம் தின்னாமல் அப்பத்தில் குழிகளை எண்ணும் வேலையிலேயே ஆழ்ந்துவிடுவோம், கம்பன் நம் கையினின்று நழுவிவிடுவான்.

சரி, கம்பன் கவிஞரின் தலைவன் ஆயிற்றே, அவனை எல்லோரும் - சாமானியரும் - அநுபவிக்க முடியுமோ? முடியும், அதில் சந்தேகம் வேண்டாம். கண்களை மூடிக்கொள்பவர் தாம் காண முடியாது. கண்களைத் திறந்து காண ஆசையுடையார் கட்டாயமாகக் காண முடியும். காண்பவர் அனைவரும் ஒரேவிதமாகக் காண்பர் என்று கூற முடியாதுதான்; எல்லோரும் ஒரே அளவில் ஆநந்தத்தைப் பருகுவர் என்று கூற முடியாதுதான். ஆனால் பார்ப்பதும் நிச்சயம், ஆனந்தம் பருகுவதும் நிச்சயம். இந்த உண்மையை மனத்தில் வைத்தே பிரெஞ்சுப் பேராசிரியர் அனடோல் பிரான்ஸ் என்பார், 'பேரிலக்கியங்களைக் கதைகளாக எழுதிக் குழந்தைகள் கையில் கோடாதீர், பேரிலக்கியங்களையே அவர்கள் கையில் கொடுத்துவிடுங்கள்!' என்று கூறுகிறார்.

கம்பன் இனியன், கம்பனை ரஸிப்பதும் எளிதே. ஆயினும் கம்பனைக் கையில் எடுத்தமாத்திரத்தில் சுவைத்து விட முடியாது. பொருள் விளங்கிக்கொள்ள வேண்டும். ஆனால் அது பெரிய சிரமமன்று. ஆகவே, கம்பனை நுகர ஆசையும், அதற்குரிய ஆள்வினையும் இருந்தால் கம்பனைத் துய்த்தல் மிக எளிது. கம்பனுடைய கவிகள் மிகவும் எளியவை என்பது மட்டுமன்று: எளிமைக்கு உயர்ந்த எடுத்துக்காட்டாகக் கம்பனையே கூறவேண்டும்.

கம்ப ராமாயணம் ஆறு காண்டங்கள், ஆயிரக் கணக்கான கவிகள். அவற்றுள் எங்கே ஆரம்பிப்பது, எதைப் படிப்பது? கம்ப ராமாயணம் ஒரு பெரிய அழகிய பூங்காவனம் போன்றதாகும். எத்தனையோ நிற மலர்கள், எவ்வளவோ மணமுள்ள பூக்கள்! அந்த வனத்தில் உலவும் வண்டு எந்த மலரில் வேண்டுமானாலும் உட்காரும், தேன் நுகரும். அதற்கு ஒழுங்கும் கட்டுப்பாடும் கிடையாது. அது போல் ஆறு காண்டங்களையும் வாங்கி வைத்துக்கொள்ளுங்கள். எப்பொழுது எது இஷ்டமோ அதில் எந்த இடத்தையேனும் திருப்பிப் படியுங்கள். இன்பமே உணர்வீர்கள்.

ஆயினும் கம்பனால் கிடைக்கக்கூடிய அதிக இன்பம் பெறவேண்டுமானால் ஒரு விஷயம் மட்டும் அறிந்து ஞாபகத்தில் வைத்து அனுஷ்டிக்கவேண்டும். திருக்குற்றாலம் போகிறோம். அங்கே மலைகளைப் பார்க்கிறோம்; மரங்களைப் பார்க்கிறோம்; நீர்வீழ்ச்சியைக் காண்கிறோம். ஆனால் நாம் அனைவரும் ஒரே விதமாகப் பார்க்கிறோமா? இல்லை. ஒருவர் நீர்வீழ்ச்சியை மட்டுமே பார்த்து நிற்பார். ஒருவர் அந்த வானளாவிய தேக்கு மரத்தை மட்டுமே கண்டு நிற்பார். ஒருவர் மலைமேல் தவழும் மேகங்களில் ஈடுபட்டு நிற்பார். இவ்வாறு ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளில் சிந்தை பறிகொடுத்து

நிற்கலாம். ஆனால் ஒருவர் இவையனைத்தையும் சேர்த்து நோக்கி அந்த அழகில் லயித்துப் போவார். கம்பர் பால காண்டத்தில் வரைக்காட்சிப் படலத்தில் சந்திரசைலத்தை வர்ணிப்பதைக் காண்க. மலையில் காணும் ஒவ்வொரு காட்சி யையும் தனித்தனியே கூறி இறுதியில் மலை முழுவதையும் வர்ணித்துவிடுகிறார்.

ஒருவன் காட்டுக்குள் நுழைந்தால் மரங்களைத் தனித் தனியாகவும் பார்க்கலாம், மரங்கள் எல்லாம் சேர்ந்த அவ் வனத்தையும் பார்க்கலாம். வனம் மிகப் பெரியதானால் முதலிலேயே வனம் முழுவதையும் பார்க்க முடியாமல் போகலாம். ஆனால் வனத்தைப் பகுதி பகுதியாகப் பார்க்க முடியும். ஆகவே வனத்துக்குச் சென்றவன் மரங்களைக் கண்டும் அழகு அனுபவிக்கலாம், வனத்தின் பகுதிகளைக் கண்டும் அழகு அனுபவிக்கலாம். மரங்களைக் காண்பதில் ஆனந்தமுண்டு. ஆனால், மரத்தொகுதியான வனப் பகுதி யின் அழகே அதிகமான ஆனந்தம் அளிக்கும், அதிகமான உணர்ச்சிகளை உண்டாக்கும்.

ஒரு பெரிய மாளிகை. அதை ஒரே காட்சியாக நோக் கிக் களிக்கலாம். ஆனால், மிகப் பெரியதானால் பல திசை களில் சென்று அதன் அமைப்பும் அழகும் பருகலாம். அதல்லாமல் அரச முன்றில், கொலுமண்டபம், நீதிமன்றம், பந்தாடுபூமி என்று பல பகுதிகளை ஒவ்வொன்றாகப் பார்த்தும் மகிழலாம். ஒரு மண்டபத்துள் நுழைந்ததும் மண்டபம் முழுவதையும் கண்டு களிப்பதோடு அதனுள் காணப்படும் ஒவ்வொரு தூண், ஒவ்வொரு சிலை, ஒவ்வொரு ஓவியம் என்று ஒவ்வொன்றையும் தனித்தனியே நோக்கியும் ஆனந்திக்கலாம்.

இதுபோல்தான் கம்ப ராமாயணத்தைத் துய்ப்பதும். கம்ப ராமாயணம் முழுவதும் படித்து அது ஒவ்வொரு பாக

மும் மற்ற பாகங்களோடு அமைந்து அழகு பெற்று ஆனந்த மளிப்பதைக் காணலாம். அது எல்லார்க்கும் எளிய காரிய மன்று. கம்ப ராமாயணம் ஒரு நாடகம் போன்றதாகும். அதனால் ஒவ்வொரு காட்சியையும் தனியாக எடுத்துப் படிக்கலாம். அதன் மூலம் கம்பன் எழுப்பும் உணர்ச்சி களைப் பெற்று இன்பம் பெறலாம். இவ்விதம் ஒரு காட்சி யைப் படிக்காமல் தனிக் கவிகளையும் படித்து இன்புறலாம். காட்சிகளைப் படித்தால்தான் உணர்ச்சிகள் உண்டாகும். தனிக் கவிகளை நுகர்வதால் உணர்ச்சிகள் உண்டாதல் அரிது. உண்டானாலும் அவை பிரமாதமல்ல, அவை கம்பன் எழுப்ப எண்ணிய உணர்ச்சிகள் எல்லாம் அல்ல.

நாடகாசிரியன் நாடக அமைப்பில் காட்சி காட்சியாகவே தன் கருத்தில் விளைவிக்கிறான். அதனால் கம்ப ராமாயணத் தைத் துய்க்க விரும்புவோர் காட்சிகளைப் படித்தலே அவசி யம். அப்பொழுதே கம்பனால் அடையக்கூடிய பயன் முழு வதையும் அடைவர்.

கம்பர் தமது காவியத்தை நாடகமாக அமைக்காத கார ணத்தால் அதைப் படலங்களாகப் பிரித்திருக்கிறார். ஆனால் ஒவ்வொரு படலத்திலும் பல காட்சிகள் அமைந்து கிடக்கும். அதனால் நாம் கம்பரைக் கையில் எடுத்தால் ஒரு படலம் முழு வதையும் படிக்கவேண்டிய அவசியமில்லை. அதில் ஏதேனும் ஒரு காட்சியைப் படிக்கலாம், படித்து இன்புறலாம். அதிக சிரமமுமில்லை, அதற்கு அதிக நேரமும் தேவையில்லை. ஆதலால் யாரும் கம்பனைத் துய்க்கத் தயங்கவேண்டிய அவசியமில்லை.

எந்தக் காட்சியைப் படிப்பது? இதற்குப் பிறர் யோசனை கேட்க வேண்டியதில்லை. பிறர்க்குச் சில காட்சிகள் பிரயோஜனமுடையதா யிருக்கலாம்; அதிக அழகு வாய்ந்த

தாகத் தோன்றலாம். ஆனால் அந்தக் காரணத்தால் அதே காட்சிகள் நமக்கும் அழகாய்த் தோன்றும், பிரயோஜனமா யிருக்கும் என்று கூற முடியாது. அதுமட்டு மன்று. நம் மன நிலை எவ்வாறுளதோ அதற்குத் தக்க காட்சியே ஆநந்தமளிக்கும். ஆதலால் நம் விருப்பம் போல் நம் மன நிலைக்கேற்ற காட்சியை எடுத்துப் படித்து இன்பம் நுகர்வதே முறையாகும். லிட்டன் என்னும் ஆங்கில அறிஞர் ஒரு கதை கூறுவதுண்டு: ஒருவன் தேனீக்கள் வளர்த்து வந்தான். அவை அவனுக்குத் தேன் சேர்த்து உதவிவந்தன. ஆனால் அவன் அந்தத் தேனைவிட உயர்ந்த தேன் உண்டாக்க விரும்பினான். அதனால் அவன் தன் ஈக்களின் சிறகுகளைக் கத்தரித்தான். அவைகளுக்கு முன்னால் மிகச் சிறந்த புஷ்பங்களைக் கொண்டு வைத்தான். 'இந்தப் புஷ்பங்களை விட்டு அந்தத் தேனீக்கள் பறக்க முடியாது. இருந்த இடத்திலேயே எதிரில் கிடந்த புஷ்பங்களிலேயே தேன் எடுக்கும். அந்தப் புஷ்பங்களின் தேன் மிகச் சிறந்ததாகும்' என்று நினைத்தான். ஆனால் அவன் ஏமாந்துபோனான். அந்தத் தேனீக்கள் தேன் சேகரிக்கவே முடியவில்லை! இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்ன? தன்னிஷ்டம் போல் படிப்பவனே சந்தோஷம் காண்பான். அறிஞர் மெச்சும் காட்சிகள் என்று நினைத்துக் கையில் எடுத்தால் ஆநந்தம் காணாமலே போகக்கூடும்.

இவ்விதம் காட்சிகளைத் தனித் தனியாகப் படிக்குமாறு கம்ப ராமாயணத்தில் படலங்களாகப் பிரித்திருப்பதை மாற்றிக் காட்சிகளாகப் பிரித்து அடையாளம் செய்து வைத்துக்கொண்டு பிரியமான காட்சியைப் படித்துக் கம்பனைத் துய்த்தல் முறை. பற்பல காட்சிகளையும் அநுபவித்த பிறகு படலங்களை அப்படியே வாசிக்கலாம். பிறகு பல படலங்களும்,

காண்டங்களும் ஒன்று சேர்ந்து விளங்கும் ராமாயணத்தின் கட்டுக்கோப்பு முழுவதையும் கண்டு ஆனந்திக்கலாம். காவியப் பாத்திரங்களின் குணாதிசயங்கள் வெவ்வேறு இடங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கும் முறையைத் தெரிந்து களிக்கலாம். முதலில் காட்சிகளைப் படிப்பதால், கவி நமக்கு உணர்த்த விரும்பும் உணர்ச்சியோடு அவனுடைய 'செஞ்சொற் கவி யின்ப'த்தை அப்படியே அனுபவிக்க முடியும்.



# அ. நல்ல பதிப்பு வரவேண்டும்

[ சோ. முருகப்பா, ஆசிரியர், 'குமரன்' ]

'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ெருரு பழமொழி தமிழ்நாட்டிற் கிடந்து வழங்கிவருகிறது. கம்பன் ஒரு சிறந்த புலவன் என்பதை யாரும் மறுக்கவில்லை. சைவ அன்பர்களும் வைணவ அன்பர்களும் கம்பன் ஒரு சிறந்த புலவன் என்று ஒப்புக்கொள்கின்றனர். அவ்வளவோடும் நில்லாது, கம்பன் கவிகளில் தங்கள் மதக்கோள் நிறுவுதற்கு ஆதாரங் காட்ட அரும்பாடு படுவதையும் காண்கிறோம். கம்பன் சைவ னென்று சைவரும், கம்பன் வைணவனென்று வைணவரும் உறுதிப்படுத்தப் பல நூற்றாண்டாக முயற்சி செய்துவரு கின்றனர். கம்பன் நூல் சிறந்ததன்றென்று சொல்லப் பண்டி தர்களால் முடியவில்லை. அவனுடைய கவியைப் படித்தால், அதனை உணர்ந்தால் சிறந்தது என்று கூருதிருக்க முடியாது. எனவே பண்டிதர்களும், சமயப்பற்றுடையவர்களும், நூலறிவு பெற்ற பிறரும் கம்பனை வியந்தனர்; பாராட்டினர்; சிறந்த புலவனென்று ஒப்புக்கொண்டனர். கல்வியின் பெரு மைக்குக் கம்பனைக் கட்டளைக்கல் என்று கருதினர் என்ருல் அது மிகையாகாது.

இனி, கம்பன்தான் கவி; அல்லது தமிழ்க் கவிகள் யாவ ரினும் கம்பனே தலைசிறந்த கவி என்று கூறுவதைப் பற்றி இன்று ஒன்றும் கூறவேண்டாம். கம்பனின் ஒப்பற்ற நூல் கம்ப ராமாயண மொன்றே யாதலால் கம்பன் எப்படிப்பட்ட

கவி என்று முடிவு கட்டுவதற்கு அந்நூலே ஆதாரமாகவுள்ள தென்று கூறவேண்டியதில்லை. ஆனால், இன்று வெளிப்பட்டு நிலவும் கம்ப ராமாயணப் புத்தகத்தை வைத்துக்கொண்டு கம்பனைப்பற்றி முடிவுகட்டல் ஆகாத காரியம். இப்பொழு திருக்கிற குஜிலிக்கடை ராமாயணத்தை வைத்தே தமிழறிவு பெற்ற யாவரும் கம்பன் சிறந்த புலவன் என்று முடிவுகட்டி யிருக்கின்றன ரென்பது ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டிய தாகும்.

எட்டுப் பிரதியி லிருந்துவந்த கம்ப ராமாயணத்தைப் போட்டி போட்டுப் பிற புலவர்கள் திருத்தியிருக்கின்றனர் என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஒரு படலத்தைப் படித்தாலும் இவ்வுண்மை நன்கு விளங்கும். திறம் படப் படித்துத் தமிழறிவு பெற்றவர்க்கே யன்றி, சாதாரணத் தமிழ் மக்கள் யாவருக்கும் விளங்கும்படியே இந்தச் சேர் மானங்கள் சேர்ந்திருக்கின்றன.

வான்மீகி முனிவருடைய கவிநயத்தைப் பாராட்டுங் கம்பன், ‘வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி’ என்று வியந்து ஈடுபட்டுக் கூறுகின்றான். வான்மீகி வைத்த பாதத்தை எடுத்துவிட்டு வேறு பாதத்தைச் சேர்க்க முடியாது என்று பாராட்டியுரைத்த கம்பனின் பாட்டுக்கள் எப்படி அமைந்து கிடைக்கக்கூடு மென்பதை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். கம்பனின் கவிகளில் ஒரு பாதம் அல்லது ஒரு பதம் எடுக்கப்பட்டாலும் பாட்டு சிக்குகிறது ; ஓசை போகிறது; பொருள் சப்பையாகிறது; உள்ளீடின்றி ஓய்கிறது; ஓட்டமும் உணர்ச்சியும் மழுங்கிப் போவதைக் காண்கிறோம். சாதாரணமான தமிழ் நூல்களுக்கு ஏற்பட்ட ஆபத்தைப் போன்ற ஆபத்து கம்ப ராமாயணத்திற்கும் ஏற்பட்டது. எட்டுப் பிரதி ஒன்றிலிருந்து ஒன்றுக்கு நகல்

செய்யும்போது ஏற்படும் பிழைகளும் அச்சிடும்போது ஏற்படும் பிழைகளும் எல்லா நூலுக்கும் பொதுவானவையாகும். அந்த இரு குறைகளும் இதுவரை வெளிவந்த சங்க நூல்கட்கும் சைவ வைணவ நூல்கட்கும் ஒருவாறு நிவர்த்தியாகியிருக்கின்றனவென்று கூறலாம். கம்பனுக்கு இவ்விரு குறைகளும் நிவர்த்தியாகவில்லை. சங்க நூல்கள் படித்தவர் கைகளிலேயே பயிலப்பட்டு வந்தபடியாலும், ஆசிரியர் மூலம் தகுதியுடைய மாணவர்க்கே நகலெழுதக் கிடைத்தபடியாலும் அவற்றில் நகலெடுத்த பிழை ஏற்படவில்லை. அவற்றைப் பதிப்பித்தவர்களும் கற்றுவல்ல பண்டிதர்களேயாதலால் அச்சுப் பிழையும் அதிகமாக ஏற்படவில்லை. சமய நூல்கள் குறிப்பிட்டவர்களிடமிருந்து தீட்சை முதலிய அதிகாரம் பெற்றவர்க்கே நகல் எழுதக் கிடைத்தபடியால் அவற்றிலும் நகலெடுத்த பிழை மலிய முடியாது போயிற்று. அவற்றைப் பொறுப்பும் பக்தியுமுடையவர்களே அச்சிடலாயினர்.

கம்பனில் இவ்விருவகைப் பிழைகள் அளப்பரும் சலதியாய் விளங்குகின்றன. அச்சுப் பிழைகளும் மூலாதாரமாகக் கருதப்பட்டு, உரையாசிரியர்களால் அவற்றிற்கும் சேர்த்து வெகுபிரயாசையுடன் உரைகாணும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. இதற்கு இலக்கணங்களையும், தொன்னூல் வழக்குகளையும் வாரி வழங்கிக் கம்பனை நிலைநிறுத்த உரையாசிரியர்கள் வெகுபாடுபடவேண்டிய நிலைமை வந்திருக்கிறதென்றால் வேறு என்ன கூற வேண்டும்? சங்க நூல்களும் சமய நூல்களும் கற்றவர்க்கும் கட்டுப்பட்ட பக்தர்கட்குமே பயன்படுவதா யிருந்தன. கம்பன் கவியோ யாவராலும் நகலெடுக்கப்பட்டதென்பது வெகு நன்றாக வெளிப்படுகிறது.

கம்பனில் பலவிதமான சேர்மானங்கள் இருக்கின்றன. தமிழ் நூல்கள் பன்னூறு இருக்க இந்த நூலில் மட்டும்

இவ்வளவு பாடபேதங்கள் இருக்கக் காரணமென்ன வென்பது கவனிக்கத்தக்கது. தமிழ் நூல்கள் எதிலும் இவ்வளவு பாட பேதங்கள் இல்லை. இவ்வளவு இடைச் செருகல்களும் இல்லை. கம்பனைப் படிக்கும் எவரும் இடைச் செருகல் இல்லை என்று கூற முற்பட மாட்டார். கம்பன் ஏட்டுப் பிரதி நூறு கண்டாலும் ஒன்றுபோல் பாடல்களும் பாடமும் இல்லை என்பது பிரத்யக்ஷ உண்மையாகும். சேர்மானம் எங்கெந்த வகையில் சேர்ந்திருக்கிற தென்பதை ஓரளவு குறிப்பிட்டுப் பார்க்கலாம்.

கம்பனின் நூல், படித்தவர் உள்ளத்தை ஈர்த்தது; படியாத மக்களையும் ஈர்த்தது. ராம கதை — வால்மீகியின் வடநாட்டுக் கதை — தமிழ் நாகரிகத்தைத் தழுவி உயர்ந்தமை, அது கம்பனின் கவிச் செல்வத்தில் உருப் பெற்றமை, ஆகிய மூன்றும் சேர்ந்து தமிழ் நாட்டிலிருந்த படித்தவர் படியாதவர் உள்ளத்தை ஒருசேரக் கொள்ளைகொண்ட தென்னலாம். இது காரணமாகவே பலரும் நகல் எடுக்கத் துவங்கினர் போலும்.

வான்மீகத்திலுள்ள கதைகளும் கொள்கைகளும் கம்பனில் காணக் கிடைக்கவில்லை யென்பது குறையென்று வடமொழிப் பற்றுடையார் பரிகசித்தனர் என்றும், அக்குறை கம்பனில் இருக்கக்கூடா தென்றும் கருதி நல்லெண்ணத்துடன் கம்பனின் பக்தர்கள் சில பாடல்களைப் புகுத்தியிருக்க வேண்டும். அல்லது, தமிழகத்தில் தமிழராகப் பிறந்து வளர்ந்து வாழ்ந்துகொண்டே வடமொழிக் காதலர்களாக வுள்ளவர் தங்களின் குறைப்பட்ட கொள்கைக்குக் கம்பனையும் சாட்சிக்காரனாக்க முயன்றனரோ என்னவோ? படிப்போருக்குத் தேனாகவும் தீங்கனியாகவும் உள்ள கம்பன் கவிகளின் இடை இடையே கம்பனிடம் பக்தி கொண்ட அன்பர் சிலர் 'தென்னம் பழக் கவி' (நாளிகேர பாகம்) இல்லாத

குறையை நீக்கக் கருதிச் சில கரடுமுரடான கவிகளையும் செருக முயன்றிருக்கின்றனர்.

கம்பனை வைணவத்துக்கும் சைவத்துக்கும் இழுத்து நிறுத்த அரும்பாடுபட்டுப் பல பாக்களை யாத்துச் செருகியுள்ளனர்.

கம்பனை ஒரு மட்டமான புலவன் என்று கூறி எடுத்துக் காட்டும் பொருட்டும் பல பாடல்கள் பாடிச் சேர்க்கப் பட்டிருக்கும் கொடுமை சகிக்கக்கூடியதன்று. இதனையெண்ணும்போது தமிழ் நாட்டில் சமயப் போராட்டம் மட்டுமேயன்றி நூல் போராட்டமும் பெரிதாயிருந்திருக்கிறதென்பது விளங்கும். இந்த ரகப் பாட்டுக்கள் ஆபாசக் களஞ்சியமாகவும் அசட்டுத்தனமாகவும் பாடிச் சேர்க்கப் பட்டுள்ளன.

இவைகள் ஒருபுறமிருக்க, ஒரு நோக்குமில்லாமல் சேர்க்கப்பட்ட பாடல்களும் பலவாக இருப்பதைக் காணலாம். சமயக் கோட்பாடு கொண்டு மட்டுமல்ல, கம்பனுக்கு உயர்வளிக்கும் நோக்கத்துடன் மட்டுமல்ல, ஒரு குறிக்கோளுமின்றியும் பல பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்படி ஏன் இவைகள் சேர்க்கப்படவேண்டுமென்று ஐயப்பட வேண்டியதில்லை.

நண்பர் ஒருவர்; ஒரு பத்திரிகைக்கு நிருபராக அமர்ந்தார். சில செய்திகளை அனுப்பினார். அவை பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டன. வெளியான பத்திரிகையை எடுத்தெடுத்துப் பார்த்துச் சந்தோஷப்பட்டார். அச்செய்திகளைப் படித்தவர்களைப் பார்த்து மகிழ்ந்தார். தாம் எழுதிய விஷயத்தை உலகத்தார் யாவரும் படிப்பார்களென்று நினைக்கும்போது தாங்காத மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார். ஆனால் இவர் எழுதினது இவருக்குத்தான் தெரியும். பத்திரிகையில் வெளி

யானது 'நமது நிருபரிடமிருந்து' என்பதுதான். இப்படிப் பட்ட மக்களாகக் கம்பனுக்கும் நமக்கு மிடைப்பட்ட காலத்தில் சிலர் இருந்திருக்கின்றன ரென்பது கம்பனில் கலந்து கிடக்கும் பல பண்டாரப் பாட்டுக்களிலிருந்து கிடைக்கும் உண்மையாக இருக்கிறது.

தாய்மொழி யன்பரின் அன்பு, வடமொழி யன்பரின் ஆர்வம், பண்டிதரின் பக்தி, சமயவாதிகள் ஆதரவு கொண்ட எதிர்ப்பு, நகல் எடுத்தவரின் மோகம், அச்சிட்டவரின் அறியாமை, இவையும் இவையன்ன பிறவும் கம்பன் கவியுடன் சேர்ந்து குழம்பி நிற்பதே இப்பொழுதுள்ள கம்ப ராமாயணப் பிரதி யென்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இத் தமிழ் நாட்டாரையும் தமிழுணர்ந்த பிறநாட்டாரையும், 'தமிழே கவிக்குரிய பாஷை; தமிழ் நாட்டில் கல்வியிற் சிறந்தவன் கம்பன்' என்றெல்லாம் கூறச் செய்வன இந்தக் கம்பராமாயணத்தில் இடையிடையே நின்று ஜ்வலிக்கும் பாடல்கள் என்பதை நாம் உணரவேண்டும். இத்தனை எதிர்ப்பையும், எதிர்ப்பைவிடத் துன்பம் தந்திருக்கும் ஆதரவையும் சமாளித்துக் கம்பன் உயிர் பெற்று ஒளி வீசித் தமிழகத்தில் அரியாசனம் வீற்றிருக்கின்றான் என்றால் அதன் பெருமையை யார் கூறுவது?

கம்ப ராமாயணத்தைக் கையிலெடுத்து விரித்துப் படிக்கப் புகுந்தால் கம்பனின் ஒளியிலேயே நாம் செல்ல முடியவில்லை. இடைச்செருகல் எனும் இருட்டு வழிமறிக்கிறது. மீண்டும் கம்பனின் ஒளி வீசுகிறது. பாட பேதம், சிதைவு என்ற பல மேகங்கள் ஒளியை மறைக்கின்றன. பிறகு ஒளி வீசுகிறது. அப்பால் மேகம் மறைக்கின்றது; இருள் சூழ்கின்றது. இதற்கிடையிடையே வீசும் ஒளியானது உள்ளத்தையும் உணர்ச்சியையும் கொள்ளைகொள்கிறது. இதனால்

சில சமயங்களில் ஒளி மண்டலத்தின் ஓரங்களில் மேகம் சென்றாலும், அதுவும் ஒளி மயமாகித் தோன்றுகிற தென்பது ஒரு முக்கிய நிகழ்ச்சியா யிருக்கிறது.

இப்படிப்பட்ட குழப்பங்கள் இந்நூலின் தலைமுதல் கடைசி வரையில் பின்னிக் கிடந்தாலும் யாரும் படிக்கும்படி நூலமைந்து கிடப்பது ஓர் அபூர்வமான விஷயமாகும். தமிழ் நாட்டில் பிறந்துள்ள ஒவ்வொருவரும், ஆண் பெண் குழந்தைகள், படித்தவர் படியாதவர் என்னும் பேதமின்றி யாவரும் கம்பனைப் படிக்கலாம், பாடலாம், நடிக்கலாம், ஆடலாம், அபிநயம் பிடிக்கலாம். இம்மையும் அடையலாம்; பரலோகத்தையும் விடவேண்டியதில்லை. இப்படிப்பட்ட தொரு அருமையான நூல் இவ்வளவு சித்திரவதைக் குள்ளாகி யிருக்கிறதென்பது சகிக்கக்கூடிய தன்று.

செந்தமிழ் மணி நாட்டிடை யுள்ளீர்! சேர்ந்து முற்படுங் கள்! தமிழ் நாடு தமிழுணர்ச்சி பெற்று விளங்கவேண்டு மானல், அதற்கு உலகோர் மதிக்கும்படியானதொரு வாழ்க்கை வேண்டுமானல், ஒன்றுபட்ட மக்களாகித் தமிழ் நன் மக்கள் உயர்வடைய வேண்டுமானல், அது இலக்கிய ஒற்றுமையா லும், தமிழ் மொழி வளர்ச்சியாலுந்தான் முடியும். தமிழ் மக்களிடையே சமயத்தை அடிப்படையாகக் கொண்டதொரு இயக்கத்தால் வளர்ச்சி காண முடியாது; பிளவுதான் வள ரும். அதுதான் இதுவரை கண்ட அநுபவம். சமயச் சார் புடைய நூல் எவ்வளவு அரிய இலக்கியமாக இருந்தாலும் அது தமிழ் மக்களை ஒன்றுபடுத்தும் வலிமை பெற முடியாது; முடியவில்லை. சைவ வைணவப் பிணக்கு ஒன்றுபட முடி யாத அளவில் பிளவை யுண்டாக்கிவிட்டது. சமய உணர்ச்சி வளர ஒரு இலக்கியத்தைக் கையாண்டால் இலக்கியத் தேய்வு தான் ஏற்படும். கம்ப ராமாயணமானது மதக் கோட்பாட்டை

அடிப்படையாகக் கொண்டிருப்பதாகக் கருதப்படாமல், இலக்கியமாகக் கருதப்படுமானுல், தமிழகத்திற்கு ஒப்பற்ற உதவியைச் செய்யமுடியும். அம்மாதிரியான வழிக்கு வரும்படி சைவ வைணவ சமயவாதிகள் கம்ப ராமாயணத்திற்கு விடுதலையளித்துவிடவேண்டியது அவசியமாகும். உண்மையிலேயே இவர்களுடைய தீவிரதரமான பூசலுக்குக் கம்ப ராமாயணம் இடந் தருவதன்று. அதில் கிடக்கும் இடைச்செருகல்களைக் கொண்டு இருக்கிற பாடல்களுக்குத் திரித்துப் பொருள் கூறியும் இடர்ப்பட வேண்டியதில்லை. தவிர இரு குழுவினர்க்கும் ஆதாரம் புகுத்திப் பார்க்கப்படுவதால் சண்டை மிஞ்சுகிறதேயன்றிச் சாதகம் யாருக்கும் கிடைப்பதற்கில்லை என்பதும் கவனிக்கத் தக்கதாகும். பொதுவாக இலக்கிய நூல்களை இலக்கிய நோக்கங்கொண்டே பார்க்கவேண்டும். சமயக் கண்கொண்டு நோக்குவதால் இலக்கிய நயமும் பாராட்டப்பட முடியாமல், சமயத்துறையிலும் உயர்ந்து செல்ல முடியாது போகின்றது.

தமிழ் நூல்கள் எண்ணற்று விளங்குகின்றன. இலக்கிய நயம் நிறைந்து விளங்கும் நூல்களும் பலவாக உள்ளன. ஆனுல் தமிழ் நன்மக்கள் யாவரும் இலக்கியக் கண்கொண்டு பார்க்க அவை இடந் தரவில்லை. அவைகளைக் கையிலெடுக்கும்போதே சமய உணர்ச்சி மேலெழுந்து நிற்கிறது. சமய உணர்ச்சியெழுந்த பின்னர் இலக்கியம் முக்கியத்வமடைய முடியாது போகின்றதை அநுபவத்தில் காண்கிறோம். கம்ப ராமாயணம் சமயத்தை மக்களுக்கு உணர்த்த எழுந்த நூலன்று. இலக்கிய உணர்ச்சியோடு பிறந்து அதனையே நமக்கும் அளிக்கின்றது. எனவே கம்பனை மட்டுமாவது இலக்கிய நூலாக்கச் சமயவாதிகள் கண்ணியத்துடன் உதவி புரிதல் அவசியமாக இருக்கிறது.

# கம்பன் கவிதை

தமிழ் நாட்டில் இலக்கியச் செல்வர்களான நல்லறிஞர் பல்லோர் இருக்கின்றனர். கம்பனை நல்ல மாதிரியாகக் காண விழைவோரும் பலருளர். கம்பனில் நல்ல பாட்டுக்கள் என்று தோன்றியதைத் திரட்டி வெளியிடவும் சிலர் முற்பட்டிருக்கின்றனர். அவருள் வ. வெ. சு. ஐயரும், வெ. ப. சுப்பிரமணிய முதலியாரும் முக்கியமானவர்கள். இவர்களின் நூல்கள் தமிழ் நாட்டில் கம்பனைப் படிக்க விரும்புவாருக்குப் பேருதவி செய்துள்ளன. அது மட்டுமன்று. கம்பனில் ஆர்வமில்லாதாருக்கும் ஆர்வ மூட்டுகின்றன.

இப்பொழுது அவசரமான தேவை யாதெனில் சுத்தமான கம்ப ராமாயண மூலப் பதிப்பொன்று வெளிவர வேண்டும். இது ஒரு பெரு முயற்சி யென்பதில் ஐயமில்லை. இதை வெளியிடத் தகுதியுள்ளோர் மிகச் சிலரேயாவர். அவர்கள் இம் முயற்சியில் ஆர்வம் கொண்டிருக்கின்றார்கள் என்பதிலும் சந்தேகமில்லை. இருக்கிற சங்கடம் ஒன்றே. சரியான பிரதி யொன்று எப்படி வெளியிடுவது? பிரதி வெளிவந்தால் வாதப் பிரதிவாதம் வானையளாவுமே!

இதற்குப் பயந்து இனி முடியாது. நல்ல பதிப்பு வர வேண்டும். யுனிவர்ஸிட்டியில் ஏடுகள் பல இருக்கின்றன. தனித்தனியாகப் பலரிடமும் ஏடுகள் இருக்கின்றன. கம்பனை நன்கு கற்று அவன் பாடலோடு கலந்து உணரும் சக்திவாய்ந்த அறிவாளிகளைப் பொறுக்கி எடுப்பதென்றால் ஒருவரின் கைவிரல்களால் அவர்களின் தொகையை எண்ணிவிட முடியும். இவர்கள் ஒரு குழுவினராக இருந்து இப்பொழுது இருக்கிற கம்ப ராமாயணத்தை வடிகட்டி எடுத்து நல்கவேண்டுவது அவசியமாகும். இற்றைத் தமிழ் நாட்டில் தமிழிலக்கிய வழியில் செய்யப்படவேண்டிய உதவிகளில் இது சிறந்ததென்று கூறவேண்டுமா? கம்ப ராமாயணத்தைத் தொட்டு

வெளியிட முற்பட்டால் எதிர்ப்பு வரவே செய்யும். எதிர்ப்பதில் நம் தமிழ் மக்கள் - நம் சமயவாதிகள் - தமிழ்ப் பண்டிதர்கள் ஆகிய பலரும் தேர்ச்சி பெற்றிருக்கிற மாதிரி எவருமில்லையென்று கூரைமேல் நின்று, உரத்த குரலெடுத்துச் சொல்லிக்கொள்ளும் உரிமை ஏகபோகமாக நமக்கிருக்கிறது. ஆதலால் அதை நிறுத்திவைக்கலாம். ஒரு நல்ல கமிட்டியை அமைக்கலாம். அதிலிருந்து புத்தகத்தை வெளியிடலாம். வெளியிடும் கூட்டத்தார்தான் யார்? தமிழ்நாட்டுத் தண்ணீர் குடித்தவர்கள்தாம் அன்றோ?



## பாகம் - உ

பாவின் சுவைக்கட லுண்டெழுந்து - கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே - நூலின்
நன்னய முற்றுந் தெளிகுவமே.



# ௬. மிதிலைக் காட்சி

[ரா. பி. சேதுப் பிள்ளை, பி.எ., பி.எல்.,
தமிழ்ப் பேராசிரியர், சென்னைச் சர்வகலாசாலை.]

மாலைப் பொழுதில் மெல்லிய தென்றல் மிதிலைமா நகரில் வீசுகின்றது. மாடங்களில் அமைந்த மணிப் பூங்கொடிகள் அசைந் தாடுகின்றன. அரசவீதியின் இருமருங்கும் வரிசையின் விளங்கிய வீடுகளினின்றும் எழுந்த வீணையொலி வானின் வழியே தவழ்ந்து வருகின்றது. முத்துப்போற் பூத்து, மரகதம்போற் காய்த்து, பவழம்போற் பழுத்து இலங்கும் கமுகு மரத்திற் கட்டிய ஊஞ்சலில் பருவ மங்கையர் பாடி ஆடுகின்றார். பூஞ்சோலைகளில் பளிங்கு போன்ற பந்துகளை வீசிப் பிடித்துப் பாவையர் விளையாடுகின்றார். அரங்குகளில் நடனமாதர் கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்லக் களிநடம் புரிகின்றார். இத்தகைய இன்பம் நிறைந்த அணிவீதியில் கோமுனிவர் முன்னே செல்கின்றார். மஞ்செனத் திரண்ட மேனியும் கஞ்சமொத் தலர்ந்த கண்களும் வாய்ந்த இராமன் அவர் பின்னே செல்கின்றான். பொன் மேனி வாய்ந்த இலக்குவன் அவன் பின்னே போகின்றான்.

க

அப்பெரு வீதியில் அமைந்த கன்னிமாடத்தின் மேடையிலே மிதிலை மன்னன் மகளாய சீதை மெல்லிய பூங்காற்றின் இனிமையை நுகர்ந்து இன்புறுகின்றாள். அருகே

அமைந்த அழகிய துறையில் அன்னம் பெடையோடு ஆடக் கண்டு களிக்கின்ருள். அந்நிலையில் கன்னிமாடத்தின் மருங்கே செல்லும் கமலக்கண்ணன் மேடையிலே இலங்கும் மின்னெளியை நோக்குகின்ருன். பருவமங்கையும் எதிர் நோக்குகின்ருள். இருவர் கண்நோக்கும் இசைகின்றது; காமனும் ஒரு சரம் கருத்துற எய்கின்ருன். பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணிப்புற்ற இராமன், காதலை மனத்திற் கரந்து, வீதியின் வழியே சென்று மறைகின்ருன்.

சீதையின் கண்வழிப் புகுந்த காதல் நோய் பாலுறு பிரையெனப் பரவுகின்றது. வீதிவாய்க் கண்ட வீரனது கோலத்தைத் தன் உள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்க்கின்ருள். காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலையில் மலரும் மையல் நோயால் நையலுறுகின்ருள். அகத்தில் நிறைந்து நின்ற அஞ்சன வண்ணத்தை அந்திமாலையிற் கண்டு நெஞ்சம் தளர்கின்ருள். இராப் பொழுதில் எங்கும் அமைதி நிலவுகின்றது. உறக்கமின்றி வாடி வருந்துகின்ருள். அருகிருந்த சோலையில் ஓர் அன்றில் பறவை அரற்றுகின்றது. துணையின் பிரிவாற்ருது அரற்றிய பறவையின் குரல் சீதையின் காதலைக் கிளருகின்றது. அப்போது மங்கை அக் குரலெழுந்த திசையை நோக்கி,

'வெளிநின் றவரோ போய்மறைந்தார் விலக்க ஒருவர் [தமைக்காணேன்
எளியள் பெண்என் றிரங்காதே எல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யும் மன்மதனுர் உனக்கிம் மாய முரைத் [தாரோ
அளியன் செய்த தீவினையே அன்றி லாகி வந்தாயோ!'

என்று பழிக்கின்ருள். அந்நிலையில் வெண் திங்கள் வானத்திற் கதிர் வீசி எழுகின்றது. சீதையின் காதல் மேன்

மேலும் பொங்குகின்றது. கரு நெருப்பாய்த் தோன்றிய இருளின் இடையே எழுந்த வெண்ணெருப்பே என்று வெம்மை விளைத்த விண்மதியை வெறுக்கின்றாள். அடியுண்ட மயில் போல் அமளியிற் குழைந்து விழுகின்றாள். இராப் பொழுது இவ்வாறு கழிந்தொழிகின்றது. காலையில் எழுந்த கதிரவன் ஒளியால் கன்னிமாடத்தி னருகே அமைந்த பொய்கையில் செங்கமலங்கள் இதழ் விரிந்து மலர்கின்றன. இரவு முழுதும் கண்ணுறங்காது வருந்திய சீதை சிறிது களைப்பாறுமாறு அக் கமலப் பொய்கையின் அருகே செல்கின்றாள். ஆண்டு மலர்ந்து நின்ற செந்தாமரை மலர்களில் தன் காதலனது கண்ணின் நிறத்தைக் காண்கின்றாள். அம் மலர்களைச் சூழ்ந்து படர்ந்திருந்த தாமரை யிலைகளில் தன் அன்பனது மேனியின் நிறத்தைக் காண்கின்றாள். கண்ணுளே நின்ற காதலனது கண்ணின் நிறமும் மேனியின் வண்ணமுங் காட்டி ஒருவாறு மனவாட்டம் தீர்த்த கமலப் பொய்கையை நோக்கி,

'பெண்இவண் உற்ற தென்னும் பெருமையால் அருமை யான
வண்ணமும் இலைக ளாலே காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்
தண்ணறுங் கமலங் காள்!என் தளிர்நிற முண்ட கண்ணின்
உன்னிறம் காட்டி நீர்என் உயிர்தர உலோவி னீரே!'

என்று முறையிடுகின்றாள்.

உ

மிதிலை மாநகர் வீதியில் நடந்து சென்ற மூவரும் மன்னன் மாளிகையை அடைந்து தனித்தனியே கண்ணுறங்கச் செல்கின்றார்கள். கன்னிமாடத்திற் கண்ட மயிலுடைச் சாயலாளை மனத்திடை வைத்த நம்பியின் கண்ணிலும் கருத்தி

னும் அக் கன்னியே இலங்குகின்றாள். யாரும் யாவையும் இனிதுறங்கும் இராப்பொழுது முழுவதும் நெடுந் துயரால் நலிகின்றான். அவன் காணும் பொருளெலாம் அவள் பொன் னுருவாகின்றன. அந்நிலையில் நம்பியின் உள்ளத்தில் ஓர் ஐயம் பிறக்கின்றது. மாடத்திற் கண்ட மங்கை தான் காத லித்தற்குரிய கன்னியோ அல்லளோ என்று திகைக்கின்றான். அல்லளாயின் எல்லையற்ற தன் காதல் என்னாகும் என் றேங்கு கின்றான். சிறிது சிந்தனையில் ஆழ்கின்றான். 'என் உள்ளம் நல்வழியிற் செல்லுமே யல்லாது அல்வழியிற் செல்லாது. ஆதலால் என் மனம் பற்றிய மங்கை யான் காதலித்தற்குரிய கன்னியேயாதல் வேண்டும்' என்று தடுமாறும் உள்ளத்தைத் தேற்றுகின்றான். பொழுது புலர்ந்ததும் முனிவரும் மைந் தரும் நீராடி நியமம் முடித்து மிதிலை மன்னனது வேள்விச் சாலையை அடைகின்றார்கள்.

தன் வேள்வியைச் சிறப்பிக்க வந்த தவமுனிவனை மிதிலை மன்னன் உரிய முறையில் வரவேற்கின்றான். மூவரும் முறையாக அமர்ந்த பின்னர் மைந்தர் இருவரையும் மன்னன் மனமகிழ்ந்து பார்க்கின்றான். அவர் முகத்தின் அழகினைக் கண்ணால் முகந்து பருகுகின்றான். அவர் யாரென்று முனிவ ரிடம் வினயமாக வினவுகின்றான். 'அரசே, இவர் விருந்தி னர்; உன் வேள்வி காண வந்தார்; வில்லுங் காண்பார்; பெருந் தகைமைத் தசரதன்தன் புதல்வர்' என முனிவர் மாற்ற முரைக்கின்றார். அவர் கருத்தறிந்த மன்னன் அகமகிழ்ந்து சிதையின் மண வில்லை எடுத்துவரப் பணிக்கின்றான். மலை போன்ற வில் மைந்தர் முன்னே வருகின்றது. அவ்வில்லின் தன்மையையும் அதனை வளைக்கும் திறலோன் அடையும் பரிசின் பெருமையையும் சதானந்த முனிவன் விரித் துரைத்து,

'அன்றுமுதல் இன்றளவும் ஆரும்அந்தச் சிலையருகு
சென்றுமிலர் போயொளித்தார் தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமுமிலை என்றிருந்தேம் இவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காது'

என்கின்றான். எல்லாமறிந்த கோமுனிவர் சடைமுடி துளக்கி இராமன் திருமுகத்தை நோக்குகின்றார். குறிப்பிற் குறிப் புணரும் வீரன், முனிவர் நினைந்தவெல்லாம் நினைந்து, நெடுஞ் சிலையை நோக்கி அடலேறு போற் செல்கின்றான். அங்கிருந் தார் அனைவரும் அசைவற்றுக் கண்ணிமையாது நோக்குகின் றார். மலையெனக் கிடந்த சிலையை வீரன் மாலை போல் எடுக்கக் காண்கின்றார். இற்ற பேரோசை கேட்கின்றார். மாநிலம் நடுங்க முறிந்து விழுந்த சிலை கண்டு மன்னவர் கண்மாரி பொழிகின்றார்: விண்ணவர் பூமாரி சொரிகின்றார்.

௩

மணவில்லை வீரன் இறுத்தான் என்னும் செய்தியைச் சீதையிடம் அறிவிக்குமாறு நீலமாலை யென்னும் தோழி விரைந்தோடிச் செல்கின்றாள். ஆடையும் அணிகளும் அலைந்து குலையக் கன்னிமாடத்தை யடைந்த நீலமாலை, வழக்கம் போல் அடிபணிந்து அடங்கி நில்லாது, அளவிறந்த மகிழ்ச்சியால் ஆடுகின்றாள்; பாடுகின்றாள். மதுவுண்டவள் போல் களித் தாடும் மாலையை நோக்கி, 'சுந்தரி, என்ன நிகழ்ந்தது, சொல்!' எனச் சீதை வினவுகின்றாள். வில்லொடிந்த செய்தியை நேரா கக் கூறாது, நீலமாலை நெடுங்கதை நிகழ்த்துகின்றாள். 'மாதரசி, தசரதன் என்னும் பெயர் வாய்ந்த மன்னன் ஒரு வன் உள்ளான்; அவன் கரி, பரி, தேர், காலாள் என்னும் நால்வகைச் சேனையுடையான்; சிறந்த கல்வி கேள்வியுடை

யான்: நீதிவழுவாத நிருபன். மாரி போல் வழங்கும் வள்ளல். அன்னவன் மைந்தன் அனங்கனையும் வெல்லும் அழகுடையான்; மரா மரம் போல் வலிய தோளுடையான்; திருமாலின் குறியுடையான். இராமன் என்னும் பெயருடையான். அவன் தம்பியோடும் முனிவரோடும் நம் பதி வந்தெய்தினான். திரிபுரமெரித்த புனிதன் எடுத்த வரிசிலையைக் காண விரும்பினான். வில்லை எடுத்து வருமாறு நம் மன்னன் பணித்தான். அது வந்தடைந்தது. முன் பழகியவன் போல் நொடிப் பொழுதில் அதனை எடுத்தான், வளைத்தான். கண்டோர் நடுக்குற வரிசிலை முறிந்து வீழ்ந்தது!' என்று சொல்லி முடிக்கின்றாள்.

இவ்வாறு நீலமாலை நெடுங்கதை நிகழ்த்தும் பொழுது சீதையின் மனம் ஊசலாடுகின்றது. முனிவனோடும் தம்பியோடும் போந்த தசரத ராமன் மணவில்லை இறுத்தான் என்று நீலமாலை கூறுகின்றாள். 'வில்லை வளைக்கும் திறல் வாய்ந்த வீரனுக்கு என்னை மணஞ்செய்து கொடுப்பதாக வாய்மை தவறாத மன்னன் வாக்களித்துள்ளான். இன்று வில்லை யிறுத்த வீரன் நான் வீதிவாய்க் கண்டு காதலித்த நலமகனோ? அன்றி வேறொருவனோ? முனிவனோடு வந்த மேக வண்ணன், தாமரைக் கண்ணன், சிலையை ஒடித்தான் என்று தோழி கூறினாள். ஆம், நான் கண்ட காதலனே அவன்!' என்று உள்ளம் தேறி உடல் பூரிக்கின்றாள். 'ஒருகால் இவ் அடையாளம் எல்லாம் அமைந்த வேறொரு வீரன் வில்லை ஒடித்திருப்பானோ? அவன் வேறு, இவன் வேறு என்றால் என் செய்வேன்? நான் வீதியிற் கண்ட காதலனும் வில்லை யொடித்த வீரனும் ஒருவனே யெனில் அவனை மணம் புரிவேன்; இன்றேல் ஆவி துறப்பேன்!' என்று உறுதி கொள்கின்றாள்.

௫

வில்லை யொடித்தமையால் மிதிலை மன்னன் மங்கையை மணத்தற்குரியனாய இராமன் மாளிகையில் விருந்தினனா யிருக்கின்றான். மணமகனாக அனைவராலும் மதிக்கப்படுகின் றான். எனினும் அவன் உள்ளம் அமைதியுறவில்லை; வில் லிறுத்ததன் பயனாகப் பெற்ற மங்கை, மேடையிலே கண்ட மாதோ, அல்லளோ என்னும் ஐயத்தால் அலமருகின்றது. அம் மங்கையை நேராகக் கண்டாலன்றி ஐயம் தீருமாறில்லை எனக் கருதி அவ்வேளையை எதிர்பார்க்கின்றான். திருமணத் தைச் சிறப்பித்தற்குரிய அரசரும் பிறரும் மிதிலையில் வந்து நிறைகின்றார்கள். தசரத மன்னன், மிதிலையர்கோன் அழைப் பிற்கிணங்கி, நால்வகைச் சேனையோடும் உற்றார் உறவின ரோடும் எழுந்து வருகின்றான். கோசலநாட்டு வேந்தனை மிதிலை வேந்தன் அன்புடன் வரவேற்கின்றான். இருபெரு வேந்தரும், குறுநில மன்னரும், அருந்தவ முனிவரும் அரச சபையில் நிறைந்திருக்கிறார்கள். சீதையை அலங் கரித்துச் சபைக்கு அழைத்துவருமாறு மிதிலை மன்னன் பணிக்கின்றான். இயற்கை யழகு வாய்ந்த சீதையை நல்லணிகளால் அழகு செய்து தோழியர் அழைத்து வருகின் றார்கள். அன்னமும் அரம்பையரும் நாண அழகுற நடந்து சீதை மணி மன்றத்தினுள்ளே வருகின்றாள். அங்கு நிறைந்திருந்த மாந்தர் விழித்த கண் ணிமையாது நோக்கு கின்றார். வில்லை யிறுத்த வீரன் மங்கையைக் காண்கின்றான். தான் முன்னமே கண்டு காதலித்த கன்னியே அவள் என்றறிந்து உளங் குளிர்ந்து விம்முகின்றான். திருமகளுக் குரிய திருமாலே தலைமகனாக வந்தான் என்று வசிட்டமா முனிவர் வாயார வாழ்த்துகின்றார். 'நலமெலாம் ஒருங்கே

யமைந்த இந்நங்கை பரிசென்றால் இராமன் இச்சிலையை மட்டுமோ ஒடிப்பான்? ஏழு மலையையும் தகர்ப்பானே!' என்று கோசிக முனிவர் இறுமாந்திருக்கின்றார். அங்கிருந்த குறுநில மன்னர் முதலாயினோர் கைகூப்பித் தொழுகின்றார் கள். சீதை அழகுற நடந்து தாதை யருகில் இட்ட தனி யாசனத்தில் அமர்கின்றாள்.

மன்றத்தின் நடுவே யமர்ந்தும் சீதையின் மனத்தில் நிகழ்ந்த ஐயம் தீரவில்லை. வில்லிறுத்த வீரனை நோக்கக் கண்டு ஐயத்தை அகற்ற ஆசைப்படுகின்றாள். அவ் வாசையை நாணம் இடைநின்று தடைசெய்கின்றது. கண்ணெடுத்துப் பார்க்குமாறு உந்தும் காதலைப் பெண்மைக்குரிய நாணம் எதிர்த்து அடக்குகின்றது. ஆசையும் அழிவுறாது பெண்மை யும் வசையுறாது கடைக்கண்ணால் நோக்குதல் சாலும் என் றெண்ணுகின்றாள். நடந்து வருகையில் நிலை குலைந்திருந்த கை வளைகளைத் திருத்தத் தலைப்படுகின்றாள். சீதையின் திருமுகச் செவ்வியை நோக்கியிருந்த கண்களெல்லாம் அவள் கை வளை வரிசையில் ஈடுபடுகின்றன. அந்நிலையில் எதிரே இருந்த இராமனைக் கடைக்கண்ணால் கண்டு இன்புறுகின்றாள். கன்னி மாடத்தின் மேடையிலே நின்று கண்ட காதலனே வில்லை யொடித்த வீரன் என்று தெளிகின்றாள். கண் வழிப் புகுந்து தன் கருத்தில் உறைந்த காதலன் வடிவத்தைத் தன் னெதிரே அமர்ந்திருந்த இராமனிடம் கண்டு களிக்கின்றாள். இத்தகைய காதலர் இருவர்க்கும் மறுநாட் காலையில் திரு மணம் நிகழ்கின்றது.

மிதிலைக் காட்சியென்னும் காதலர் காட்சியில் கம்பர் அமைத்துள்ள நாடகக் கூறுகள் யாவர்க்கும் நன்கு விளங் கும். உருவிலும் திருவிலும் ஒத்த தலைமகனும் தலைமக ளும் ஊழ்வினைப் பயனால் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டுக்

காதலுறுதலும், அம் மையலை மனத்திலடக்கி நையலுறுத லும், பின்பு அதனை யறிந்த பெற்றோர் காதலர் இருவருக்கும் திருமணம் முடித்தலும் தமிழ்நாட்டுப் பழைய மணமுறை யாகும். இன்னும், ஓர் ஆடவனைக் காட்சியாற் காதலுற்ற பின்னர் மற்றொருவனை மனத்திலும் தீண்டாத மாட்சி நிறை யமைந்த மங்கையர்க் குரியதாகும். அறநெறி திறம்பாத அருங்காதலை மங்கையர் உயிரினும் உயர்வாகப் போற்றுவர். இத்தகைய அறநெறிக்குச் சான்றாக நின்ற சீதையின் காதலை ஓர் களவியல் நாடகமாக அமைத்தருளிய கம்பர் கவித்திறம் அறிந்து போற்றத் தக்கதாகும்.



# கo. கோசலையின் உள்ளம்

[மு. அருணசலம், பி. ஏ.]

கம்பர் பாடிய கம்ப ராமாயணம் தமிழ் நாட்டில் நெடுங் காலமாகப் பிரசித்தமா யிருக்கிறது. இருந்தபோதிலும், ஒரு புண்ணிய கதையாக அது கருதப்பட்டு வந்திருக்கிறதே யொழிய, அதன் இலக்கிய விசேஷம் முழுவதையும் தமிழர் உணர்ந்து போற்றுகிறார்களென்று சொல்ல இடமில்லை. தமிழ் நாட்டில் வழங்கிவந்த இராமருடைய சரித்திரத்தில் வெகுவாக ஈடுபட்டு, அதை அனுபவித்து ஆனந்தித்து வந்த கம்பர், தம்முடைய ஆனந்த மிகுதியினால் அந்தச் சரித்திரத் தைப் பாட்டாகப் பாடினார். அந்தப் பாட்டே கம்ப ராமா யணம். பழைய கதையில் வரும் பாத்திரங்களை நாம் நேரி லேயே பார்த்ததாக எண்ணக்கூடிய முறையில் கம்பர் சிருஷ் டித்ததை நாம் காணும்போது, அந்தப் பாத்திரங்களைக் கொண்டு புதுக் கதை யொன்றை அவர் சிருஷ்டித்திருக்கிறார் என்றே நினைக்கத் தோன்றுகிறது. கம்ப ராமாயணத்தி லுள்ள ஒவ்வொரு பாத்திரத்தையும் கவனித்துப் பார்த்தால், இந்த உண்மை புலனாகும். இராமனுடைய தாயாகிய கோசலை யைக் கம்பர் எவ்வாறு அமைத்திருக்கிறாரென்று ஒரே ஒரு பாட்டினின்றும் நாம் தெளிவாய் அறிய முடிகிறது. இந்தப் பாட்டைப் பார்ப்பதற்கு முன், அதுவரையில் நடந்துள்ள நிகழ்ச்சிகளில் கம்பர் கோசலையைப்பற்றி என்ன சொல்லுகிறா ரென்பதைப் பார்ப்போம்.

இராமனுக்கு முடி சூட்டுவதென்று தசரத மன்னன் நிச்சயித்துவிட்டான். இதை யறிந்த நகர மாந்தர் யாவரும் மிக்க மகிழ்ச்சி யடைகிறார்கள். முக்கியமாக, மங்கையர் நால்வர் மிகுந்த குதூகலத்தோடு ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும், வீதி வழியே உற்சாகமாய்ச் செல்கிறார்கள். ஆனந்த மிகுதியினால் தெருக்களில் இவர்கள் செய்யும் ஆரவாரத்தைக் கோசலை கேட்கிறாள். 'உனது புதல்வனாகிய இராமனுக்கு நாளை முடி சூட்டுவதாக அரசன் நிச்சயித்திருக்கிறான்' என்ற சந்தோஷ சமாசாரத்தை அவர்கள் தெரிவிக்கிறார்கள். தனது செல்வ மகன் அரசனாகப் போகிறான் என்ற வார்த்தையைக் கேட்டதும் கோசலைக்கு அதிக மகிழ்ச்சி உண்டாகிறது. உவகைக் கடலிலேயே அமிழ்ந்துவிடுகிறாள். ஆனால் மறு கணத்திலேயே, அந்த உவகைக் கடல் வற்றி வரண்டு போய் விடும்படியாக, வடவைக் கனலை யொத்த கொடுமையுடைய ஓர் அச்சம் அவள் உள்ளத்தில் புகுந்துவிடுகிறது. அதாவது தன் நாயகனாகிய தசரதன் துறவு பூண்டு காட்டுக்குப் போய்விடுவான் என்ற அச்சந்தான். கணவன் காட்டுக்குப் போவதை நினைத்தவுடன் தோன்றும் பரிதாபம் காரணமாக, தாய்த்தன்மைகூட மறைந்துவிடுகிறது; இராமனுடைய பட்டாபிஷேகச் செய்தியை அனுபவிக்க முடியாமல் போய் விடுகிறது.

காட்டுக்குப் போகுமுன், இராமன் தாயிடம் விடை பெற வருகிறான். 'முடிபுனைந்த கோலத்தோடு புதல்வன் வருவான், கண்குளிரப் பார்த்து மகிழலாம்' என்று எண்ணி யிருக்கும் கோசலை முன் இராமன் வந்து வணங்குகிறான். அவனுடைய கோலத்தைப் பார்த்ததுமே, முடி சூடுவதற்கு இடையூறு ஏதோ நேரிட்டிருக்கிறதென உணர்ந்து அவள் சஞ்சலமடைகிறாள். 'நான் முடி சூடவில்லை, பரதன் முடி

சூடுவான்' என்ற விஷயத்தைக் கேட்டால் தாய் வருந்து வாளே என்று அஞ்சி, இராமன் தான் சொல்லவந்த செய்தியை நேரே சொல்லத் தயங்குகிறான்: 'உன் பிரிய மகன் இருக்கிறானல்லவா, பரதன், என் தம்பி! அவனுக்குப் பட்டம் கட்டவேண்டு மென்பது மன்னன் கட்டளை' என்ற வார்த்தைகளால் அவ்விஷயத்தை மெல்லச் சொல்லுகிறான். கேட்டாள் கோசலை. அவள் உள்ளத்தில் எழுந்த முதல் எண்ணம், 'மூத்தவன் இருக்க இளையவன் முடி புனைவது முறையல்லவே' என்ற நியாயம் பற்றிய உணர்ச்சி யொன்றே என்று கம்பர் கூறுகிறார். அடுத்த விநாடியே இந்த எண்ணமும் அவள் மனத்தைவிட்டு அகன்று, அரசாளுவதற்கு இராமனைவிடப் பரதனே மிகவும் பொருத்தமானவன் என்று சொல்லுகிறாள். 'பரதன் உன்னைவிடக் குணத்தில் மேலானவன். குறைவே இல்லாதவன்' என்பவை அவள் இராமனிடம் கூறும் வார்த்தைகள். தனது மகன் இராமன் என்பதாகவும், கைகேயி புத்திரன் பரதன் என்பதாகவும் மனத்தில் இருக்கக்கூடிய வேற்றுமையைத் தனது களங்கமற்ற அன்பினால் மாற்றியவள் கோசலை என்று கம்பர் கூறும் போது, அதன் உண்மை முழுவதையும் அவளுடைய வார்த்தைகளிலிருந்து நாம் தெளிவாய் உணரமுடிகிறது. தன் மகனுக்கு வரவிருந்த அரச வாழ்வு மற்றொருத்தியின் மகனுக்கு மாற்றப்பட்டது எனக் கேட்டதும், அவள் மனம் சிறிதேனும் கலக்க மடையவில்லை. ஒருவேளை இராமனுக்கு இந்த நிகழ்ச்சியினால் ஏதேனும் மனவருத்தம் இருக்குமோ எனக் கருதி, கோசலை அவனுக்குத் தேறுதல் சொல்ல ஆரம்பிக்கிறாள்: 'இராமா! அரசன் இட்ட கட்டளையை மறுக்காமல், இராஜ்யத்தை உன் தம்பிக்கு நீ கொடுத்ததாகவே கருதி, கலந்து வாழ்வாயாக' என்று புத்திமதி கூறுகிறாள். இந்த

வார்த்தைகளிலிருந்து, கௌசல்யா தேவியினிடத்தே எவ்வளவு சிறந்த சமதிருஷ்டியுள்ள இதயம் அமைந்திருக்கிற தென்பது புலனாகிறது.

இராமன் நாட்டைத் துறந்து வனம் புகுந்துவிட்டான் என்பதை யறிந்த தசரத மன்னன் உயிர் துறக்கிறான். அப்போது கோசலை அடைந்த துயரத்தை யார்தான் கூற முடியும்? 'நம்மை நீத்து அரசன் போய்விட்டானே! இனி நமக்குத் தஞ்சம் யாதுளது?...நாயகனே! உன்னுடைய வேள்விகளின் பயனாகக் கிடைக்கும் சுவர்க்க போகங்களை அனுபவிக்க வானுலகு சென்றுவிட்டாயோ!' என்று அரற்றுகிறாள். மன்னன் உயிர் நீத்ததை இவ்வாறு பலவிதமாகக் கோசலை எண்ணி வருந்தும்போது, இந்தத் துன்பத் துக்கெல்லாம் காரணமான கைகேயியைத் தன்னெதிரில் பார்க்க நேரிடுகிறது. அவளிடம் கோசலைக்கு இயல்பாக இருந்த அன்பு மிகுதியினால், அவளுடைய சிறப்பியல்புகளும் பெருமைகளும் கோசலையின் மனத்தில் தோன்றுகின்றன. கைகேயியினிடம் தசரதன் கொண்டிருந்த காதல், கைகேயிக்கு தசரதனிடமிருந்த அன்பு, அவள் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்த பெருமையான நிலை முதலிய விஷயங்கள் எல்லாம் கண்முன் வருகின்றன. கைகேயிக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் பரிதாப நிலையை நோக்குகிறாள். தன்னுடைய பரிதாப நிலை மறைந்துபோய், கைகேயியின் நிலை ஒன்றே கோசலையின் மனத்தைத் தாக்குகிறது. அவிழ்ந்து விழுந்து கிடந்த கூந்தலோடு கைகேயி இருக்கும் கைம்மைக் கோலம் ஒன்றே அவளுடைய இரக்கத்துக்கு லக்ஷியமாய் விடுகிறது. அவளுக்குக் கோபமே தோன்றவில்லை. தன் செல்வ மகன் முடி துறப்பதற்கும், பின்பு கொடிய காட்டுக்குப் போவதற்கும், - இதையெல்லாம்விடக் கொடுமை - தன் நாயகன் உயிர் துறப்பதற்கும்

காரணமான கைகேயியின் அறிவில்லாத செயல் கோசலை மனத்தில் பச்சாத்தாபத்தை உண்டாக்கிவிடுகிறது. அவளுடைய மனப்பாங்கு எவ்வளவு உயர்ந்த பாவமுள்ளது!

'வடித்தாய் கூந்தல், கேகயன் மாதே!'

என்று கோசலை கூறி இரங்கும் வார்த்தைகள் இளமையும் சிறப்பும் பொருந்திய கைகேயியின் பழைய நிலைமையையும், இப்போது கூந்தலை வடித்துக் கிடக்கும் அவளது கைம்மைக் கோலத்தையும் அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்றன. அடுத்தாற்போல், 'கைகேயீ! உனக்கு ராஜ்யமா கிடைத்து விட்டது? அல்ல! கைம்மை அல்லவா கிடைத்திருக்கிறது! நீ பெற்ற அழியா வரத்தைத்தான் என்ன சொல்ல! என்ன அபூர்வமான காரியத்தை நீ செய்து முடித்துவிட்டாய்!' என்று மிக்க இரக்கத்தோடு கோசலை சொல்லும் பாவத்தை,

' . . . . . . . . . . . . . . மகிழ்வோடே  
பிடித்தாய் வையம். பெற்றனை பேரா வரம்!என்னே!  
முடித்தா யன்றே மந்திரம்!'

என்ற வார்த்தைகளால் கம்பர் தெரிவிக்கிறார். 'என்னே!' என்ற ஒரு வார்த்தை கோசலையின் இரக்க உணர்ச்சி முழுவதையும் தெளிவாய்க் காட்டுகிறது.

தனக்கு நேரும் இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்றாகவே கருதும் உயர்ந்த மனப்பான்மையுடைய கோசலைக்குத் தசரத சக்கரவர்த்தி இறந்ததனால் உண்டாகிய துயரமே பெரிது. ஆனால், கைகேயிக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்பட்டுள்ள தாழ்வைப் பார்த்தவுடன் கோசலையின் மனம் இளகி, அந்தத் துயரமும் ஓரளவுக்கு மறைந்து, கைகேயியினிடத்

துப் பிறந்த இரக்கம் - பரிதாபம் - ஒன்றுதான் மிகுதியாக நிற்கிறது. இந்தச் சிறந்த பாவம் மிக உண்மையானது. இது மிக அபூர்வமா யிருந்தபோதிலுங்கூட, உயர்ந்த மனோநிலை உள்ளவர்களிடம் இத்தகைய சிறந்த பண்பைக் கண்டு நாம் அனுபவித்திருக்கிறோம். இந்த மேலான உண்மை பாவத்தைக் கம்பர் இந்தக் கட்டத்தில் கோசலைக்கு எற்றி, மேற்சொன்ன வார்த்தைகளைச் சொல்லவைக்கிறார்.

ஒரு கவிக்கு விஷயங்களைத் தொடர்ந்து கூறிவருவதை விட ஏதாவதொரு உணர்ச்சியை நேர்முகமாக வருணிப்பதென்பது மிகக் கடினமான காரியம். கோசலை தன்னுடைய துக்க மிகுதியால் வருந்தும் போது, கைகேயியின் செயலால் மனம் நொந்து, அவளுடைய மதியீனத்தைப் பார்த்து இறங்குவதை இப்போது பார்த்தோம். ஆனால், கோசலையின் துயரந்தான் எத்தன்மையது என்றால், அதை வார்த்தைகளால் சொல்லவும் கம்பர் தயங்குகிறார். கோசலையின் குண இயல்பை மேற்கண்டவாறு மிக உயர்வாகக் கூறியபின், அவளுடைய சோகத்தை நேரே சில வார்த்தைகளால் சொல்லிவிட அவராலும் முடியவில்லை.

மழையைச் சுமந்துகொண்டு வரும் கறுத்த மேகங்களினிடையே, பளீரென்று வாள் வீச்சுப் போல் ஒரு சிறு மின்னல் தோன்றி நெளியும் காட்சியைப் பார்த்துக் கம்பர் வெகுவாய் அனுபவித்திருக்கிறார். உயிர் துறந்த தசரத மன்னனுடைய மார்பின்மேல் கோசலை விழுந்து துவளும் தோற்றமானது அவருக்கு மின்னலை நினைவூட்டுகிறது. இப்படிச் சோக மயமாய்த் துடித்துத் துவளும் கோசலை கைகேயியின் நிலையைப் பார்த்துப் பரிதாபப்படுகிறாள். இது அவளுடைய குணத்துக்கு எவ்விதத்திலும் இயல்பாயுள்ள பாவம்; கோசலையைக் கம்பர் அப்படியே சிருஷ்டித்திருக்கிறார்.

'வடித்தாய் கூந்தல், கேகயன் மாதே! மகிழ்வோடே
பிடித்தாய் வையம்! பெற்றனை பேரா வரம்!என்னே!
முடித்தா யன்றே மந்திரம்!' என்றுள், முகில்வாய்மின்
துடித்தா லென்ன மன்னவன் மார்பில் துவள்கின்றுள்.'*

இந்த ஒரே பாடலினுல், கோசலையின் குண விசேஷத்தை மிக மேலான தெய்விக நிலையில் நிறுத்துகிறுர் கம்பர். இராமன் வனம் புகுவதன் பயனுக, தசரதன் உயிர் துறக்க நேரிடுகிறது. அளவிட முடியாத துயரம் கோசலைக்கு இருந்த போதிலும், கைகேயியின்மீது கோபம் எழுவதற்குப் பதிலாக, இரக்கந்தான் தோன்றுகிறது. இது அபூர்வமான பாவம்; ஆனுலும் உண்மையான பாவமே. கோசலையைப் பற்றிக் கம்பர் இவ்வாறு கூறுவது நமது கற்பனையையெல்லாம் கடந்துவிடுகிறது. இத்தகைய அருமையான உண்மைக் குண விசேஷத்தைப் பெற்றுள்ள கோசலை இலக்கிய உலகத்திலேயே ஓர் அபூர்வ சிருஷ்டி.



---

* இப் பாட்டில் காணப்படும் பாடம் ஸ்ரீ. டி. கே. சிதம்பரநாத முதலியார் சொல்லியது.

# ௧௧. கம்ப ராமாயணத்து ஒரு செய்யுட்குக் கூறப்படும் சிறப்புப் பொருள்

[ வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ]

ஒரு மொழிக்குச் சிறப்பு, அம்மொழியிலுள்ள நூல்களினாலேயே யென்பது யாவரும் உடன்படும் பொருளாகும். பலருடைய மனத்தையும் கவருந் தன்மை வாய்ந்திருப்பது தான் நூல்கட்கு ஏற்றம். நம் தமிழ் மொழியிற் பல நூல்களிருப்பினும், எப்படிப்பட்டவருடைய மனத்தையும் கவரும் வல்லமை வாய்ந்தவை திருக்குறளும் கம்ப ராமாயணமுமே என்றால், இதனை மறுத்துரைப்பவர் எவரும் இராரென்பது திண்ணம்.

யாவர்க்கும் உதவும் முறையில் அறம் முதலிய மூன்றையும் எடுத்தோதுவதால், திருக்குறள் பலமொழியாளராலும் போற்றப்பட்டுத் தத்தம் மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அந்நூலிற் கூறப்படும் பொருள் உலகியலுக்கு ஏற்றனவாதலாலும், மொழிபெயர்க்குமிடத்துச் சுவை கெடுதலென்பது நேராதாகையாலும், அதனை அங்ஙனம் பலமொழிகளில் மொழிபெயர்த்தல் இயலுவதாயிற்று. கம்ப ராமாயணமென்னும் பெருங் காப்பியமோ, எங்குஞ் சுவை ததும்புவதால் அந்தச் சுவை கெடாது மொழிபெயர்த்தல் இயலாதென்ற காரணத்தாலேயே பலராலும் போற்றப்படினும் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்படவில்லை.

ஆயினும், இந்நூல் கற்றோர் இதயத்தைக் கரைவிக்குந் தன்மையதென்பது கண்கூடாகக் கண்ட பொருள். தமிழ் மொழியிற் பேசும்போது பொருளுணர வல்லாய்ப் பிற மொழிகளிற் புலமை வாய்ந்தோரிடத்து, இந்தக் கம்ப ராமா யணத்து ஒரு பாடலைச் சொல்லிச் சொற்பொருளைச் சொல்லு மிடத்தும் அவர்கள் நெஞ்சை அந்தப் பாடல் கொள்ளை கொண்டுவிடுகின்றதென்பதும் கரதலாமலகமாகும். ஆங்கிலங் கற்றுப் புலமை வாய்ந்தோரும் இந்தக் கம்ப ராமாயணத்தைக் கற்று, ஷேக்ஸ்பியர், மில்டன் முதலியோர் நூல்களினும் இதில் மிகவும் ஈடுபடுவதனாலும், தமிழ் மொழியே யறிந்தோர் இதன் மேம்பாட்டை நன்றுணரலாம். நாமே 'நம்முடையது நன்று' என்று பாராட்டுவதைவிடப் பிறர் பாராட்டுவதன்றோ மேம்பாடு விளைப்பது! இது நிற்க.

கல்வியிற் பெரியன் கம்பனென்று கூறுமாறு தலைசிறந்து விளங்குங் கவிஞர் பெருமானால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற இந்த மாபெருங் காப்பியம் இயற்றிய நாள் முதல் அறிஞர் பல ராலும் போற்றப்பட்டுப் பெருங் குழுவில் தத்தம் பேரறிவுக்கு ஏற்றவாறு ஆங்காங்கு அரும்பொருள் விரித்துச் சொற் பொழிவு நிகழ்த்தி வரப்பெற்றுள்ளது.

இந்த முறையிலே இந்தக் கம்ப ராமாயணத்து அயோத் தியா காண்டத்தில் ஒரு செய்யுளுக்குச் சிறப்புறப் பொருள் விரிக்கப்படுவதை ஈண்டுக் காட்டுவாம். இப் பொருளைப் பற்றி அறிஞர் ஆராய்ந்து கொள்வாராக.

அப்பாடல் வருமாறு:

அருப்பேந்திய கலசத்துணை யமுதேந்திய மதமா
மருப்பேந்திய வெனலாமுலை மழையேந்திய குழலாள்
கருப்பேந்திர முதலாயின கண்டாவிடர் கானுள்
பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்.

இச் செய்யுளில் மூன்றும் அடியில் கருப்பேந்திரம் என்பதற்குச் சாதாரணமாகக் கரும்பாலே யென்று பொருள் கூறுகின்றனர். யானும் அயோத்தியா காண்டத்தின் உரையில் இங்ஙனமே எழுதியுள்ளேன். இதற்கு இவ்வாறு பொருள் கூறுவதைவிட்டு, 'கர்ப்பேந்த்ரஸ் ஸிம்ஹபக்ஷக:' (கர்ப்பேந்திரமென்பது சிங்கத்தை யுண்ணவல்லதொரு விலங்கு) என்று கொண்டால், விலங்குகளுக் கெல்லாந் தலைவனாகிய சிங்கத்தையும் கொன்று உண்ணவல்ல விலங்கு முதலிய கொடிய விலங்குகளைக் கண்டவிடத்தும், சீதாபிராட்டி, மலையையொத்த மாண்பமைந்த தோளின் வலிமையைக் கொண்டவனான ஸ்ரீ ராமபிரானோடும் கானகத்துச் செல்வதால், மனத்தில் அச்சத்தினால் துன்புறுதலென்பது இல்லாமல், அச்சமற்று விளையாடுபவளாய்ச் சென்றாளென்று பொருள்பட்டு இச்செய்யுள் சிறப்புறுதல் காண்க. ஸ்ரீ வால்மீகி பகவான், 'கஜம்வா வீக்ஷ்ய ஸிம்ஹம்வா - வ்யாக்ரம்வா வநமாஸ்ரிதா நாஹாரயதி ஸந்த்ராஸம் - பாஹூ ராமஸ்ய ஸம் ஸ்ரிதா' என்றார். இதன் பொருள் : 'இராமபிரானுடைய தோளை அரணாகக் கொண்ட சீதை வனத்தை யடைந்திருந்த போதிலும் யானையையேனும் சிங்கத்தையேனும் புலியையேனும் பார்த்து அச்சத்தை ஏறிட்டுக்கொள்வது மில்லை' என்பது. அச்சத்தை ஏறிட்டுக் கொள்ளாமைக்குக் காரணம் இராமனுடைய தோள்வலியைத் தனக்கு அரணாகக் கொண்டமையே யென்று இந்த ஸ்லோகத்தில் அருளிச்செய்திருத்தல் நோக்குக.

இவ்வண்ணம் ஸ்ரீவான்மீகி பகவான் அருளிச்செய்திருப்பதை ஸ்ரீ கம்பநாட்டாழ்வார் மனத்துக்கொண்டு, இன்னும் நயம்படக் கூறக் கருதியவராய், சீதாபிராட்டி இராமபிரானுடைய தோள்வலியை யண்டைகொண்டு நிற்றலால் அச்சமாகிய இடரைக் கொள்ளவில்லை யென்பதனோடு நிற்க

வில்லை: காட்டில் திரியும் கொடுவிலங்குகளைக் காண்பது ஒரு விநோதமாகவும் அப் பிராட்டிக்கு இருந்தது என்ற கருத்துப் பட,

> கருப்பேந்திரம் முதலாயின கண்டாளிடர் காணுள்
> பொருப்பேந்திய தோளாளொடு விளையாடினள் போனாள்

என்றார். இவ்வகையாக, நம் கவிஞர் பெருமான் ஸ்ரீ வால்மீகியினும் நயம்பட உரைத்துப் போவதைக் கம்ப ராமாயணத்துப் பலவிடத்தும் காணலாம்.



# கஉ. பரதனும் குகனும்

[ ஊ. சா. வேங்கடராமையர் ]

கம்பர் தமிழ் மக்களுக்குத் தந்தருளிய கருவூலம் இராமாவதாரம் ஆகும். அந்த இராமாவதாரம், தன்னைக் கற்போர்க்கு இராம கதையை அறிவிப்பதுடன், வாழ்க்கையைச் செப்பஞ் செய்துகொள்ளுதற் குரிய பல்வேறு நீதி நெறிகளையும் அறிவிப்பது. இராமாவதாரம் இராமாயணம் என வழங்கப்படுகிறது.

ஸ்ரீமத் இராமாயணத்திலே பரதன், குகன் என்ற இருவர்களின் சந்திப்பு அயோத்தியா காண்டத்தில் நிகழ்கின்றது. அந்த நிகழ்ச்சியால் அறிவிக்கப்படும் பண்பு மக்களாவார் ஒவ்வொருவரிடத்திலும் அமைந்து நின்று பயன்பட வேண்டியது இன்றியமையாததாகும்.

பரதன் கச ரத துரகமாக் கடல்கொள் காவலன் தசரதன் மதலையாய், மணிமாட அயோத்தியில் தோன்றியவன்; ஸ்ரீ ராமபிரானுக்கு இளையவன்; கைகேயியின் புத்திரன். குகன், கங்கை யிரு கரைகளையுமுடைய வேடர் தலைவன்; இராமபிரானுக்கு உயிர்த் துணைவன்.

நமது நாட்டிலே வடமொழி ஆதி கவியாகிய வான்மீகி முனிவர் இயற்றியருளிய வடமொழி இராமாயணமும், கல்வியிற் பெரிய கம்பர் இயற்றியருளிய தென்மொழி இராமாயணமும் பெரு வழக்கில் இருப்பன. வான்மீகி இராமாயணத்திற்கும் கம்ப ராமாயணத்திற்கும் சிற்சில இடங்களில் வேறுபாடுகளும் உண்டு.

பரதனும், குகனும் சந்தித்த வரலாறாக வான்மீகி இராமாயணத்தில் காணப்படுவதன் சுருக்கம் வருமாறு :

காட்டிலிருக்கும் இராமபிரானை நாட்டிற்கு அழைத்து வரக் கருதிய பரதன், சேனைகளுடன் கங்கைக் கரையை நெருங்கினான். அதனை அறிந்த குகன், போர் நிகழ்ந்தால் எதிர்த்துத் தாக்கும் பொருட்டுத் தனது சேனையைத் திட்டஞ் செய்து நிறுத்தினான்; காணிக்கைகளுடன் பரதன் இருக்கு மிடத்திற்கு வந்தான்; சுமந்திரரால் பரதனுக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டான்; அளவளாவினான்; பரதனைத் தனது விருந்தினனாக இருக்குமாறு வேண்டிக் கொண்டான்; பரதன், 'எப்படிக் கங்கையைத் தாண்டலாம்? எங்கே இராமபிரானைக் காணலாம்?' என்று கேட்கத் தான் உதவி புரிவதாகக் கூறினான்; பரதனைப் பார்த்து, 'தாங்கள் இராமபிரானுக்குத் தீங்கு செய்யும் எண்ணத்துடன் வரவில்லையே! சேனைகளுடன் வந்திருப்பது சந்தேகத்தைக் கொடுக்கின்றது!' என்று கேட்டான். முடி சூட்டி மகிழும் பொருட்டு இராமபிரானை நாட்டிற்கு அழைத்துச் செல்லவே வந்திருப்பதாகப் பரதன் தெரிவிக்க மகிழ்ந்தான்; சேனைகளுடன் கங்கையைத் தாண்டுவித்து இராமபிரான் இருக்குமிடத்தை அறிவித்தான். பரதன் இராமபிரான் இருக்குமிடத்தை நோக்கிச் சென்றான்.

கம்ப ராமாயணத்தில் பரத-குகர் சந்திப்பாக வரும் பகுதியின் சுருக்கம் வருமாறு :

நின்ற கொடைக் கையனாகிய இராமபிரான், தனது சிறிய தாயாகிய கைகேயியின் கொடுமையால் நாட்டை யிழந்து காட்டிற்குச் சென்றமையை உணர்ந்த பரதன் பெரிதும் மனம் வருந்தினான்; 'முழுதுலக ளித்த தந்தை முந்தையோர் முறையினின்றும் — வழுவினன் அதனை நீக்க மன்னனைக்

கொணர்வான்' விரும்பினுன் ; நகர மாந்தர்களுடன் நால் வகைச் சேனைகளும் பின் தொடரப் புறப்பட்டான் ; கங்கை யின் வடகரையை அடைந்தான்.

கங்கையின் தென் கரையிலே இருந்த வேடர் தலைவ ணுகிய குகன், பரதன் சேனைகளுடன் வருதலைப் பார்த்தான் ; தனது ஆருயிர் நண்பனுகிய, நாயகனுகிய இராமபிரானிடத் திலே வைத்த பேரன்பினுல் - கரைகாணுக் காதலால் - விற் பிடித்த கையனுகி, 'தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத் தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கி'ப் போயின பரதனிடத்திலே சந்தேகம் கொண்டான் :

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்,

என்பது அனுபவமொழி யாதலின் பரதனுல் இராம பிரானுக்குத் தீங்கு நேராமல் தடுத்தற் பொருட்டுத் தன்னுடைய படைகளைத் திரட்டினுன். 'யாதினும் இனிய நண்ப!', 'என்னுயி ரனையாய் நீ இளவல்!' என்று தன்பால் பிரிவுடன் கூறிப் பொருந்திய கேண்மை உகந்து போயின வீராகிய இராமபிரான் காட்டிலே வதிந்து செய்தற்கரிய தவத்திலே உழன்று வருந்துகின்றனரே! அங்ஙனமிருக்க,

'அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே :
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ ?
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகன் என்றெனை யேசாரோ ?

எனது உதவியின்றி இவர் எப்படிக் கங்கையைக் கடப்பது? நான் படைக்கு அஞ்சுபவனே? இவர் என்னை எப்படி இகழ்வது ? வேடர் விடுஞ்சரம் மன்னவர் நெஞ்சினில் பாயாவோ ?

'பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மன்னுல காள்பவர் என்றாரோ?
ஆவது போகஎன் ஆருயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது சேனையும் ஆருயி ருங்கொடு போயன்றோ!'

'புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்காடு
இரந்துகோட் டக்க துடைத்து.'

என்பார்களே. நான் அவ்வுரைக்குப் பொருந்த "வண்புகழ் கொண்டுபின் மாயேனோ?" "நம்பி முன்னே இனி நம்முயிர் மாய்வது நன்றன்றோ?" ' என்பன சொல்லி யிரும்பன மேனியரானோர் முன் வன்பனை வில்லினன், மல்லுயர் தோளினன் வந்து நின்றான்.

இங்ஙனமாக, வடகரையிலிருந்த சுமந்திரர் பரதனைப் பார்த்து, 'மற்காணும் திருநெடுந்தோள் மழை காணு மணி நிறத்தாய்! உனக்கு எதிராக அக்கரையிலே நிற்கின்றவனைப் பார். அவன்,

'கங்கையிரு கரையுடையான், கணக்கிறந்த நாவாயான்,
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவன், உயர்தோளான்,
வெங்கரியின் ஏறனையான் விற்பிடித்த வேலையினன்,
கொங்கலரும் நறுந்தண்தார்க் குகன்என்னும் குறியுடையான்'

என்றார்.

அதைக்கேட்ட 'துரிசிலாத் திருமனத்தா'னான பரதன்,

'மன்முன்னே தழீக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னே அவற்காண்பென் யானேசென்'றெனஎழுந்தான்.

அக்கால், குகன்,

'வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்.'

கையிலிருக்கும் வில் கீழே நழுவி விழ விம்மினன். 'இப் பரதன் துன்புற்றவனுகக் காணப்படுகிருன். இராமபிரானிடத்தில் அன்புள்ளவன்போலும் கருதவேண்டி யிருக்கிறது. அவன் கொண்ட தவ வேடத்தையே இவனும் கொண்டிருக்கிருன். மேலும்,

'நம்பியுமென் நாயகனை யொக்கின்ருன் ; அயல்நின்ருன்
தம்பியையு மொக்கின்ருன் ; தவவேடந் தலைக்கொண்டான் ;
துன்பமொரு முடிவில்லை ; திசைநோக்கித் தொழுகின்ருன் :
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்(பு)?என்ருன்.

தன்னுடைய சேனவீரர்களைப் பார்த்து, 'இவன் குறிப்பெல் லாம் கண்டுணர்ந்து பெயர்கின்றேன் ; வழியைக் காத்து நில்லுங்கள் !' என்று கூறிவிட்டுத் தனியே ஒரு நாவாயில் வந்தான்.

என்னே கம்பர் சித்திரம் ! அக்கால் நிகழ்ந்த சிறப்பினை என்னென்பது ? இது பிற இடங்களில் காணப்படாத சிறப்பே யாகும். என்ன நிகழ்ந்தது ?

வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலரிருந்த
அந்தணனும் தனைவணங்கும் அவனு(ம்) அவன் அடிவீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத் தழுவினன் தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்.*

தழுவின புளினர் வேந்தன் பரதனை நோக்கி, 'எழுவினும் உயர்ந்த தோளாய், எய்திய தென்னை ? ' என்று வினவினன் ;

---

* இச் செய்யுள் மிக விரித்துப் பொருள் செய்துகொள்ள இடந்தருவது. படிப்போரால் தத்தம் மனே தர்மப்படியும், நோக் கத்தின் விரிவுக்குத் தக்கபடியும் பொருள் செய்யப்படுவது. ஆத லின் இங்கே எதும் கூறப்படவில்லை. கம்பர் கருத்தொடு பதிந்து பொருள் காண்க.

பரதனுடைய மனம், மொழி, மெய் என்ற முக்கரணங்களின் குறிப்பால் அவனிடம் கொண்ட ஐயத்தைப் போக்கிக்கொண்டான். 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின்?' என்று புகழ்ந்தான். பிராட்டியார் இலக்குமணன் என்றவர்களுடன் இராமபிரான் அங்கே தங்கியிருந்த விதங்களைக் கூறினான்; வீரனாகிய இலக்குமணன் வில்லை யூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் கண்களில் நீர் சொரியக் கங்குல் எல்லை காண்பளவும் நின்ற தன்மையை விவரித்தான்:

என்பத்தைக் கேட்ட மைந்தன், 'இராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமில் யானென்றும் முடிவி லாத
துன்பத்துக் கேது வானேன்; அவனது துடைக்க நின்றான்:
அன்பத்துக் கெல்லை யுண்டே? அழகிதென் அடிமை!' என்றான்.

இங்கிலையில், குகன் படகுகளைக் கொணர்ந்தான். முறைப்படி பரதனுடைய சதுரங்கச் சேனைகளும் பரிவாரமும் படகுகளிலேறி அக்கரை சேர்ந்தன.

தன்னன தம்பியும் தாயர் மூவரும்
சொன்னநேர் வலவனும் தூய தோழனும்
துன்னினர் ஏறலுந் துழாது டுப்பெனும்
நன்னயக் காலினல் நடத்தல் மேயினன்.

படகு கங்கையாற்றிலே சென்றுகொண்டிருக்கிறது; குகன் கோசலையைக் கண்டான்; அறிய விரும்பினான்; பரதனைப் பார்த்து நின்றான்.

சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற
கோசலையைத் தொழுது நோக்கி,
'வெற்றித்தார்க் குரிசி(ல்)இவர் ஆர்'என்று
குகன்வினவ, 'வேந்தர் வைகும்

முற்றத்தான், முதல்தேவி மூன்றுலகும்
ஈன்ருனை முன்னீன் ருனைப்
பெற்றத்தால் பெறும்செல்வம் யான்பிறத்த
லால்துறந்த பெரியாள் ' என்ருன்

பரதன். உடனே குகன் கௌசல்யா தேவியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுன். 'இவன் யார்?' என்று,

கன்றுபிரி காராவின் துயருடைய
கொடிவினவக் கழல்கால் மைந்தன்,
' இன்துணைவன் இராகவனுக்(கு) இலக்குவற்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தோன்,
குன்றனைய திருநெடுந்தோள் குகன்என்பான்
இந்நின்ற குரிசில்!' என்ருன்.

கேட்ட கோசலை, அவர்களைப் பார்த்து,

' நைவிர லிர்,மைந்திர் ! இனித்துயரால்
நாடிறந்து காடு நோக்கி
மெய்விரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்
ருமன்றே ! விலங்கல் திண்தோள்
கைவிரக் களிறனைய காளையிவன்
தன்னேடும் கலந்து நீவிர்
ஐவிரும் ஒருவிராய் அகலிடத்தை
நெடுங்காலம் அளித்திர் ' என்ருள்.

இப் பகுதியில் கௌசல்யா தேவியைப் பற்றிப் பரதன் வாக்காக வரும் ' சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற கோசலை' என்ற தொடரும், கோசலையின் வாக்காக வரும், 'மைந்தீர், நீவிர் ஐவீரும் ஒருவீராய்' என்ற தொடரும் விரித்துப் பொருள் கண்டு மகிழத்தக்கன.

அப்பொன்னுரையைக் கேட்டு மகிழ்ந்த குகன், மீட்டும் பரதனை நோக்கி மற்றுமுள்ள தேவிமார் இருவரையும் அறிந்துகொள்ள விரும்புபவன் போல் நிற்க, பரதன்,

'. . . . . . . நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப தாக்கி
இறந்தான்தன் இளந்தேவி, யாவர்க்கும்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன்என்னப் பிரியாதான்
தனைப்பயந்த பெரியாள்' என்றான்,

இலக்குவன் தாயாகிய சுமித்திரையைச் சுட்டி, அப்பால், தன்னைப் பெற்ற கைகேயியைக் காட்டுவான் தொடங்கிய பரதன்,

'படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடரெலாம் உயிரில்லா எனத்தோன்றும்
உலகத்தே ஒருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை அறிந்திலையேல்
இந்நின்றாள் என்னை ஈன்றாள்'

என்று கூறினான். இங்கே, இராமபிரானுடைய பக்கத்தி லிருந்து அவருக்குத் தொண்டியற்றும் பாக்கியத்தைப் பெற்ற இலக்குவனையும், அவனை மகனாகப் பெற்ற சுமித்திரையையும் பரதன் எவ்வாறு பாராட்டுகின்றான் என்பதும், தன்னையும் தனது தாயையும் எவ்வாறு பழித்துக்கொள்கின்றான் என் பதும் அறியத்தக்கன. இவையன்றோ பரதனை உத்தம சகோதர னாக்கின!

படகு அக்கரையை அடைந்தது. அனைவரும் கரையில் இறங்கினர். வான வழியாகக் கங்கையைக் கடந்த வசிஷ்டர் முதலாயினேரும் கலந்துகொண்டனர். பரதன் குகனிடம் விடைபெற்றுச் சித்திரகூடத்தை நோக்கிச் செல்லலுற்றான்.

இங்கே, வான்மீகி இராமாயணத்திற்கும் கம்ப ராமாயணத்திற்கும் உள்ள வேறுபாடுகள் பல. வான்மீகி இராமாயணத்தில் குகன் ஒரு சிற்றரசன்; தன்னை நோக்கி வரும் தனது நண்பனுக்குப் பகைவனான பேரரசனைக் காணும் முறைக் கேற்ப நடந்துகொள்ளுகிறான். கம்ப ராமாயணத்தில் குகன் தனது ஆருயிர் நாயகனின் பகைவனைக் கண்ட சுத்த வீரன் போலச் சித்திரிக்கப்படுகிறான். வான்மீகி இராமாயணத்தில் குகன் பரதனிடம் கொண்ட ஐயத்தை வாய்விட்டுக் கேட்டு நீக்கிக்கொள்ளுகிறான். கம்ப ராமாயணத்தில் குகன், பரதனுடைய குணம் குறிகளாலும், நடைஉடை பாவனைகளாலும் தன் மனத்தே பரதனைப் பற்றிக் கொண்ட ஐயத்தைப் போக்கிக்கொள்கிறான். கம்ப ராமாயணத்தில், வான்மீகி ராமாயணத்தில் இல்லாத விதமாகப் பரதன் தாய்மார்களைக் குகனுக்கு அறிமுகம் செய்துவைக்கும் பகுதி இப்படலத்துக்கு முடிமணி போல விளங்குகின்றது. ஊன்றி நோக்குவார்க்கு இத்தகைய வேறு பல சிறப்புக்களும் கம்ப ராமாயணப் பகுதியில் விளங்கும். பரதனும் குகனும் முதலில் சந்தித்த காட்சியைச் சித்திரித்துக் காட்டும் 'வந்தெதிரே' என்று தொடங்கும் கம்ப சூத்திரத்திற்கு ஈடுண்டோ கவியுலகில்!

இக் கட்டுரையினல், கதைப்போக்கில் இரண்டு இராமாயணங்களிலும் காணப்படும் வேறுபாடு, உத்தம சகோதரன் உத்தம நண்பன் இவர்களின் இலக்கணம், தொடங்கிய

தொழிலை இனிது நிறைவேற்றி முற்றுவிக்கும் துறையில் உறுதிகொண்டு ஊக்கத்துடன் முயலுதலின் சிறப்பு இவை இனிது விளங்கும்.

நமது நாடு இக்காலம் பரதன் போன்ற சகோதரர்களையும், குகன் போன்ற நண்பர்களையும், தொடங்கிய தொழிலை முற்றுவிக்கும் ஆற்றல் சான்ற மக்களையுமே எதிர்நோக்கி நிற்கின்றது. அஃது அத்தகைய உத்தம சகோதரர்களையும் உத்தம நண்பர்களையும் பெற்றுச் சிறப்புறுவதாக.



## ௧௩. இலக்குவன் சீற்றம்

[ ரா. ஸ்ரீ. தேசிகர், எம். ஏ. ]

ஒவ்வொரு நூலைப் படிக்குந்தோறும், ஒவ்வொரு அனுபவத்தை நுகர்கிறோம். சில கவிகளைக் கையில் எடுத்த மாத்திரத்தில், இசை அலைகளின் மீது மிதந்து போகிற உணர்ச்சி நமக்கு வருகிறது. இன்னுஞ் சில ஒரு நூதன உலகத்திற்கு நம்மைத் தூக்கிச் சென்றுவிடுகின்றன. அவ்வுலகத்தில் இவ்வுலகத்தின் குற்றங் குறைக ளில்லை. அழகும் அன்பும் கைகோத்துத் தாண்டவமாடுகின்றன. இங்கே கேட்கிற அழுகைக் குரலும், துன்ப ஒலியும் அங்கே கேட்கப்படா.

உலகத்திலுள்ள சிரிப்பு அழுகை, மணம் நாற்றம், அழகு கோரம், ஒளி இருட்டு, கானல் மழை, புண்ணியம் பாவம், நல்லது கெட்டது, இன்பம் துன்பம் முதலியன மற்றுஞ் சில நூல்களில் அப்படியே உரித்துவைத்தாற் போலக் காணப்படுகின்றன. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வனப்பு, ஒவ்வொரு சுவை.

வால்மீகி இராமாயணம், அமைதியாயும், கம்பீரமாயும் ஓடுகிற நதியின் தோற்றம் போலக் காட்சி யளிக்கிறது. வரைகளின் காட்சிகள், மணல் தடங்கள், காடுகள், பொய்கைகள், பல தருக்கள், பல மலர்கள், பல பறவைகள், பல ஒலிகள், இயற்கைப் பேச்சுக்கள், இயற்கை எண்ணங்கள் — அவர் சிருஷ்டித்த காவிய உலகத்தில் மலிந்து கிடக்கின்றன.

கம்ப ராமாயணத்தைப் பல பேர் பலபடி கருதுகிறார்கள். ஓர் ஓவிய மண்டபந்தானோ, ஒரு சிற்பக் கூடந்தானோ, அல்

லது ஓர் நாடகசாலைதானே என்று மனத்திற்குள் தர்க்கிக்கிறார்கள்.

இவர் நாட்டில் மாட மாளிகைகள், கூட கோபுரங்கள் தென்படுகின்றன. காரிகைகளின் நூபுர ஒலிகளும், மிருதங்க வீணை நாதங்களும் கலந்து கேட்கின்றன. செயற்கையழகின் பொலிவும், அகிற் புகைகளின் மணமும், கூட்டுச் சந்தனத்தின் மணமும், சிந்தையைக் கவர்கின்றன. இந்த உலகத்தின் அமைப்பு வேறு. கம்ப - சிருஷ்டியில் நாடக ரசம் மிக அதிகமாயிருக்கிறது. அனேக காட்சிகள் தோன்றி மறைகின்றன. சில சில சமயங்களில் சில சில காட்சிகள் உள்ளத்தை இழுக்கின்றன. இப்பொழுது என் சிந்தை, கார்காலத்திற்குப் பிறகு கிஷ்கிந்தையில் நிகழ்ந்த ஒரு சந்தர்ப்பத்தைச் சித்திரிக்கிறது.

மழை நின்றுவிட்டது. ஆகாயம் வெளிவாங்கிவிட்டது. வானத்தில் நடந்த பஞ்ச பூதங்களின் யுத்தம் அடங்கிற்று. மின்னல் மறைந்தது. முகிலின் முரசொலி அவிந்தது.

முளமர் தொலைவுற முரசவிந்த போல்
கோளமை கோண்முகில் குமுறல் ஓவின.

நிர்மலமான ஆகாயத்தில் சந்திரன் பிரகாசிக்கிறான். நிலாப் படிந்த பர்வதத்தில் இராமன் சீதையைவிட்டுப் பிரிந்த துக்கத்தினால் புலம்புகிறான் :

'மழை ஓய்ந்தும், சுக்ரீவன் வரவில்லை; பிரதிக்ஞையை மறந்துவிட்டான். சிற்றின்பத்தில் மூழ்கி அறத்தை இழந்துவிட்டான். நன்றியைக் கொன்றுவிட்டான்; நட்பினைச் சிதைத்துவிட்டான். ஆகவே, இலக்குமணா, வானரமென்கிற பெயரும் உலகத்தில் இல்லாதபடி செய்துவிடவேண்டும்!'

இப்படிச் சினந்து பேசினவன் கோபம் மாறி, வேறொரு மூர்ச்சையில் பேசுகிறான் :

'நீ சுக்ரீவனுக்கு நீதியை யெடுத்துக் கூறு. அந் நீதிமொழிகளை அவன் ஏற்றுக்கொள்ளாத பொழுது அவன் மீது வெகுண்டு அவனைத் தாக்கிவிடாதே. அவன் இயம்பும் வார்த்தைகளை என்னிடத்தில் சொல்வாயாக.

'நீதியாதி நிகழ்த்தினை நின்றது
வேதியாத பொழுது வெகுண்டவன்
சாதியாதவர் சொல்தரத் தக்கனை
போதியாதி' யென்றான் புகழ்ப்பூணினான்.

இராமனிடத்திலிருந்து விடைபெற்றுக்கொண்டு ஓர் அம்பு போல இலக்குமணன் கிஷ்கிந்தையை நோக்கிச் செல்லு கிறான். வானரங்கள் வெருவியோடி அங்கதனுக்குச் செய்தி யறிவிக்கின்றன. அங்கதன் அருகில் போய், இலக்குமணன் முகத்திலிருந்து அகக் கருத்தைத் தெரிந்துகொண்டு, சுக்ரீவ னிடத்திற்கு வருகிறான். சுக்ரீவனுடைய நிலையைக் கம்பர் இவ்வாறு வர்ணிக்கிறார் :

நளனென்னும் வானர வீரனால் நிருமிக்கப்பட்ட அரண் மனையில் மலர்ப் படுக்கையில் சுக்ரீவன் படுத்திருக்கிறான். இள மகளிர் அவனுக்கு அநேகம் குற்றேவல் செய்கிறார்கள். பெருஞ் செல்வமாம் கள்ளினால் அதிகம் களிக்கிறான். பெண் களின் வாயமுதத்தைப் பருகிப் பருகி மகிழ்கிறான். இப்படி இன்பக் கனவு கண்டு தூங்கும் சுக்ரீவனைக் கைகூப்பித் தொழுகிறான் அங்கதன்.

'ஐயனே, இராமனுக்கு இளையவன் பெருஞ் சீற்றத் துடன் வந்திருக்கிறான். உங்கள் திருவுள மென்ன?' என்று கேட்கவும், பதிலொன்று மில்லை. கள் விஷம் தலைக்கேறித் தன்னையே உணராமல் மெல்லணையில் கண்வளர்கிறான்.

நனைநறுந்துளி நஞ்சு மயக்கவும்
தனையுணர்ந்திலன் மெல்லனை தங்கினன்.

அங்கதன் முயற்சிகள் வீணாயின. அவன் அனுமானிடம் போகிறான். அனுமான் அவனை யழைத்துக்கொண்டு தாரையிடம் வருகிறான். 'மேலே என்ன செய்யலாம்?' என்று அவளை வினவ, அவள் வானரர்களைப் பழிக்கிறாள்:

'பெரிய தீச் செயல்களைச் சீக்கிரம் செய்துவிடுகிறீர்கள். அவைகளிலிருந்து பிறந்த கேடுகளை எளிதில் நீக்க வழி தேடுகிறீர்கள். தவணை தவறினால் உங்கள் வாழ்வு போய்விடும் என்று அடிக்கடி நான் சொல்லிவருகின்ற மொழிகளையும் கேட்கவில்லை. பெரிய உதவியைச் செய்தவரைப் பேணாது அலட்சியம் செய்தல் அழகுமன்று, அறமுமன்று. இராமபிரான் தேவியைப் பிரிந்ததனால் உயிர் சாம்புகின்ற சமயம், நீங்கள் சேர்க்கை யின்ப நீரைக் குடிக்கிறீர்கள்!

'தேவி நீங்கவத் தேவரில் சீரியன்
ஆவி நீங்கினன் போல் அயர்வானது
பாவி யாது பருகுதிர் போலும்நும்
காவி நான்மலர்க் கண்ணியர் காதல்நீர்!'

இப்படி இவள் கடிந்து பேசிக்கொண்டிருக்கும் சமயம் நகரத்திலுள்ள குரங்குகள், கிஷ்கிந்தாபுரியின் வாயிற் கதவைச் சாத்தி, உள்ளே தாளிட்டு, பெரிய கற்களை அடுக்கிவைக்கின்றன. இலக்குமணன் அக் கதவைத் தள்ளி உள்ளே புகுந்துவிடுகிறான். அக்கதவு பொடியானது கண்டு குரங்குகள் பயந்து சிதறி யோடுகின்றன. அவ்வூரில் ஒரு பெரிய ஆரவாரம் எழுகிறது. 'மகர வேலையை யொத்தது மாநகர்.'

இந்தச் சந்தர்ப்பத்தில் அனுமான் ஓர் ஆலோசனை கூறுகிறான்: 'தாரை போனால் அவரைத் தடுக்க முடியும். நீயும்

அநேக பெண்களும் சென்ருல், இலக்குமணன் உள்ளே நுழையான் !'

தாரை இலக்குமணனை வழி மறிக்கிருள். நூபுரங்கள் ஆர்க்க அநேக மெல்லியர் அவனை வளைந்தபோது, சீற்றம் மாறினதுமன்றி, அவர்களைப் பார்க்கவும் அஞ்சினுன்.

பேர்க்கருஞ் சீற்றம் பேர முகம்பெயர்ந் தொதுங்கிற் றல்லால்
பார்க்கவும் அஞ்சி னுன்அப் பணையினும் உயர்ந்த தோளான்.

மாமியர் கூட்டத்தில் வந்தவன் போல் சங்கோசங் கொண்டு நிற்கிருன்.

தாமரை வதனம் சாய்த்துத் தனுநெடுந் தரையின் ஊன்றி
மாமியர் குழுவின் வந்தா னுமென மைந்தன் நிற்ப,

சில வார்த்தைகளைத் தாரை கூறுகிருள்: 'நாங்கள் பெருந் தவம் புரிந்ததனுல், நீங்கள் இங்கே வந்தீர்கள். எப்பொழுதும் இராமபிரானேடு சேர்ந்திருக்கிற நீங்கள் இங்கே வரக் காரண மென்ன?'

யார் இந்த வார்த்தைகளைக் கூறுகிருர்கள் என்று நிமிர்ந்து பார்க்கிருன் இலக்குமணன். தாரையைப் பார்த்த வுடன் தன் தாயரின் ஞாபகம் அவனுக்கு வருகிறது. தாரை இலக்குமணனுக்குச் சமாதானஞ் சொல்லுகிருள்:

'நீங்கள் கோபித்தால், எங்களுக்குச் சரண் வேறு எங்கே யிருக்கிறது? சுக்ரீவன் கட்டளைப்படி அரிக்கணத்தை யழைக்க அநேக வானரங்கள் சென்றிருக்கின்றனர். தாயினும் நல்லவர்கள் நீங்கள். நீங்கள்கோபங் தணியக்கடவீர். தர்மமும் அதுவே. குற்றத்தைப் பொறுப்பதுதான் பெருமையே யொழிய, தீமை புரியாதா ரிடத்தில் அன்பு காட்டுதல் எளிது.

'தாயினு மினிய நீரே தணிதிரால் தருமம் அஃதால்
தீயன செய்யா ராயின் யாவரே செறுந ராவார் !'

சிற்றம் சற்றுத் தணிந்ததைக் கண்ட அனுமன் அங்கே வருகிறான். இலக்குமணன் அனுமனைப் பார்த்து, 'அளவில்லாத நூற்கேள்விகளையுடைய நீயும் அயர்ந்துவிட்டாயே!' என்கிறான்.

அனுமன் இலக்குமணனுக்குச் சில வார்த்தைகளை மொழிகிறான்: 'எல்லாப் பாபங்களுக்கும் பரிகாரங்களுண்டு. ஆனால் செய்நன்றி கொன்றவனுக்கு ஓர் உபாயமும் இல்லை. நீங்கள் கோபிக்கக் கூடாது.'

அனுமன் இலக்குமணனைச் சுக்ரீவனிடத்திற்கு அழைத்துப் போகிறான். இதற்கு முன் அங்கதன் சுக்ரீவனிடத்திற்குச் சென்று முன்வரலாற்றைத் தெரிவிக்கிறான். 'செல்வத்தை யடைந்து செருக்கடைந்துவிட்டீர், உதவியைக் கொன்றுவிட்டீர்!' என்று உணர்த்தவும், சுக்ரீவன் கழிவிரக்கங்கொண்டு பலபடி புலம்புகிறான்.

அரண்மனைக்குள் இலக்குமணன் வந்துவிட்டான். சுக்ரீவன் சிங்காசனத்தில் அமரும்படி கேட்டுக்கொள்கிறான். அதற்கு இலக்குமணன் இசையவில்லை. தமையன் கல்லணையில் கண்துயிலும் போது தான் மட்டும் மெத்தென்னும் அரியணையில் உட்காருவதோ என்று, கண்ணில் நீர் பெருக விடை பகருகிறான்:

'கல்லணை மனத்தினை யுடைக் கைகேசியால்
எல்லணை மணிமுடி துறந்த எம்பிரான்
புல்லணை வைகயான் பொன்செய் பூந்தொடர்
மெல்லணை வைகலும் வேண்டுமோ!' என்றான்.

இதைக் கேட்ட சுக்ரீவன் விம்மி, கண்ணீர் சிந்துகிறான். 'உயிர்த் தோழன் வருந்த நான் இன்பங்களை அனுபவித்தேனே!' என்று தனக்குள் சாம்புகிறான்.

'எங்கள் வயிறு துன்பத்தினுலும், நிந்தையினுலும் நிரம்பியிருக்கிறது, துன்பமடைந்தால் எல்லாம் மாறுபட்டுப் போய்விடும்.

'வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள
இருத்தும் என்ருல் எமக்கினிய(து) யாவ(து)ஓர்
அருந்தியுண்(டு) ஆயினும் அவலந் தான்தழீஇக்
கருத்து வே றுற்றபின் அமிழ்தும் கைக்குமால்.

'மேலும் இன்னும் ஒன்றுண்டு. நான் போய்த்தான் என் அண்ணனுக்குக் கிரை முதலியவைகளைக் கொண்டுவரவேண்டும். எனக்கு நீங்கள் விருந்திட வேண்டியதில்லை. தேவியிருக்கிற இடத்தைத் தெரிந்து சொன்னல், அதுவே எங்களுக்கு அமுதமாகும்,' என்றும் இலக்குமணன் கூறுகிறன்.

இராமபிரானை அடைவதற்காக சுக்ரீவன், கண்ணீர் பொழிந்துகொண்டே, பொருக்கென எழுந்தான்.

'சேனை திரண்டு வருகிறவரையில் இங்கே யிருப்பாயாக', என்று அனுமானுக்குக் கட்டளையிட்டுவிட்டு, சுக்ரீவன் இலக்குமணனேடு போகிறன். இலக்குமணனும் முனிவு மாறி மகிழ்கிறன்.

இதுதான் கம்பரின் கதைப்போக்கு. இந்த நாடகத்தைச் சுற்றி அநேகம் காட்சிகளைச் சிருஷ்டித்துவிட்டார் கம்பர். இக் காட்சிகளுக்குள் சிகரமாய் நிற்பது தாரை கைம்பெண் கோலத்தில் இலக்குமணன் முன் நிற்பதுதான். தாரை அநேக மகளிரோடு அங்கே வருகிறள். பெண்களைப் பார்க்க வெட்கப்படும் இலக்குமணன் தாரை இயம்பும் சொற்களைக் கேட்டுத் தலை நிமிர்கிறன். அவளைப் பார்த்தவுடன் தன் தாயரின் நினைவு அவனுக்கு வருகிறது.

'ஆர்கொலோ உரைசெய்தார்!' என்றருள்வரச் சீற்றம் அஃகாப்
பார்குலாம் முழுவெண் திங்கள் பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலாம் முகத்தினளை யிறைமுகம் எடுத்து நோக்கித்
தார்குலாம் அலங்கல் மார்பன் தாயரை நினைந்து நைந்தான்.

காடுகளையும், மலைகளையும், ஆறுகளையும், வனாந்தரங்களையும் தாண்டி இலக்குமணன் மனது அயோத்திக்கு விரைந்து போகிறது. மங்கல அணியை நீக்கிவிட்டாள்; ஆபரணங்கள் அணியப்படவில்லை; குங்குமம் இட்டுக்கொள்ளவில்லை; பூவைச் சூடிக்கொள்ளவில்லை; சந்தனத்தைப் பூசிக்கொள்ளவில்லை. இப்படி யிருக்கிற தாரையைக் கண்டவன், 'என்னுடைய தாயரும் இந்தக் கோலத்தில்தான் இருப்பர்!' என்று நய னங்கள் பனிப்ப நிற்கிறான்:

மங்கல அணியை நீக்கி மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக் குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்குவெம் முலைகள் பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல் நயனங்கள் பனிப்ப நின்றான்.

இக்காட்சி ஷேக்ஸ்பியரின் 'மாக்பெத்'திலுள்ள ஒரு சித்தி ரத்தை என் கண்முன் கொணர்கிறது. டன்கன் தூங்கு கிறான். மாக்பெத்தின் மனைவி அவனைப் பார்க்கிறாள். பார்த்த வுடன் தன் தகப்பன் உருவம் அவள் ஞாபகத்திற்கு வருகி றது. 'என் தகப்பனை ஒத்திராதுபோனால் அவனைக் கொன்றி ருப்பேன்!' என்கிறாள்.

இலக்குமணனைச் சிங்காதனத்தில் உட்காரும்படி சுக்ரீ வன் வேண்டுகிற பொழுது, அவன் கூறிய வார்த்தைகள் யாவருக்குந் தோன்றக்கூடியவைகளே. 'தாரையைப் பார்த்த வுடன் தன் தாயரின் நினைவு வருகிறது' என்று கம்பர் கையாண்ட விஷயம் கவியினுடைய கற்பனா சக்தியை நன்கு காண்பிக்கிறது. அதை எவரும் வியக்காம லிருக்க முடியாது.

வால்மீகியின் கதைப்போக்கு வேறு. வால்மீகி இராமாயணத்தில் வாலி இறந்தவுடன் தாரையைச் சுக்ரீவன் வைத்துக்கொண்டுவிட்டான் என்ற விஷயம் காணப்படுகிறது. அவளோடு சுகித்துக்கொண்டிருக்கிறான். இலக்குமணன் கிஷ்கிந்தாபுரிக்கு வந்த செய்தி யறிந்ததும் இலக்குமணனைச் சமாதானப்படுத்தத் தானே தாரையை யனுப்புகிறான்.

'அழகிய தாரை, கள்ளுண்ட மயக்கத்தால் கால்கள் தள்ளாட, கண்கள் சுழல இடையி லணிந்த காஞ்சிக்கோவையும் பொன்னாணும் நழுவ, உடல் வளைய, லக்ஷ்மணனுக்கு முன்னே போயினாள்.' —நடேச சாஸ்திரிகள் மொழிபெயர்ப்பு.

சில வார்த்தைகளைச் சொல்லிச் சமாதானஞ் செய்கிறாள்: 'காமத்தைக் கடப்பது சாதாரணக் காரியமில்லை. குரங்கு சாதிக்கு அது சாத்தியமா? நல்ல நூற் கேள்விகள் உடைய உங்களுக்குக் கோபத்தையடக்க ஆற்றல் இல்லாமல் போய் விட்டதே!' என்று விவகாரம் செய்கிறாள்.

இது வால்மீகியின் சித்திரம். வால்மீகியின் மனோபாவம் வேறு, கம்பனின் மனோபாவம் வேறு. 'எவ்வளவு இயற்கையாய் வானரச் சாதியின் தர்மத்தை வர்ணித்திருக்கிறார் வால்மீகி!' என்று, அவருடைய இயற்கைச் சித்திரத்தை வியப்பர் சிலர்: 'எப்படி வால்மீகியின் கதையை நயப்படுத்தி விட்டார் கம்பர்!' என்று இவருடைய மனோ தர்மத்தையும், கவிதையின் சிறப்பொளியையும் கண்டு சிலாகிப்பர் சிலர். இவ்வாறு தாரையைத் தூய்மையுள்ளவளாகவும், அப்பு அழுக்கில்லாத தெய்வ நங்கையாகவும் கம்பர் சித்திரித்துக்கொண்டே போகிறார். அதற்கேற்ப இக் காட்சியை நமக்கு அவர் அருளியிருக்கிறார். இக் காட்சி அதிக அழகு பெற்று விளங்குகிறது.

ஒவ்வொரு கவிக்கு ஒவ்வொரு நயமிருக்கிறது. காடு, மலை முதலியவைகளை நேரில் பார்த்து வால்மீகி அனுபவித்து எழுதியிருக்கிறார். பூவின் இயற்கை மணமும், நீரோட்டத்தின் இசையும், வரையின் வனப்பும், காற்றின் இன்பமும், வால்மீகியின் கவி-யுலகத்தில் தெரிகின்றன. வால்மீகியின் கிஷ்கிந்தா காண்டத்தில் இயற்கை யழகு அப்படியே ததும்பி யோடுகிறது. கம்பர், மனிதனுடைய உள்ளத்திலே புகுந்து, அவனுடைய உள்ளக் கிளர்ச்சிகளை உள்ளவாறு சித்திரித்திருக்கிறார். அவைகள் அவர் கையில் பெரிய நாடகங்களாக மாறிவிடுகின்றன.



# கச. கம்பனின் நாடகத்தன்மை

[ ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் ]

ஆங்கிலத்தில் 'எபிக்' என்று சொல்லப்படும் இலக்கிய உருப்பைப் பெருங்காப்பியம் (பொதுவான பொருளில்) அல்லது இதிகாசம் என்று சொல்லலாம். நமது நாட்டில் பலவிதமான புராணங்களும் பெருங்காப்பியங்களும் இருந்த போதிலும், வியாச பாரதமும் வான்மீகி ராமாயணமும் தான், இரண்டு மதிப்பிடக்கூடாத சிறப்பையுடைய இதிகாசங்கள். பாரத நாட்டு மக்களின் மனத்தில், பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக ஊறிக் கிடந்த எண்ணங்கள், பாவங்கள், பக்தி யெல்லாம், உருத் திரண்டு, மிகப் பெரிய கதைகளாக மாறி, கர்ணபரம்பரையாகச் சிரவணம் செய்யப்பட்டு, காலக்கிரமத்தில், நாகரிகமும் எழுத்தறிவும் முதிரவே, மகாகவிகளால், விஸ்தாரமான அமைப்புடன் இதிகாச காவியங்களாக ஆக்கப்பட்டன. அவைகளில், ஆரம்பமுதல் முடிவுவரை, ஒரு பெரிய கதை, அதன் நாயகன், நாயகி இவர்களுடைய சுக துக்கங்களுடன், பிரம்மாண்டமாய் வளர்ந்துகொண்டு போகிறது. அத்துடன், ஏராளமான உப கதைகள், தத்துவ போதனைகள் (உலகம் போற்றும் பகவத் கீதை மகாபாரதத்தின் ஒரு சிறு பகுதி), சமுதாய அறநெறிகள், காவிய வர்ணனைகள் முதலியன சேர்ந்து வளர்கின்றன.

இதிகாசங்களுக்குச் சில தனிச் சிறப்புக்களுண்டு. அவைகளில் காணப்படும் கதைகளின் மாண்பும், வீரர்களின்

செயல்களும், மனித இயற்கையின் பரிணமங்களும் மக்களின் உள்ளத்தில் பதிந்து, அவர்களுக்கு இன்பம் தருகின்றன. அவை, ஒரு நாட்டின் நாகரிகம், மக்களின் அடிப்படையான லட்சியங்கள், கலைகள் இவைகளைப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும் உயிருள்ள இலக்கியங்கள்; மக்கள் கூட்டங்களின் மதப் பற்று, ஆத்ம வளர்ச்சி, ஞான வளர்ச்சி, இவைகளின் உண்மையான சரித்திரங்களுக்குக்கூடத்தான். காலத்தின் இயல்பால் வாழ்க்கையில் அநேக மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டே யிருந்த போதிலும், மனிதனிடம், படைப்புக் காலம் முதல் சில பொதுவான தன்மைகளும் இயல்புகளும் இருந்து வந்திருக்கின்றன. நமது வாழ்க்கை, நமது முன்னோர்களின் வாழ்க்கையிலிருந்துதான் வளர்ந்திருக்கிறது. இதனால்தான் இதிகாசங்கள் காலத்தின் ஆட்சிக்குட்படாத காவியங்களா யிருக்கின்றன. இதிகாசங்கள் மகாசமுத்திரங்கள். அவைகளில் எல்லாவிதமான இலக்கிய தினுசுகளும், ரஸங்களும் பொதிந்து கிடக்கும். உலக மகாகவிகளின் இதிகாசங்களில் முக்கியமாய்க் காணப்படுபவை இரண்டு; ஒப்பற்ற கவிதை, கனிந்த நாடகத்தன்மை; மற்றெல்லாக் குணங்களும் மேம்பாடுகளும், இவ்விரண்டிற்குள் அடங்கும்.

தமிழர்களின் நல்லதிர்ஷ்டத்தால், கம்பர் தமிழில் வால்மீகி ராமாயணத்தைப் பெருங்காப்பிய மாக்கினர். நாட்டில் வழங்கும் கதை உண்மையா யிருந்தால், இந்த முயற்சியில் அவரைத் தூண்டியது சடையப்ப வள்ளல். ஆழ்ந்த கல்வியையும் அபரிமிதமான கவிதா சக்தியையும் அருட் புலமையையும் பெற்றிருந்த கம்பர், இந்தக் காரியத்தில், உலகம் பிரமிக்கும்படியான வெற்றியை யடைந்தார். பொதுவாக வான்மீகத்தை அநுசரித்தபோதிலும், கம்பர், கதைப் போக்கில், காலப்போக்கா லேற்பட்ட ரசிகத்தன்மைக் கேற்ற

வாறு சில மாறுதல்களைச் செய்தார். தமிழரின் நாகரிகம், பழக்க வழக்கங்கள், இலக்கிய முறைகள், ஒழுக்க முறைகள், இவைகளைத் தழுவியே கதைப் போக்கும் கவிப் போக்கும் அமைந்திருக்கின்றன. காவியக் கட்டுக்கோப்பும் திடமாகவே யிருக்கிறது.

கம்பர் என்ற பெயரை நினைத்தமாத்திரம், ஒவ்வொரு தமிழ் இலக்கிய ரஸிகன் கண்முன்பும், தமிழ்க் கவிதா மண்டலத்தின் மிக உன்னதமான உச்சியும், கற்பனை உலகத்தின் விரிவும் சக்தியும், தமிழகத்தின் கலைவாழ்வின் வளமும் சுவையும், ஒரு சித்திரத்தில் தோன்றுவது போல் தென்படும். தமிழ் மன்னர்கள் தமிழ்ப் பணியை அரசியல் பணிக்கு மேலாகவே கருதிச் செய்த தொண்டினால் நாட்டிலேற்பட்ட தமிழ் வளர்ச்சியாலும், தமிழ் மக்களின் உள்ளக் கவர்ச்சியாலும் புலவர்களின் அழுக்காறற்ற அறிவின் சீலத்தாலும், 'கவிச் சக்கரவர்த்தி' என்ற அழியா மகுடத்தைப் பெற்ற கம்பரைத் தமிழர்கள், தலைமுறை தலைமுறையாகப் படித்து அநுபவித்துப் போற்றிவந்திருக்கிறார்கள். அந்நிய நாட்டார்களும், நமது நாட்டில் தமிழைத் தவிரப் பிற பாஷைகளைச் சேர்ந்தவர்களும், கம்பரை மொழி பெயர்ப்புக்களிலாவது படித்தநுபவிக்கக் கூடாத துர்ப்பாக்கிய நிலையில் இருக்கிறார்கள். ஆயினும், கம்ப ராமாயணம், உலகத்திலுள்ள மிகப் பெருங் காப்பியங்களில் ஒன்றென்பது மட்டுமல்லாமல், அவைகளில் அநேக காப்பியங்களைவிடச் சிறந்தது என்பதும், பிற பாஷைகளிலும் தமிழிலும் தகுந்த பயிற்சி பெற்றிருந்த காலஞ் சென்ற வ. வெ. சு. அய்யர் போன்ற அறிஞர்களின் துணிபு. இது தமிழர்களுக்கு நியாயமாகவே பெருமையையும் மகிழ்ச்சியையும் தரலாம். இப் பெருமையைக் கொண்டாடுவதற்குப்

பொறுப்பும் அதிகம். கம்ப ராமாயணம் சம்பந்தமாய், இன்றியமையாத இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், எத்தனையோ துறைகளில் ஆக்கப்பட வேண்டியது அவசியமா யிருக்கிறது. பொறுமையுடனும், தளரா ஊக்கத்துடனும், நுண்ணிய அறிவுடனும், பகுத்தறிவு கலந்த ஆராய்ச்சித் திறனுடனும், இந்தப் பணியை ஆற்ற, போதிய தமிழ் அறிஞர்கள் இன்னும் முன் வரவில்லை. தகுந்த ஆராய்ச்சி நூல்கள் தோன்றுவதற்கு, இப்போது தமிழ் நாடெங்கும் வருஷா வருஷம் நடைபெறும் கம்பன் விழாக் கொண்டாட்டங்களும், அடிக்கடி பல இடங்களில் தமிழ் ரஸிகர்களால் நிகழ்த்தப்படும் கம்ப ராமாயணப் பிரசங்கங்களும், பயன் தரக்கூடிய பூர்வாங்கமான வேலை என்பதில் ஐயமில்லை.

கம்ப ராமாயணத்தின் பெருமைகளைப் பற்றி நமது முன்னோர்கள் புகழ்ந்து கம்பரைக் கவிச் சக்கரவர்த்தியென்று கூறியிருக்கிறார்கள். அவர்கள், அதேமாதிரி, ஒட்டக்கூத்தர், ஜெயங்கொண்டார் போன்ற புலவர்களையும் கவிச் சக்கரவர்த்திகளென்று பாராட்டியிருக்கிறார்கள். நாம் இப்போது கம்பரை அந்த முறையில் போற்றவில்லை. கம்ப ராமாயணத்தின் உண்மையான பெருமை என்ன என்பதைப் பற்றி நாம் ஆராய வேண்டும். நன்றாய்ச் சிந்தனை செய்து பார்த்தால், கம்ப ராமாயணத்தின் ஏற்றம், ராமகாதையின் சிறப்பை விலக்கிவிட்டால், முக்கியமாக இரண்டு காரணங்களால் உண்டாகிறது. கவி ரீதியாகப் பார்க்குமிடத்து, கம்பர் ஈடு மெடுப்பு மில்லாத கவி. கற்பனை, இசைத்தன்மை, நடை, ஓசைப் பெருக்கு, உணர்ச்சியை எழுப்பும் சக்தி, அர்த்த புஷ்டி, வாக்கின் எளிமை, கலைப் பாங்கு முதலிய கவிதையின் எந்த விதமான அம்சத்தைக் கவனித்தாலும், கம்பர், மற்றத் தமிழ்க் கவிகளைவிட சிரேஷ்டரா யிருப்பதுடன், உலக

மகாகவிகளின் கோஷ்டியி லிருக்கவும் உரிமை பெற்றிருக்கிறார் என்பது எளிதில் விளங்கும். இதை, உதாரணங்கள் கொடுத்து ஆராய்வது எனது நோக்கமன்று. கம்ப ராமாயணத்தில் நாடகத்தன்மை நிறைந்திருக்கிறது. இந்த அம்சமும், கம்பரின் காவியத்தின் சிறப்பின் பெரும் பகுதிக்குக் காரணம் என்பது எனது கருத்து. அதை விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கம்.

ஓர் இதிகாசத்திலாவது, அதைப் போன்ற பெருங் காப்பியத்திலாவது, நாடகத்தன்மை அமைந்திராவிட்டால் அதற்கு இருக்க வேண்டிய, எக்காலத்து மக்களையும் கவரும் சக்தி குறைந்துவிடும். இதிகாசங்களில் நாடகத்தன்மையைப் பலவித அம்சங்களில் பார்க்கலாம். முக்கியமாகக் கதைப்போக்கிலும், கதை வளரும் முறையிலும், அவைகளுக் கேற்றவாறு நிகழும் செய்யுள் நடையின் மாறுதல்களிலும், பாத்திரங்களின் குண விபாகங்களை அவர்களுடைய சம்பாஷணைகளின் மூலமும் நடிப்பின் உத்வேகத்தின் மூலமும் சிருஷ்டி செய்வதிலும் நாடகத்தன்மை விளங்கும். நாம், காவியத்தை வாசித்து, அனுபவிக்கும்போது, நம்மிடம் ஊறும் இன்பமும், பலவித உணர்ச்சிப் பெருக்கும், நாடகத்தன்மையின் சக்தியாலேயே ஏற்படுகின்றன. கம்ப ராமாயணத்தில் நாடக இயல் நிறைந்த பாகங்கள் அநேகம் இருக்கின்றன. இயற்கையாய்க் கதைக்குண்டான நாடகத்தன்மை, கம்பனின் கலைத்திறனும் சிருஷ்டி சக்தியாலும், ஆயிர மடங்கு அதிகப்பட்டு ரஸிகர்களுக்கு இன்பம் தருகிறது.

அனுமான், இலங்கைக்கு வந்து, சீதையைப் பல இடங்களிலும் தேடி, எங்கும் காணாமல் தவித்து, மனஞ் சோர்ந்து வெறுப்படைந்து, ராவணன் நாட்டை யழித்துத் தன்னையும் மாய்த்துக்கொள்ளவேண்டு மென்ற மனோபாவத்தில் வீழ்ந்து

சஞ்சலத்துடன் போய்க்கொண்டிருக்கும் போது, அசோக வனம் தெரிந்தது. இழந்த நம்பிக்கையை மீண்டும் பெற்று அனுமான் அதற்குள் சென்ருன். அங்கே, சீதை, மெலிந்து, வாடி, உயிரற்று, 'ஓவியம் புகை யுண்டதே ஒக்கின்ற உருவளாகி', 'நடுக்கடலில் பெருங் காற்றி லகப்பட்ட, பாரமரக் கலம் போலத் திக்கற்று', கொடூரமான அரக்கியர்கள் நடுவில், ஒரு மரத்தடியில் காணப்பட்டாள். அனுமான் பரமானந்தங்கொண்டு, அந்த மரத்தின் மீது ஏறியிருந்தான். இதே சமயத்தில், ராவணன் தனது விருப்பை நிறைவேற்றிக் கொள்ளுமாறு, சீதையைக் கேட்க அசோக வனத்திற்கு வருகிருன். அனுமான் மேலேயிருந்து பார்த்துவிட்டு, 'வினையமும், செயலும், மேல்விளை பொருளும் இவ்வழி விளங்கும் என்றெண்ணி மறைந்துகொண்டிருக்கிருன். சீதையைக் கண்டுபிடித்துவிட்டோ மென்று, அனுமானுக்கு ஏற்பட்ட அமிதமான மகிழ்ச்சிக்குத் திடீரென்று ஒரு குறைவு விளைந்துவிட்டது. நல்ல கனவைக் கண்ட திரிசடைக்கும், நல்ல சகுனங்களைக் கண்ட சீதைக்கும் அவைகளின் பயனை உடனே காண முடியவில்லை. வான்மீகத்தில், ராவணன் வந்துபோன பிறகுதான், திரிசடைக்குக் கனவும், சீதைக்கு நல்ல சகுனங்களும் தோன்றுகின்றன. கம்ப ராமாயணத்தில், நல்ல நிமித்தங்களை அநுபவித்த சீதை முன்பு, மகத்தான ஒரு சோதனையாக, ராவணன் தோன்றுகிருன். நாடகத் தன்மையைக் கவனித்தால் இந்த அமைப்பு அழகாயிருக்கிறது. அனுமான், சீதை, ராவணன், இவர்களின் மனம் தனித் தனியே வெவ்வேறு காரணங்களால் பதை பதைக்க, வாசகர்களின் மனமும் துடிக்கின்றது. என்ன நடக்குமோ என்ற பயம் அவரைத் தயங்கச் செய்கிறது.

ராவணன் வரும் தோரணை என்ன? பரம பராக்கிரம சாலியும், பல மண்டலங்களுக்கு அதிபதியுமாயுள்ள ராவணன், தனது பூரண சக்தியையும் அந்தஸ்தையும், சீதையின் மனத்தில் பதியவைத்து, அவளை இசையச் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் வருகிறான். ஆகையால் கோடிக் கணக்கான ஸ்திரீ பரிவாரங்களுடன், 'உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர,' 'மேனகை வெள்ளடை யுதவ,' 'நான நெய் விளக்கம் நாலிரு கோடி நங்கையர் அங்கையி லெடுப்ப,' பலவித வாத்திய கோஷங்களுடனும், அரக்கியர் சேனையோடும், சர்வாபரண பூஷிதனுய், ராவணன் இரவில் புறப்படுகிறான். அவன் எவ்வளவு கம்பீரத்துடன் வருகிறான் என்பதை நிந்தனைப் படலத்தின் ஆரம்பப் பாட்டுக்களின் நடை காட்டும்.

சிகரவன் குடுமி நெடுவரை எவையும்
ஒருவழி திரண்டன சிவண,
மகரிகை வயிர குண்டல(ம்) அலம்பும்
திண்திறல் தோள்புடை வயங்கச்
சகரவே லையினீர் தழுவிய கதிரில்
தலைதொறும் தலைதொறும் தயங்கும்
வகையபன் மகுடம் இளவெயில் எறிப்ப,
கங்குலும் பகல்பட வந்தான்.

இந்தப் பாட்டிலிருந்து தொடங்கும் பாகத்தில் கவிதையின் எழுச்சியும் போக்கும் கம்பீரத்துடனிருக்க, வருணனையும் கற்பனையும் கொழுத்திருக்கின்றன. அதை வாசிக்கும்போது, ராவணன் போகும் ஆடம்பரத்தைப் படத்தில் பார்ப்பதைப்போல் நாம் காணலாம். கவிதையின் நடையே, சம்பவத்தின் கோலாகலத்தைப் பிரதிபலிக்கிறது; அதன் பேரொலியைக் கவிதையின் ஓசை வெள்ளத்தில் நாம் ஒருவாறு கேட்கலாம்.

ராவணனைப் பார்த்தவுடன் சீதை, 'காய்சின உழுவை இன்னியவந்த கலையிளம்பிணை யெனக்கரைந்து' நடு நடுங்குகிறாள். மரத்தின் மீதிருக்கும் தூதன் மனம் ஊசலாடி உளைகின்றது. பரிவாரங்களெல்லாம் ஒதுங்கவே, ராவணன், 'கூசிக் கூசித்' தனது இச்சையைச் சீதையிடம் தெரிவிக்கிறான். தனது மகோன்னத நிலையையும் மறந்து, மனத்தில் தாழ்மையடைந்து, ராவணன் இரங்கி வேண்டுகிறான். வான்மீகத்தில் ராவணன்-சீதை சம்வாதம் விவகார ரீதியாகவே விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ராவணன் பலவிதமான காரணங்களைச் சொல்லிச் சீதையைத் தனக்கு இசையுமாறு வேண்டுகிறான். அவன் பிறர் மனைவியரை விழைதலும், அவர்களை எவ்விதமாவது வலிந்து பிடித்து வருதலும் அரக்கியர்களுக்கு இயற்கை. ஆயினும், 'என்னிடத்து விருப்பமில்லாத உன்னை நான் தொடமாட்டேன்' என்றும் கூறுகிறான்; சீதையைப் பலாத்காரம் செய்யக் கூடாதென்று அவன் தீர்மானிக்கிறான். தன்னுடைய ஐசுவரியத்தையும் பலத்தையும் பற்றிச் சொல்லி, அவள் மனத்தைப் பெறவேண்டுமென்பது அவனது அவா. கம்பர் இதைக் குறிப்பாலுணர்த்தி, நாம் அநுமானிக்குமாறு, ராவணனின் மொழியையும் நடத்தையையும் அமைக்கிறார். தாழ்மையுடன் இரங்கினால் சீதையின் மனம், பரிதாபத்தினாலாவது மாறாதோ என்ற எண்ணத்துடன் அவன் கூறுவதாவது:

'இன்றி றந்தன, நாளை யிறந்தன,
என்தி றம்தரும் தன்மை யிதா(ல்)எனைக்
கொன்(று) இறந்தபின் கூடுதியோ?'

காரியத்தைச் சாதிக்க என்ன கனிந்த பணிவு! ராவணனின் மனோபாவம் கவனிக்கத் தக்கது. தன்னுடைய நடத்

தையை ஆதரித்துக் காரணம் சொல்லவேண்டுமென்று அவன் கருதவில்லை. எதற்காகச் சொல்லவேண்டும்? தானோ, மிகுந்த செல்வமும் சக்தியும் வாய்ந்த மண்டலாதிபதி. சீதையோ சொல்லற்கரிய அழகுடையவள். அவளைத் தான் விரும்புவது இயற்கைதானே என்று முடிவுசெய்துவிடுகிறான். கற்பு, ஒழுக்கம் என்றவை ராவணன் அகராதியில் ஏது? தன் இச்சைக்கு இணங்கினால், சீதை மூன்று உலகங்களுக்கும் அரசி யாகலாமென்று சொல்லிவிட்டு, ராவணன், ஒருவேளை அவள் ராமனிடம் திரும்பச் செல்லக்கூடுமென்று வைத்துக்கொண்டாலும், அவனுடன் கூடியிருப்பது, கேவலம் 'மானுடர் வாழ்வன்றோ!' என்று திரஸ்கரிக்கிறான். இந்த வார்த்தை, சீதைக்கு, ராமனைப் பார்க்கலாமென்ற நம்பிக்கையைக் கொடுத்துவிடுமோ என்று அஞ்சி, ராமனை அவளால் ஒருகாலும் பார்க்க முடியாதென்று கூறுகிறான். வலிய வரும் 'மூவுலகின் தனி நாயகத்தை' உதறித் தள்ளுவது அறிவில்லாத செயல் என்று சொல்லி, ராவணன் சீதை முன்பு, தலைமேல் கைகூப்பி, சாஷ்டாங்கமாக விழுந்தான். வான்மீகத்தில், ராவணன், சீதையின் முன்பு இந்தக் கட்டத்தில் இப்படிக் கைகூப்பி விழுந்ததாக இல்லை. கம்பர், அறந்திறம்பிய காமத்தி லீடுபட்ட ராவணனின் மதியிழந்த தன்மையை நாடகத்தன்மையுடன் வலியுறுத்துமாறு, இப்படி அமைத்தது ரஸமா யிருக்கிறது.

ராவணன் மொழியைக் கேட்ட சீதை கோபாவேசங் கொண்டாள். கண்கள் சிவந்தன. தன்னை மறந்து, என்ன நேர்ந்தாலும் சரியென்று, வீர மொழிகளைப் பகர்கிறாள். இவ்வளவு கோபாக்கினி, சீதைக்கு உண்டாவதற்குப் போதிய காரணமிருந்தும், ஒரு பெண் இந்த நிலையை எய்தலாமோ என்ற உணர்ச்சி கவிக்கு எழுகிறது. இதனால் சீதையை ஒரு

வரும் குறை கூறக் கூடாதே யென்று நினைத்தது போல், கம்பர், 'பெண்மைக்கு ஏய்ந்தன அல்ல வெய்ய மாற்றங்க'ளைச் சொன்னாள் என்கிறார். வான்மீகத்தில், ராவணனுக்குச் சீதை சொல்லும் பதில், முதலில் சாந்தமாயும், உபதேச ரீதியாயும், விவகார ரீதியாயும் இருக்கிறது. சீதை, மெல்லிய குரலில், மெல்லிய மொழிகளை, மெதுவாகச் சொன்னாள் என்கிறார் ஆதி கவி. வெகு நாளாக வாடி, மெலிந்து, சோகத்தி லாழ்ந்தவள் மெதுவாகவே பேசியிருக்கக் கூடும். இது, உள்ளதை உள்ளபடி உரைக்கும் தன்மைக்குப் பொருந்தலாம். ஆயினும் இது நாடகத்தன்மைக் கொவ்வாது. பேச்சு, உள்ளத்தின் உணர்ச்சியைக் காட்டவேண்டும். சற்றுப் பின்னால், கவிதா நியாயம் மேலிட்டு, சீதை, போகப் போகச் சற்று சீற்றங் கொண்டு, ராவணனுக்கு, ராமரிடமிருந்து பின்னால் அவனுக்குக் கிடைக்கப் போகும் குலநாச தண்டனையை வலியுறுத்துகிறாள். கம்பரின் சீதையோ, ராவணன் வார்த்தைகள் வந்து அவள் செவிகளில் படு முன்னமே, கோபாக்கினியில் மூழ்கி, வீராவேசங் கொள்கிறாள். வாசாலகத்துடன் அவள் சொல்லும் பதில், ராவணன் மனத்தில் கூரிய வேல் கொண்டு குத்துவது போலிருக்கிறது. ராவணன் எப்படிச் சீதையிடம் தன்னுடைய மட்டிலா ஐசுவரியத்தையும் சக்தியையும் தெரிவிக்கவேண்டு மென்று நினைத்தானோ, அதே போல், சீதை, தனது நாயகனின் பராக்கிரமத்தையும், கோதண்டத்தின் வலிமையையும் தெரிவிக்கிறாள். அத்துடன் நிற்காமல், நெஞ்சைப் பிளக்கும் வார்த்தைகளால், அவனுடைய நயவஞ்சகத்தையும் கோழைத்தனத்தையும் நேரில் சுட்டிக் காட்டி வாட்டுகிறாள். வீரனாயிருந்தால், ராமனில்லாத போது மாறு வேடந் தரித்து ஏன் வரவேண்டுமென்றும், தன்னைத் தூக்கிக்கொண்டு வரும்போது சடாயு

வால் அடிபட்டபோது, சிவன் கொடுத்த ஆயுதத்தை உப யோகப்படுத்தித்தான் அவன் தப்பவேண்டி யிருந்ததென் றும், ராமர் அவனது வலிமையையும், அரக்கர் சேனையின் பெருமையையும் கேட்டுத் தெரிந்த பின்புதான், அவனுடைய சகோதரிக்கும், சகோதரர்களுக்கும், தண்டகாரண்யத்தில் தகுந்த தண்டனையை அளித்தா ரென்றும் சீதை குறிப்பிட் டுக் கூறுகிறாள். அவள் ஆரம்பத்தில்,

‘மேருவை யுருவல் வேண்டின்,விண்பிளந்(து)ஏகல் வேண்டின்,
இரேழு புவனம் யாவும் முற்றுவித் திடுதல் வேண்டின்,
ஆரியன் பகழி வல்லது: அறிந்திருந்(து) அறிவிலாதாய்!
சீரிய அல்ல சொல்லித் தலைபத்தும் சிந்து வாயோ?’

என்றும், முடிவில்,

‘ஆயிரம் தடக்கை யான்நின் ஐந்நான்கு கரமும் பற்றி,
வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன், தொலைந்த மாற்றம்
நீஅறிந் திலையோ, ஏகு நெறிஅறிந் திலாத நீசா?’*

என்றும் சொன்ன உத்வேகம் ராவணனைப் பிரமிக்கச் செய் கிறது. கோபத்தையும் வீரத்தையும் காட்டக்கூடிய முறை யில் பாட்டின் நடை யிருப்பது எளிதில் விளங்கும். ராவண னின் ஆண்மைக்கும், மானத்திற்கும் பங்கம் விளைந்துவிட் டது.

சீதை போட்ட இந்தப் பலமான சூடு, ராவணனின் பெருங்கோபத்தைக் கிளப்பிவிட்டது. அவளைப் பிளந்து

---

* ராவணனைக் கட்டிச் சிறையிலடைத்த கார்த்தவீரியன் பரசுராமனால் தோல்வியுற்றதும், பரசுராமன் ராமனால் தோல்வி யுற்றதும் இங்கு சொல்லப்படுகிறது.

தின்றுவிடப் போவதாக உறுமி எழுகிறான். 'சீற்றமும் காதலும் எதிரெதிர் கிடைப்ப' அவன் திகைத்து நின்றுவிடு கிறான். இந்தச் சந்தர்ப்பத்தில், அனுமான் மரத்தின் மீது இருப்பதைக் கவி நமக்கு ஞாபக மூட்டுகிறார். ராவணனைப் புடைத்துச் சீதையைத் தூக்கிக்கொண்டு போய்விடலாமோ என்ற எண்ணம், அனுமான் மனத்தில், ஒரு விநாடியில் தோன்றி மறைகிறது. காரியம் அவ்வளவு எளிதல்ல. எளி தில் அனுமானால் செய்யக்கூடுமென்றாலும், அதில் ஒரு சிக்க லான அம்சமும் இருக்கிறது. இன்னும் அனுமான் சீதை யைப் பார்த்துத் தான் யாரென்று தெரிவித்துக்கொள்ள வில்லையே! இதை யெல்லாம் கருதித்தான் அனுமான், தன் கைகளைப் பிசைந்துகொண் டிருந்ததாகக் கம்பர் வரைகிறார். இப்படி அநுமான் கஷ்டப்படுவதை நாம் கண்ணால் பார்ப்பது போலிருக்கிறது. சீதையின் துணிகரமான மொழிக்கு, ராவணன் மீண்டும் பதிலுரைக்க முயல்கிறான். ஆனால் பதி லில், பலமொன்று மில்லை. ஏதாவது மறுமொழி சொல்லா விட்டால், தனது ஆண்மைக்கு இழுக்கு ஏற்படுமென்று கருதி, ராவணன் சொன்னதாகவே தோன்றுகிறது. சீதை சுட்டிக் காட்டிய சம்பவங்கள் வாஸ்தவமாயிருந்த போதிலும், தான் உண்மையில் மிக்க பலசாலி யென்றும், வெறும் மானி டர்களாகிய ராம லக்ஷ்மணர்களைக் கொல்லுதல், தனது வீரத் திற்குத் தகுந்ததில்லை யென்றும், அவர்களைக் 'கூவி நின்று ஏவல் கொள்ள'ப் போவதாயும், அவசியமானால், அவர்களைத் தனது ஒரு கையால் தூக்கிக்கொண்டு வந்து கொல்ல முடியு மென்றும் சொல்கிறான் ராவணன். இந்தச் சந்தர்ப்பத்தில் ராவணனிடம் வாசகர்களுக்குச் சற்று பரிவு, அவர்களை அறி யாமலே ஏற்படுகிறது. வேண்டுதலில் ஆரம்பித்த ராவணன் வெருட்டுதலே சரியென்று நினைக்கிறான். தனது இச்சைக்கு

இணங்காவிட்டால், தான், அயோத்தி, மிதிலை நாடுகளைத் துவம்சம் செய்து, அவளையும் கொன்றுவிடப் போவதாகவும், இரண்டு மாத காலம் அவகாசம் கொடுத்திருப்பதாகவும், ராவணன் சீதையிடம் கூறிவிட்டு, அரக்கியர்களுக்குச் சீதையை வசப்படுத்தும்படி கட்டளையிட்டுத் திடீரென்று செல்கிறான். மீண்டும், சீதை, ஏதாவது வெம்மையாகச் சொல்லி அவனது இழிமையைக் காட்டக்கூடுமென்று பயந்தே ராவணன் திடீரென்று போய்விட்டான் போல் தோன்றுகிறது. ராவணன் கட்டளைப்படி அரக்கியர்கள் சீதையை வாட்டுகிறார்கள். திரிசடை அவர்களை அதட்டி நிறுத்துகிறாள். சீதை துயரத்தி லாழ்கிறாள்.

இத்துடன் நிந்தனைப் படலம் முடிந்து உருக்காட்டுப் படலம் ஆரம்பிக்கிறது. சம்பவ ரீதியாகவும், நாடக ரீதியாகவும், இந்த இரண்டு படலங்களும் ஒன்றாகவே யிருக்கலாம். அனுமான், சீதையைப் பார்த்து, அவளைக் கண்டு, தன் வருகையைத் தெரிவித்துப் பேசி, ராம லக்ஷ்மணர்களின் சுகத்தையும் சொல்லி, முடிவு காணாத் துக்கத்தில் தத்தளித்துக்கொண்டிருந்த சீதைக்கு, நம்பிக்கையையும், மட்டிலா மகிழ்ச்சியையும் அளித்ததுதான் சம்பவம். ராவணன்-சீதை சந்திப்பும், சம்வாதமும், இந்தப் பாகத்தின் நாடகத் தன்மையை அதிகப்படுத்துகின்றன. சீதை இருக்கிற இடத்தைத் தெரிந்து, அவளைப் பார்த்துவிட்டாலே, அனுமானுக்கு அத்யந்த வெற்றியாகும். இத்துடன், சீதையைப் பார்க்கும் போதே, அவள் கற்பையும், வீரத்தையும், நாயகன் மீதுள்ள தெவிட்டாத பக்தியையும், கண்கூடாகக் கண்டுவிட்டால், அனுமானின் ஆநந்தத்திற்கு எல்லை யேது! தவிரவும், ராவணன், இந்தக் கட்டத்தில் அடக்கத்துடன் நடந்துகொண்டு, இரண்டு மாதம் வரை சீதைக்குக் காலம் கொடுத்திருக்கிறான். அனுமான்

திரும்பப் போய், ராமரிடம் செய்தி கூறிப் படைகளைத் திரட்டி வருவதற்குக் காலமிருக்கிறது. அசோக வனத்தில் பார்த்த காட்சியெல்லாம் அனுமான் மனத்தில் சித்திரம்போல் பதிந்து கிடக்கிறது. இந்தச் சித்திரத்தின் ஞாபகத்தால்தான், அனுமான், பின்னல் ராமரிடம் போய்ச் சீதையைப் பற்றி உணர்ச்சிப் பெருக்குடன் வர்ணிக்கிருன்.

ராவணன் போன பிறகு, அரக்கியர்கள் சீதையை இமை கொட்டாது காவல் செய்கிருர்கள். அனுமான் ஒரு 'விஞ்சை'யால் அவர்களைத் தூங்கச் செய்கிருன். சீதை, தனது நிலைமையைப் பற்றித் துக்கித்துப் புலம்பி, இக்கஷ்டமெல்லாம், தன்னுலேயே வந்ததென்றும், தன் பழியைத் தானே தீர்த்துக்கொள்ளவேண்டுமென்றும் நினைந்து, தன்னைப் பலவாருக நொந்து உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்து, ஒரு மாதவிக் கொடிப் பக்கம் போன சமயம், நமது நெஞ்சைப் பிளந்து உணர்வை மங்கச் செய்யும் ஒரு சோக நாடகம் நமது கண் முன்னுல் உருவெடுக்கிறது. இதுவே தக்க சமயமென்று, அனுமான், அவள் முன் வந்து நின்று வணங்கித், தான் ராகவன் தூதனென்று சொல்வதும், சீதை, முதலில், இதுவும் ராவணனின் வஞ்சகமா யிருக்குமோ வென்று ஐயுற்றுப் பின்னுல் தெளிந்து, அனுமானின் விருத்தாந்தத்தை யறிந்து, புத்துயிர் பெற்றுப், பேரானந்தமடைந்து அனுமானை வாழ்த்துவதும், அற்புதமான நாடகத் தன்மையுடன் கம்பரால் வரையப்பட்டிருக்கின்றன.

சீதை, அனுமான் ராமதூதன்தா னென்று தெரிந்தவுடன் சொல்லும்,

'மும்மையாம் உலகம்தந்த முதல்வற்கும் முதல்வன்தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்குச் செயல் என்னுல்
[எளிய துண்டே,

அம்மையாய், அத்தனுய அப்பனே, அருளின் வாழ்வே,
இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோ(டு)'என்ருள்
'பாழிய பணைத்தோள் வீர, துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே,யான் மறுவிலா மனத்தேன் என்னின்
ஊழியோர் பகலாய் ஓதும் ஆண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' என்ருள்.

இப்பாட்டுக்களும், அனுமானின் விஸ்வரூபத்தைப் பார்த்து, அவனுடைய உண்மையான சக்தியைத் தெரிந்த பிறகு சொல்லும்,

'மின்னேர் எயிற்று வல்லரக்கர்
வீக்கம் நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லதோர்
துணையி லாத பிழைநோக்கி,
உன்னு நின்றேன், உடைகின்றேன்,
ஒழிந்தேன் ஐயம், உயி(ர்) உயிர்த்தேன்,
என்னே நிருதர் என்னுவர்,
இவனே எங்கோன் துணையென்ருல்!
'மாண்டேன் எனினும் பழுதன்றே,
இன்றே மாயச் சிறைநின்று
மீண்டேன், என்னை ஒறுத்தாரைக்
குலங்க ளோடும் வேரறுத்தேன்,
பூண்டேன் எங்கோன் பொலங்கழலும்,
புகழே யன்றிப் புன்பழியும்
தீண்டேன்' என்று மனமகிழ்ந்தாள்,
திருவின் முகத்துத் திருவன்னுள்.

இப்பாக்களும், கரை புரண்டோடும் உணர்ச்சி வெள்ளத்தைக் கவிதையில் அமைப்பதில், கம்பர் நிகரற்ற கவியென்று எளிதில் காட்டுகின்றன.

---

# ௬௫. இராமபிரானது மறக் கருணை

[ ராவ்ஸாஹிப் மு. இராகவையங்கார் ]

ஸ்ரீ ராமபிரானுக்குக் ‘ கருணாகரன் ’ என்ற திருநாம மொன்று பழைமையாகவே உண்டு. ‘இலங்கை யெறிந்த கருணாகரன் ’ என்றார் செயங்கொண்டார். கம்பரும்,

‘கடுமையார் கானகத்துக் கருணையார் கலிஏக’

‘கருணையங்கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி ’

என்று, கருணைக்கடல் இராமபிரான் என்பதைக் குறிப்பிட்டனர். இவர்கள் கூறியபடியே, அப்பெருமானிடத்திலிருந்து கருணாப்பிரவாகம் பெருக்கெடுத்தோடிய சந்தர்ப்பங்கள் பலவுண்டு. அவனது கருணை, பெரும்பாலும் அறங் கனிந்து ஸாதுவான நிலையில் தோன்றியதாகும். தண்டகாரண்யத்து முனிவர்களுக்கும், சுக்ரீவ விபீஷணாதியர்க்கும் இராமபிரான் காட்டிய கருணைகள் இத்தகையனவே. இதனை அறக்கருணை என்பர் முன்னோர். இனி, மறத்தை அதாவது வீரத்தைச் சார்பாகக் கொண்டு அஸாதுவான நிலையில் தோன்றும் கருணை ஒன்றுண்டு. அது, செற்றங்கனிந்த நெஞ்சில் எதிரியிடம் நிகழ்வது. இதனை மறக்கருணை என்பர். மறம் என்பது வீரமாம். அறப்புகழ் மறப்புகழ், அறக்கற்பு மறக்கற்பு என்பவை, மேற்கூறிய கருணைபோல, ஸாது அஸாதுக்களாய், தர்மமும் வீரமும் பற்றி உண்டாம் புகழ்க் கற்புக்களை முறையே குறிப்பன. உதாரணமாக, சீதா பிராட்டியின்

கற்புநிலை அறக்கற்பென்றும், கோவலன் மனைவியான கண்ணகியின் கற்புநிலை மறக்கற்பென்றும் உணர்க. பிற்கூறிய மறக் கற்புப் பற்றி, கண்ணகியை வீரபத்தினி என்பர் முன்னோர். இவ்வாறே, அறக்கருணையைக் காப்பியக் கதாநாயகர் பலரிடத்தும் காணக்கூடுமாயினும், மறக்கருணை தோன்றிய இடங்கள் மிகச் சிலவே. அவற்றுள், இராமபிரானிடம் அக்கருணை பிரகாசித்த அழகான சந்தர்ப்பமொன்று இராமாயணத்துள் காணப்படுவது வருமாறு:—

அங்கதன் இராவணனிடம் தூது சென்று திரும்பி வந்து, 'மூர்க்கன் முடித்தலை அற்றபோதன்றி ஆசையறாது' என்று இராமபிரானிடம் தெரிவித்தபின், வானர சேனைகள் இலங்கைமாநகர் அகழியைத் தூர்த்துக் கோட்டையை நாற்புறத்தும் முற்றுகை யிட்டன. அது தெரிந்து, அரக்கர் பெருஞ் சேனைகள் அவற்றை எதிர்த்துப் பொரவும், அப்போரில் அச்சேனை யாவும் அதன் தலைவர்களுடன் வானர சேனைகளால் அழிபட்டன. இதனை யறிந்த இராவணன் சீற்றமிக்கு யுத்த சன்னத்தனாய்ப் போர்க்களம் புகவே, சுக்ரீவனும் மாருதியும் அவனுடன் மிகவும் பொருது மெலிந்தனர். அதனால் லக்ஷ்மணன் இராவணனை வளைத்துக் கொண்டு பெரும்போர் புரிய, அக்காலை, பிரமனளித்த வேலாயுதத்தை இராவணன் ஏவி, லக்ஷ்மணனை மூர்ச்சையடையச் செய்தனன். அவனது சோர்ந்த நிலை தெரிந்து இராவணன் அவனைத் தூக்கிச் செல்ல முயன்றும் முடியாமற் போக, அனுமான் விரைந்து ஆங்கு வந்து, அவனை இலேசாக எடுத்துச் சென்று இராமனிடஞ் சேர்ப்பித்தான். அவ்விளவலும் மூர்ச்சை தெளிந்தனன். உடனே, கடுஞ் சீற்றங் கொண்ட பெருமான் மாருதி தோளில் ஆரோகணித்தவனாய், இராவணனுடன் பெரும்போர் புரிந்து அவன் சேனை முழுவதையும்

நீறாக்கி அவன் முடிகளையுந் தகர்த்தெறிந்து, அவனையும் நிரா யுதனாக்கினன். அப்போது இராவணன் நின்ற நிலையை,

அறங்க டந்தவர் செயலிதுஎன்(று) உலகெலாம் ஆர்ப்ப
நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்றான்
இறங்கு கண்ணினன் எல்லழி முகத்தினன் தலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை ஆலன்ன மெய்யன்

என்று அழகுற மொழிந்து, இராவணனை நோக்கிக் கூறிய இராமபிரானது வீர வார்த்தைகளையும் கம்பர் பின்வருமாறு பாடுகின்றார் :

'அறத்தி னாலன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தி னால்அரிது என்ப(து) மனத்திடை வலித்தி
பறத்தி நின்னெடும் பதிபுகப் பழியொடும் பாவி!
இறத்தி யானது நினைக்கிலன் தனிமைகண் டிரங்கி.

'உடைப்பெ ருங்குலத் தவரொடும் உறவொடும் உதவும்
படைக்க லங்களும் மற்றும்நீ தேடிய பலவும்
அடைத்து வைத்தன திறந்துகொண்(டு) ஆற்றுதி யாயின்
கிடைத்தி, அல்லையேல் ஒளித்தியால்; சிறுதொழிற் கிழோய்!

'சிறையில் வைத்தவள் தன்னைமீட்டு உலகினில் தேவர்
முறையில் வைத்துநின் தம்பியை இராக்கதர் முதற்பேர்
இறையில் வைத்(து)அவற்(கு) ஏவல்செய்(து) இருத்தியேல்
தறையில் வைக்கிலன் நின்தலை வாளியிற் றடிந்து. [இன்னும்

'அல்லை யாமெனின், ஆரமர் ஆற்றெனும் தோற்றம்
வல்லை யாமெனின் உனக்குள வலியெலாம் கொண்டு
நில்ஐ யாவென நேர்நின்று பொன்றுதி எனினும்
நல்லை ஆகுதி, பிழைப்பினி உண்டெனல் நயவேல்.

'ஆள யாவுனக்(கு) அமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை, இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வா'வென நல்கினன் நாகிளங் கமுகில்
வாளை தாவுறும் கோசல நாடுடை வள்ளல்.

'பாவி! தர்ம மார்க்கத்தாலன்றி, பாவ வழியால் போர் வெற்றியை அடையலாம் என்பது பெரிய தேவர்களுக்கும் அரிது என்பதை உறுதியாக மனத்துக் கொள்க. இனி உன் நகரை நோக்கி, யாவரும் பழிக்கும்படி ஓடிப் பிழைப்பாய். இப்போதே யான் உன்னைக் கொல்லக்கூடுமேனும் உன் தனிமை நிலைக்கு இரங்கி அது செய்ய நினைந்திலேன். உன்னைச் சார்ந்த அரக்கர் பெருங் குலத்தோடும், உறவினரோடும், உனக்கு உதவும்படி நீ அரிதில் தேடி அடைத்து வைத்துள்ள படைக்கலங்களை யெல்லாம் திறந்தெடுத்துக்கொண்டு, சக்தியுள்ளவனானால், திரும்பிவந்து என்னெதிர் நின்று பொருவாய். இல்லையேல், இழிஞரினும் இழிஞனே! எங்காயினும் ஓடி ஒளிப்பாயாக. நீ பிழைக்க விரும்பினால், சிறையில் வைத்த தேவியை வெளியேற்றி, உன்னால் பதவியிழந்த தேவர்களை அவ்வவர் நிலையில் வைத்து, உன் தம்பியை இராக்கதத் தலைவரின் அரசாக்கி, அவனுக்கு நீ ஏவல்செய்து வாழவேண்டும். இவ்வாறாயின், உன் தலையை என் அம்புகளால் கடிந்து தரையில் வைக்கமாட்டேன். அன்றி, போர்புரிக என்ற பொலிவு உனக்குண்டானால், உனக்குள்ள பலங்களை யெல்லாந் திரட்டிக் கொண்டு என்முன் நில்; "ஐயா!" என்ற இரக்கக் குரலுடன் என்முன் நீ செத்து விழும்போதுதான் நீ நல்லவனாகக்கூடும். ஏதோ உயிர் தப்பலாம் என்ற ஆசையை இனி அடியோடு விட்டுவிடு. ஆள்வதற்கு எவை துணையா யிருந்தனவோ அவற்றையெல்லாங் கொண்டு நீ எதிர்த்துவந்த இப்போரிலே, அவை யாவும் சண்டமாருதத்தால் அறையப்பட்ட பூளைப்

பஞ்சு போலப் பறந்து சிதறியதை நீ கண்கூடாகக் கண்டனை. இப்போது நீ தனி நிலையில் இருப்பதால், உன்னுடன் போர் புரிய இசைந்திலேன். அதனால், இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று பேரருளுடன் கூறினன் இராமபிரான் என்பது பொழிப்பு.

எவ்வளவு கம்பீரமான சொற்களிலே பெருமானது மறக்கருணை வெளிப்படுகின்றது! நேரில் இராமபிரான் நின்று பேசுவது போலக் கம்பர் பாடிய இவ்விடத்தைப்போல, அப்பெருமானது வீரச் சிறப்புத் தோன்றும் இடம் வேறில்லை என்றே சொல்லலாம். ஆயினும், ஒரு பெரிய சங்கைமட்டும் இங்கு எழுகின்றது. மகா அபராதியான இராவணனை, வாய்த்த இந்த நல்ல சந்தர்ப்பத்தில் அழித்து முடிக்காமல் இவ்வாறு கூறியது, இராமபிரானது கருணைத்திறத்தைக் காட்டுவதென்பது உண்மைதான். ஆனால், இவனது அளவிலாற்றலைக் கண்கூடாகக் கண்ட இராவணன், 'இனி நம்மால் எதிர்த்து நிற்றல் அரிது' என்று சரணாகதி பண்ணிவிடுவானாயின், அவன் தம்பி விபீஷணனுக்குக் கடற்கரையிலே 'இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' என்று யாவருமறியப் பெருமான் செய்த பிரதிக்ஞை என்னாகும்? அதற்கு இவன் செய்யும் பரிகாரம் யாது?—என்ற கேள்விகள் உண்டாமன்றோ? அதற்கும் விடையளிப்பவர்போலக் 'கோசல நாடுடை வள்ளல்' என்று இறுதித் தொடரைக் கம்பர் அமைத்துள்ள அழகு குறிப்பிடத் தக்கது. அவ்வாறு, இராவணன் சரணம் புகுவானாயினும், தான் செய்த பிரதிக்ஞையைக் காக்கவல்ல சத்திய சங்கற்பன் பெருமான் என்பதும், அவன் சரண்புக்க நிலையில், தன் சொற்படி இலங்கை யரசை விபீஷணனுக்கே அளித்துவிட்டு, இராவணனுக்கு அவன் நிலை தாழாதிருக்கும்படி, தன் ஏகாதிபத்யமான

கோசல ராஜ்யத்தையே அளித்துதவக்கூடியதான வீரன் அவன் என்பதும், அதனால் அவனது ஆதி சங்கற்பம் ஒரு போதும் பங்கமுறக் கூடியதன்று என்பதும் ஸாபிப்பிராய மாக அத்தொடரில் அமைந்து திகழுதல் காணலாம்.

'.........................நாகிளங் கமுகின்
வானைதாவுறும் கோசல நாடுடை வள்ளல்'

என்ற விசேஷணத்தால், அவ்வாறு தான் அளிக்கக்கூடிய நாடு இலங்கைக்குக் குறைந்த வளமுடையதன்று என்பதைக் குறிப்பிடும். இத்தகைய பொருட்பொலிவும் சொற் செறிவும் பொலியும்படி பாடிய கம்பநாடரது அருங் கவித் திறம் யாவரும் அறிந்து போற்றற்குரியதாகும். இவ்வாறு இராமபிரானிடம் மறக்கருணை தோன்றிய சந்தர்ப்பம், முதல் நாட்போர் என்று கொண்டு பாடினர் நம் புலவர் பெருமான். ஆனால், வால்மீகத்தில் அது நிகழ்ந்த இடம் வேறாகக் காணப் படுகின்றது. வானர சேனையும் அதன் தலைவர்களும் அரக்கர் சேனையால் அழிவுண்டு குலைந்தும், இராம லக்ஷ்மணர்கள் நாக பாசத்தால் மூர்ச்சையடைய அதனைப் பிராட்டி கண்டு புலம் புவதும், தோல்வியுற்ற நிலையில் கருடபகவானது சாந்நித்தியத் தால், அவ்விராமனும் இளவலும் உயிர்த்தெழுந்து வலியுற்றன ரென்பதும், அதன் பின்பு நடத்திய பெரும் போரிலே, இராவணனை வென்று நிராயுதனாக்கி அவன் நிலைமைக்கிரங்கி 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று இராமபிரான் கூறியருளி னன் என்பதும் அவ்வட நூலிற் காணும் கதாபாகம். இவ்வாறு, தன் சேனைகளையும் தன்னையுமே அலைத்த இராவணனது வெற்றிக்குப் பின் நிகழ்ந்த வேறு போரில் இராமபிரான் ஜயம் அடைந்தனர் என்றும் அதனில் தன் மறக்கருணையைக் காட்டினர் என்றும் உள்ள கதையமைப்பில், விசேட வீரச் சிறப்பு நிகழாமைபற்றி, அந்நிகழ்ச்சியை அங்கதன் தூதுக்

குப் பின் நடந்த முதனுட் போரில் வைத்து, தன் பேராற்றலை முதலெடுப்பிலே இராவணன் கண்டு பிரமிக்கும்படி செய்து, தன் மறக்கருணையையுங் காட்டினன் அப்பெருமான் என்று மாற்றி அமைத்தார் கம்பர் என்று தோற்றுகின்றது. எவ் வாருயினும், இராமபிரான் காட்டிய அவ் வீரக்கருணையின் சிறப்புப் போல, வேறெந்த இடத்தும் காணப்படவில்லை என்றே சொல்லக்கூடும். இத்தகைய அரிய செய்தியைத் தம் உள்ளத்துக்கொண்டே,

> பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு

என்று, இம் மறக்கருணையைச் சிறப்பிக்கலாயினர் திருவள்ளு வரும். போரில் அஞ்சாது நின்று காட்டும் வன்கண்மை யையே பேராண்மை அல்லது மகா வீரம் என்பராயினும், அவ்வீரத்துக்குக் கூர் என்று சிறப்பிக்கப்படுவது, பகைவன் தளர்ந்த நிலையில் அவனிடம் அருளுடன் புரியும் உபகாரமே என்பது இக்குறளின் கருத்து. இங்கே, பரிமேலழகர் — 'ஊராண்மை – உபகாரியாந் தன்மை; அஃதாவது, இலங் கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத், தமியனு யகப்பட்டானது தனிமை நோக்கி, அயோத்திய ரிறை மேற்செல்லாது, "இன்று போய் நாளை நின் தானை யோடு வா" என விட்டாற் போல்வது' என்றெழுதிய விசேடவுரை குறிப்பிடத்தக்கது. இதனைப் பெரும்பாலும் ஒத்த கதாபாகம் மகாபாரதத்தும் ஓரிடமுண்டு. அது பதினாறும் நாட் போரில், தனியனுய் அகப்பட்ட கர்ணனை வென்று கொல்லாமல் அருச்சுனன், 'நாளைப் போருக்கு வருக' என்று விட்ட சந்தர்ப்பமாகும். இதனை, வில்லி புத்தூரார்,

அன்று போர்புரி சேனையின்பதி யானவீரனை 'நீ
இன்று போய்இனி நாளைவா'என இனிதியம்பினனால்
வென்றிகூர்வரி வின்மையாலடல் வெவ்வரக்கரைமுன்
கொன்றகாளையை யொத்தபேரிசை கொண்ட ஆண்மையினன்

என்று பாடுதலும், 'இன்று போய் நாளை வா' என்று மறக் கருணை புரிந்த திறத்தில் இராமபிரானோடு ஒத்தவன் அருச்சுனன் என்பதைப் பின்னிரண்டடிகளிலே அவர் குறிப்பிட்டிருத்தலும் அறியத்தக்கவை. இவ்வாறு பேராண்மை தோற்றுவிக்குங்கால் பகைவனிடம் புரியும் இக்கருணையையே,

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை *

என, அன்புடைமை அதிகாரத்துங் குறிப்பிட்டனர் வள்ளுவனார். 'அறச்செயலுக்கு மட்டும் அன்பு சார்பாகும் என்று கூறுவர் அறியாதார்: வீரமாகிய மறச்செயலுக்கும் அவ்வன்பு சார்பாகிச் சிறப்பதாம் என்பது இதன் கருத்து.* அஃதாவது, தறுகண்மை காட்டும் வீரச் செயலும் அன்பைத் துணையாகக் கொண்டே நிகழவேண்டும் என்பதாம். அன்பு முதிர்ந்த நிலையே அருளாகிய கருணையாதலால் இக் குறளில் அன்பென்று கூறப்பட்டது கருணையையும் உள்ளடக்கியதேயாகும். ஆகவே, இம் மறக்கருணையையே, அம் மறம் நிகழுமிடம்பற்றிப் படைச்செருக் கதிகாரத்திலும், அதன் சார்புச் சிறப்புப்பற்றி அன்புடைமை யதிகாரத்திலும் ஆக இரண்டிடத்துங் கூறலாயினர் திருவள்ளுவர் என்க. இவ்வாறு, பகைவனது தளர் நிலையிற் காட்டும் அன்புச் செயல், தழிஞ்சி என்ற புறத்துறையைச் சார்ந்ததாகும்.

---

* இக்குறளுக்கு வேறுரை கூறினர், பரிமேலழகர். அதன் பொருத்தம் அறிஞர்களது ஆராய்ச்சிக்கு உரியது.

அத்துறையாவது, ஒரு வீரன், தன்னெடு பொருது தோற்றவன் மேல் ஆயுதஞ் செலுத்தாத பேராண்மை என்பர். [தழிஞ்சி-தழுவுதல்.] இவற்ருல், அறக்கருணேயோடு, மறக்கருணேயாலும் ஒப்புயர்வற்ற கருணுமூர்த்தி இராமபிரான் என்பதைக் கம்பர் சிறப்பித்துள்ள மாட்சி யாவர்க்கும் விளக்கமாகும்.



# ௧௬. கவிகளும் கும்பகருணனும்

[ பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், பி. ஏ., பி. எல். ]

நமது நாட்டிலே இராமாயணக் கதை பரவியிருப்பது போல் வேறெந்த நாட்டிலும் எந்தக் கதையும் பரவியிருப்ப தில்லை என்று சொல்லலாம். தோட்டி முதல் தொண்டமான் வரையில், பச்சைக் குழந்தை முதல் பல் விழுந்த பாட்டிவரை யில் எல்லாருக்கும் இராமன், சீதை, இராவணன் முதலியவர் களை நன்றாகத் தெரியும். ஒரு வேளை இராவணனைத் தெரி யாத குழந்தை இருந்தாலும் இருக்கலாம். கும்பகருணனைத் தெரியாத குழந்தை இராது. ஏனெனில், ஒவ்வொரு வீட்டி லும் குறட்டைவிட்டுத் தூங்குபவனைப் பார்த்துப் பரிகசிக் கும்போது 'கும்பகருணன்மாதிரித் தூங்கிறான்' என்று சொல் வதும், சிற்சில வேளைகளில் காலையில் வெயில் வந்த பிறகும் தூங்கும் குழந்தையை எழுப்ப முயலும்போது 'கும்பகருணா, எழுந்திரு!' என்று சொல்லுவதும் வழக்கமா யிருந்துவரு கிறது. கும்பகருணனுடைய கியாதி அப்படிப் பரவி யிருக்கிறது!

'நிஜமாகவே இலங்கை என்ற பட்டினம் ஒன்று இருந் ததா? அது எங்கே இருந்தது? அதிலே கும்பகருணன் என்ற ஒருவன் நிஜமாகவே இருந்தானா?' என்றெல்லாம் மெய் ஆராய்ச்சியாளரும் போலி ஆராய்ச்சியாளரும் ஆராய முயன்று வருகிறார்கள். அந்த ஆராய்ச்சி நமக்கு வேண் டாம். கும்பகருணனைத் தம்முடைய புறக் கண்களால் கண் டவர் ஒருவரும் இப்பொழுதில்லை. ஆதலால், இனி இருக்கப்

போவதுமில்லை. ஆனால் அவனை மனக் கண்களால் கண் டவர் பலர். அவர்கள் யாவரும் கற்பனைத் திறம் படைத்த கவிகள் என்று சொல்லலாம். தங்களுடைய கற்பனைக் கண் களாலே அவர்கள் கும்பகருணனைக் கண்டிருக்கிறார்கள் — ஒரு கும்பகருணனை அன்று, பல கும்பகருணர்களை. இவ் வாறு சொல்வது எதனால் என்றால், அவர்கள் கண்ட கும்ப கருணனுக்குப் பெயர் ஒன்றேயாயினும் வடிவமும் தன்மை யும் பிறவும் மிகவும் மாறுபட்டிருக்கின்றன என்பது கவனிக் கும்போது தெரியவருகிறது.

௧

குழந்தைப் பிராயத்திலே கிழப் பாட்டி தன்னுடைய அருமைப் பேரனோடு கொஞ்சுகிறாள்; அவனுக்குச் சாதம் ஊட்டும்போது கதை சொல்லுகிறாள். இராமாயணக் கதை யைப் பலர் சொல்லக் கேட்ட பாட்டி, தன் கற்பனையையும் இடையே புகுத்திக் கும்பகருணனை வருணிக்கிறாள். இரா மன் மேலுள்ள பற்றினால் கும்பகருணன் மிகவும் கோரமாகச் சிருஷ்டிக்கப்படுகிறான். அக்கதையைக் கேட்கும் குழந்தை 'கண்களில் நீர் ததும்ப, உதடுகள் துடிதுடிக்க, நெஞ்சம் பறை யறைய, சந்தோஷமோ துக்கமோ மனத்தில் நிகழ்வதை முகம் கண்ணாடிபோல் காட்ட, தன்னை மறந்து, சுற்றுள்ள யாவை யும் மறந்து, வாயில் போன சாதம் தெரியாதபடி அதை அநுபவிக்கிறது. குழந்தையின் மனக் கண்ணின் முன்னே கும்பகருணன் தோன்றுகிறான்: குழந்தை அவனைப் பார்க் கிறது. இரவிலே, எல்லாரும் மெய்மறந்து தூங்கும் நடுநிசி யிலே, கனவுகாணும் குழந்தையின் கண்ணெதிரே, கும்பகரு ணனுடைய மலைபோ லுயர்ந்த வடிவமும், பனைபோல் நீண்ட கைகளும், சூலமும், கதையும், குகைபோல் பிளந்த வாயும்,

அதனுள்ளே மின்னும் கோரப் பற்களும், நீண்ட நாவும் தோன்றிக் குழந்தையை அச்சுறுத்துகின்றன. குழந்தை வீறிட்டுக் கொண்டு விழித்துக்கொள்கிறது. பிறர் தேற்றத் தூங்குகிறது. ஆனல் இந்தக் காட்சி அதன் நெஞ்சைவிட்டு நீங்குவதில்லே. பகல் நேரத்தில் விளையாட்டு ஓய்ந்து ஒழிந்த நேரங்களில் கும்பகருணனை மறுபடியும் மறுபடியும் வெவ் வேறு வகையான கோரத் தோற்றங்களோடு காண்கிறது. பல வேளைகளில், பல இடங்களில், தான் கண்டு நடுங்கிய ஒவ்வொரு பயங்கரக் காட்சியும் ஒன்ருகத் திரண்டுவந்து இந்தக் கோர வடிவத்தில் ஒன்றுபட்டு, கும்பகருணனுடைய பயங்கர வடிவத்தை மேன்மேலும் பெரிதாக்கி வருகின் றன. குழந்தையாகிய கவி கண்ட கும்பகருணன் தீமையே வடிவாகியவன், அச்சமே உருவெடுத்தவன், யாதொரு நற்கு ணமும் நற்செயலும் அற்றவன், மனிதரைத் தின்று வாழும் வெறும் இராக்ஷசனே அவன். குரங்குகளையும் ரிஷிகளையும் யாதொரு வித்தியாசமும் பாராட்டாமல் நறநறவென்று-தான் தேன்குழலேக் கடிப்பது போல் - கடித்துத் தின்பவன் கும்ப கருணன் என்று குழந்தை நினேக்கிறது. அதன் உடல் சிலிர்க்கிறது. ஆ! என்ன கோர வடிவம் இது! பாட்டியும் குழந்தையுமாகக் கண்ட கும்பகருணனை நாம் இன்றளவும் மறக்கவில்லே; நம்மால் மறக்கவும் இயலாது.

உ

சற்றே வயது ஏற ஏற, கும்பகருணனைப் பற்றிய செய்திகள் வேறு வகையாக நமக்குக் கிடைக்கின்றன. இரா மாயணக் கதையைப் புத்தகங்கள் மூலமாக நாம் படிக்கிருேம். அவற்றிலேயும் கும்பகருணனைப் பற்றிய செய்திகள் சொல் லப்படுகின்றன. வடமொழியிலே இராமோதந்தம் என்ற ஒரு

சிறு நூல் இருக்கிறது. அதிலே இராம கதையைச் சொல்லத் தொடங்கிய கவி இராவணனையும் கும்பகருணனையும் பற்றிச் சொல்லத் தொடங்குகிறார். 'முன்னால் விசிரவஸ் என்ற ஒருவனுக்கு இராவணன் என்ற பிள்ளை ஒருவன் இருந்தான். அவனுக்கு இரண்டு பேர் தம்பிகள். கும்பகருணன் விபீஷணன் என்பவர்கள். அவர்கள் மூவரும் தவம் செய்தார்கள். அவர்கள் செய்த கடுந் தவத்தினால் பிரமன் அவர்கள் முன்னே தோன்றினான். தங்களுக்கு இஷ்டமான வரங்களை அவர்கள் கேட்டார்கள். மனுஷ்யர்களாலன்றி வேறு யாவராலும் தான் கொல்லப்படாதிருக்கவேண்டும் என்று இராவணன் கேட்டுக் கொண்டான். தேவர்களை அற்றுப்போகவேண்டும் என்று கேட்க எண்ணிய கும்பகருணன் நா குழறித் தூக்கம் வேண்டும் என்ற வரத்தைக் கேட்டுப் பெற்றான்' என்று கதை சொல்லுகிறார். பிறகு யுத்த காண்டம் வரையில் கும்பகருணனைப் பற்றிய பேச்சே இல்லை. யுத்த காண்டத்திலே இராமனால் முதற் போரிலே தோல்வியடைந்த இராவணன் கும்பகருணனைப்பற்றி நினைக்கிறான். அவனை வெகு அவசரமாய் எழுப்பி, 'இராமனைக் கொன்றுவிட்டுவா' என்று ஏவுகிறான். அப்பொழுது குரங்குக் கூட்டங்களை விழுங்குகிற இரவிற் சஞ்சரிப்பவனான கும்பகருணனைச் சீக்கிரமாக இராமன் இந்திரனுடைய அம்பினாலே கொல்லுகிறான். இவ்வளவுதான் அதிலே காணப்படுகிறது. கும்பகருணன் கேவலம் மிருகத்தன்மை மட்டும் வாய்ந்தவனன்று, கடுந் தவம் செய்தவன், பிரமனை நேரில் வரச் செய்தவன் என்னும் அவனுடைய சிறப்பு ஒருவாறு நமக்குத் தெரிகிறது. வாய்த் தடுமாற்றத்தால் தூக்கத்தைப் பெற்றுத் தவத்தின் பயனை இழந்தவன் என்று அவன் மேல் சற்று இரக்கமும் நமக்கு ஏற்படுகிறது. இந்தக் கும்பகருணனுக்கும்

பாட்டியின் சிருஷ்டியாகிய கும்பகருணனுக்கும் அதிக அள வில் வித்தியாசம் இல்லையாயினும் சிற்சில வித்தியாசங்கள் இருக்கின்றன. இந்தக் கும்பகருணன் சற்று வேருனவன் என்று சொல்லலாம்.

ரு

வடமொழியிலே சம்பூ ராமாயணம் என்ற நூல் ஒன்று இருக்கிறது. இதைப் போஜ சம்பூ என்றும் சொல்வதுண்டு. பாட்டும் உரை நடையுமாக விரவியது இச்சிறு காவியம். இதைப் போஜ மகாராஜா இயற்றினர் என்று சிலர் சொல்லு கிருர்கள்: சிலர் மறுக்கிருர்கள். யார் செய்தால் என்ன? அவ்வளவு தூரம் சண்டை போடவேண்டிய மிகச் சிறப் பான காவியம் அன்று இது. இந்தக் காவியத்திலே யுத்த காண்டம் வரையில் கும்பகருணனைப் பற்றிய பிரஸ்தாபமே கிடையாது. யுத்த காண்டத்திலேதான் கவி அவனை நம் முன்னே கொண்டுவந்து நிறுத்துகிருர். ‘முதற் போரிலே தோல்வியுற்ற இராவணன், உடல் நடுக்க முற்றவனுய், சூரிய னுடைய வெளிச்சத்திலே ஒளியிழந்த விளக்கைப்போல் மங் கிய நிலையை அடைந்தவனுய்த் தன்னுடைய நகருள் பிரவே சிக்கிருன். படுத்து உறங்கிக்கொண்டிருந்த கும்பகருண னைப் பலவாறு முயன்று எழுப்புகிருன் — அவன் விழித்துக் கொள்ளுதற்கு உரிய காலம் வருமுன்னே. தன்னுடைய தலைவனுடைய உத்தரவை மேற்கொண்ட கும்பகருணனும் மீளாத உறக்கத்தைத் தருவதாகிய யுத்தகளத்தைச் சென் றடைகிருன். மலையைப் போன்றவனுயும், ஆகாயத்திலே சுழன்றுகொண்டிருக்கும் தலையை உடைய திரிசூலத்தை ஏந்தியவனுயும், பிரளய காலத்திலே உலகனைத்தையும் அழிக் கப் புறப்படும் ருத்திரனைப் போன்றவனுயும் உள்ள அவ்

விராக்கதனைக் கண்ட குரங்குகள் யாவும் பயத்தால் அடங்கி யொடுங்கிக் களையிழந்து, புயற் காற்றினால் மோதப்பட்டு ஓடும் மேகங்களைப் போல் நாலு திக்குகளிலும் வேகமாய் ஓடத் தலைப்படுகின்றன. பிறகு அங்கதன் அக் குரங்கு களைத் தடுத்து நிறுத்துகிறான். கும்பகருணன் எத்தனையோ குரங்குகளைக் கொல்லுகிறான்; குரங்குத் தலைவர்களை அடித்து வீழ்த்துகிறான்; சுக்ரீவனோடு போர் செய்து, அவனை மெய் மறந்து விழச் செய்து, அவனைத் தூக்கிச் செல்கிறான் — இராவணனை வாலி தூக்கிச் சென்றது போல. சுக்ரீவன் கும்பகருணனைக் கடித்து அவன் முகத்தைச் சூர்ப்பணகையின் முகத்தைப் போலாக்குகிறான். இரத்தம் பொழியும் பயங்கர வடிவத்தையுடைய கும்பகருணன் மீண்டு வந்து, ஒவ்வொரு கணமும் வளர்ந்து வரும் வெறியால், குரங்குகள் யார், இராக்கதர்கள் யார் என் பதைக்கூட அறியமாட்டாதவனாய், இரு திறத்தாரையும் ஒன்றுபோல விழுங்கத் தலைப்படுகிறான். லக்ஷ்மணனைத் தனக்கு ஒரு நிகராகக் கருதாமல் அலட்சியமாய் அவன் மேல் ஒரு மலையை வீசி எறிந்துவிட்டு, இராமனை எதிர்ப்படு கிறான். இருவருக்கும் போர் நிகழ்கிறது. பாணங்களினால் அடிபட்ட கும்பகருணனுடைய மலை போன்ற கை ஒன்றை இராமன் பாணத்தால் வெட்டித் தள்ளுகிறான். பிறகு மற் றொரு கையையும் வெட்டிக் கடலில் தள்ளுகிறான். கடலிலே போடப்பட்ட மற்றொரு அணை போல் தோன்றுகிறது அது. பிறகு அவனுடைய தலையையும் இராமன் வெட்டி வீழ்த்து கிறான். குரங்குகள் ஆரவாரித்தலைக் கேட்ட இராவணன் கும்பகருணன் போரில் இறந்தான் என்று அறிகிறான். அவ னுடைய முகமானது மிகவும் வாட்டத்தை அடைகிறது.' இவ்வளவுதான் போஜ சம்பூவில் சொல்லப்படும் விருத்தாங்

தம். இதிலே கும்பகருணன் போரில் வல்லவன், வெறிகொண் டவன், எல்லா உயிர்களையும் தின்பவன் என்பது தெரிகிறது. அதோடு இராவணனுக்கு அவன் மேலுள்ள அன்பு சிறிது, மிகச் சிறிது, காட்டப்படுகிறது.

ரு

காளிதாஸன் எழுதிய ரகு வம்சத்திலே பத்தாம் சருக்கம் முதல் பதினாலாம் சருக்கம் வரையில், நானூற்று நாற்பத்தொன்பது சுலோகங்களிலே இராமாயணக் கதை முழுவதும் சொல்லப்படுகிறது. தசரதன் பிள்ளைப் பேறில் லாமல் வருந்தியது முதற்கொண்டு இராமன் இராவணனைக் கொன்று அயோத்திக்குத் திரும்பி வந்து, அங்கேயிருந்து சீதையைக் காட்டுக்கு அனுப்பியது வரையில் உள்ள கதை முழுதும் இந்த ஐந்து சருக்கங்களிலே சொல்லப்படுவதால், எல்லாம் சுருக்கமாகவே இருக்கிறது. ரகு வம்சத்திலே கும்ப கருணனை முதன் முதலில் யுத்தகளத்தில்தான் சந்திக்கிறோம். 'குரக்கினத்து அரசனால் கும்பகருணன் மூக்கையும் காதை யும் இழந்து தன்னுடைய தங்கை அடைந்த நிலையைப் பெற்றான். கோடரியினால் பிளக்கப்பட்ட மனோ சிலையைப் போன்று தோன்றினான், இரத்தம் வழிதலினால். அவன் இராமனை வந்து எதிர்த்தான். தூக்கத்திலே அளவிலாப் பற் றுடைய அவன் அகாலத்தில் எழுப்பப்பட்டான். ஆயினும் இராமனுடைய அம்புகள் அவனை நெடுந் தூக்கத்தில் ஆழ்த் தின.' இவ்வளவுதான். இரண்டே இரண்டு சுலோகங்களுக்கு மேல் காளிதாஸன் கும்பகருணனுக்கு இடங் கொடுக்கவில்லை. கும்பகருணனைப்பற்றிக் காளிதாஸனுக்கு அவ்வளவு நல்ல அபிப்பிராயம் இல்லை என்பது நிச்சயம்.

௫

மகா பாரதத்திலே வன பர்வத்திலே இராமாயணக் கதை சொல்லப்படுகிறது. அதிலே கும்பகருணனைப் பற்றிய விருத்தாந்தம் சற்றே விரிவாக உள்ளது. பிரமதேவருடைய மனத்தினின்று புலஸ்தியர் என்ற புத்திரர் ஒருவர் உண்டானார். அவருக்கு வைசிரவணன் என்ற பிள்ளை ஒருவன் பிறந்தான். அவன் தன் தகப்பனாரை விட்டுவிட்டுத் தன் பாட்டனாகிய பிரமதேவனைப் போய் அடைந்தான். அதனால் புலஸ்தியருக்குக் கோபம் உண்டாயிற்று. அந்தக் கோபத்தால் விசிரவஸ் என்கிற புத்திரன் தோன்றினான். அவனுக்குப் புஷ்போத்கடை, ராகை, மாலினி என்று மூன்று மனைவியர்கள் இருந்தார்கள். இராவணனும் கும்பகருணனும் புஷ்போத்கடையின் புத்திரர்கள்; கரனும் சூர்ப்பணகையும் ராகைக்குப் பிறந்தவர்கள்; விபீஷணன் மாலினியின் புத்திரன். விபீஷணன் யாவரினும் அழகானவன்; இராவணன் சிறந்த ஆண்மையும் அளவற்ற பலமும் பராக்கிரமமும் படைத்தவன்; கும்பகருணன் மாயையில் தேர்ந்தவன், போரில் வல்லவன், பலத்தில் யாவரினும் மேம்பட்டவன், பயங்கரமானவன், இரவில் திரிபவன்; கரன் வில்லில் பயின்றவன்: எல்லாரும் வேதம் படித்தவர்கள், சூரர்கள், நன்னடத்தை யுள்ளவர்கள். இவர் யாவரும் தம் தகப்பனோடு கந்தமாதனத்தில் வாழ்ந்து வந்தார்கள். பிறகு எல்லாச் செல்வங்களும் படைத்த குபேரனைக் கண்டு, தாமும் செல்வம் பெற விரும்பித் தவம் புரிந்தார்கள்......கும்பகருணன் வெறும் தரையில் படுத்து, அன்ன ஆகார மின்றிக் கடுந்தவம் புரிந்தான்......பிரமன் தானாகவே தோன்றிக் கும்பகருணனை 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். அவனுடைய மனத்திலே தமோ

குணம் நிரம்பி யிருந்ததால், அவன் 'பெரும் தூக்கம் வேண்டும்' என்று கேட்டான். 'அப்படியே யாகுக' என்று வரமளித்தார் பிரமதேவன். பிறகு யுத்தகாண்டம் வரையில் கும்பகருணனைப் பற்றிப் பேச்சே யில்லை. யுத்தத்திலே அனுமார் பிரகஸ்தன், தூம்ராக்ஷன் முதலியவர்களைக் கொல்கிறார். அச்செய்தி இராவணனுக்குத் தெரிவிக்கப்படுகிறது. அவன் பெருமூச்சு விட்டு, 'கும்பகருணன் சண்டையில் தலையிட வேண்டிய காலம் வந்துவிட்டது' என்று சொல்லித் தூங்கிக்கொண்டிருந்த கும்பகருணனை எழுப்பச் செய்கிறான். பேரொலியிடும் வாத்தியங்களை முழக்கி அவனை எழுப்புகிறார்கள். விழித்த பிறகும்கூட மிகவும் முயன்ற பின்புதான் அவனுக்குத் தன் சுயநிலை வந்து, தூக்கம் முற்றிலும் தெளிகிறது. அவனைப் பார்த்து, 'நீ பாக்கிய சாலி. நீ தூங்கிக்கொண்டிருந்ததால், இந்த மகா பயங்கரமாயும் கெட்டதாயும் உள்ள காலத்தை நீ சிறிதும் உணரவில்லை. கடலைக் கடந்து இராமன் குரங்குகளோடு இதோ வந்துவிட்டான். நம்முள் அநேகரைக் கொன்றுவிட்டான். அவன் மனைவியாகிய சீதையை நான் கவர்ந்து வந்ததால், அவளை மீட்கும் பொருட்டு வந்திருக்கிறான். உன்னைத் தவிர வேறு ஒருவராலும் அவனைக் கொல்ல முடியாது' என்கிறான். இராவணன் ஆணையை மேற்கொண்ட கும்பகருணன் கவசம் பூண்டு இராமனைத் தேடிப் போருக்குப் புறப்படுகிறான். அவன் லக்ஷ்மணனைப் பார்க்கிறான். குரங்குகளைத் தாக்கிக் கொன்று தின்கிறான். சுக்ரீவன் அவனை வந்து எதிர்த்து அவன் மேலே தாவி மரத்தால் அவன் தலையைத் தாக்குகிறான்; மரம் ஒடிகிறதே தவிரக் கும்பகருணன் அதை லட்சியம் செய்யவே யில்லை. அந்த அடியினால் அவனுக்குத் தூக்கம் நன்றாகத் தெளிகிறது! கும்பகருணன் தன் இரண்டு

கைகளாலும் சுக்ரீவனை இறுகப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போகிறான். அவனை லக்ஷ்மணன் எதிர்த்துத் தாக்குகிறான். தாக்கவே, கும்பகருணன் சுக்ரீவனைக் கீழே போட்டுவிட்டு லக்ஷ்மணனோடு போர் புரிகிறான். பிறகு லக்ஷ்மணன் தன்னுடைய அம்புகளால் கும்பகருணனுடைய இரண்டு கைகளையும் வெட்டி வீழ்த்துகிறான்; அவனுக்கு நான்கு கைகள் உண்டாகின்றன. அவற்றையும் லக்ஷ்மணன் அறுக்கவே, கும்பகருணனுக்குப் பல கால்களும் கைகளும் உண்டாகின்றன. பிறகு லக்ஷ்மணன் பிரம்மாஸ்திரத்தை எய்து கும்பகருணனைக் கொல்லுகிறான். அவன் இறந்ததைக் கேட்ட இராவணன் தன்னுடைய மகனான இந்திரஜித்தைப் போருக்கு அனுப்புகிறான்.

இந்தக் கதையிலே கும்பகருணனுடைய பிறப்பும், படிப்பும், தவமுயற்சியும் சொல்லப்படுகிறது. அவனுடைய குணம் இயற்கையாகவே தமோகுணம் உடையதா, அல்லது வரம் வேண்டும் என்று நினைத்த வேளையிலே மட்டிலும் அந்தக் குணத்தைப் பெற்றிருந்ததா என்பது அவ்வளவு தெளிவாயில்லை. அவன் மகா பலசாலி, மகா சூரன்; போருக்குச் சென்று கடும் போர் புரிகிறான். லக்ஷ்மணனால் — இராமனால் அன்று — அவன் கொல்லப்படுகிறான். அவன் இறந்ததைக் கேட்ட இராவணன் மேலே நடக்கவேண்டிய காரியத்தில் ஈடுபடுகிறானே தவிர, வருந்தியதாய்க் கவி சொல்லவில்லை.

௬

இனி, வால்மீகி சொல்லிய இராமாயணக் கதையைப் பார்ப்போம். அதிலே, பால காண்டத்திலே கதைச் சுருக்கத்தைச் சொல்லும்போது, 'கும்பகருணன் கொல்லப்பட்டதும்' என்று சொல்லியதைத் தவிர வேறொன்றும் சொல்ல

வில்லை. ஆரணிய காண்டத்திலே சூர்ப்பணகை அவனைக் குறிப்பிடுகிறாள். பிறகு யுத்த காண்டத்திலேதான் அவனை மீண்டும் நாம் பார்க்கிறோம். அவனுடைய வரலாறு உத்தர காண்டத்தில் சொல்லப்படுகிறது. அதை முதலில் பார்ப் போம்.

ஒரு காலத்தில் சுமாலி என்ற ராக்ஷசன் இருந்தான். அவனுக்குக் கைகஸி என்ற பெண் ஒருத்தி இருந்தாள். அவள் மிகவும் அழகுள்ளவள்; இலக்குமியைப் போன்ற தோற்றம் உடையவள். அவர்கள் இருவருமாக ஒரு நாள் போய்க்கொண்டிருக்கையில் எல்லாச் செல்வங்களும் நிரம்பிய குபேரன் தன்னுடைய புஷ்பக விமானத்தின் மேலேறிப் போவதைப் பார்த்தார்கள். இவ்வகைச் செல்வத்தை ராக்ஷ சர்கள் எவ்வாறு பெறலாம் என்பதைப் பற்றிய எண்ணம் சுமாலிக்கு உண்டாயிற்று. ஆகவே, அவன் ஆலோசனை செய்து தன் பெண்ணைத் தவ வலிமை நிரம்பிய ஒருவனுக்கு மனைவியாகக் கொடுப்பது செல்வம் பெறுவதற்கு ஒரு வழி யாகு மென்று நினைத்தான். தவம் செய்துகொண்டிருந்த விசிரவஸ்ஸினிடம் அவளை அனுப்பினான். அந்த முனிவன் அக்கினிஹோத்திரம் செய்துகொண்டிருந்த சமயத்தில் அவனைக் கைகஸி அணுகினாள். ஆதலால் 'கொடியவர்களும் கொடிய தோற்றமுடையவர்களும், கொடியவர்களாலே போற்றப்படுபவர்களுமான புத்திரர்களை நீ பெறுவாய்' என்று அவர் சொன்னார். பிறகு அவள் வேண்ட அவர் மனம் இரங்கி, 'உன்னுடைய கடைசிக் குழந்தை மட்டிலும் நல்ல குணம் உடையவனாக இருப்பான்' என்றார். முதலில் அவள் இராவணனைப் பெற்றாள். அப்பொழுது பல அப சகுனங்கள் உண்டாயின. பூமி நடுங்கிற்று, புயல் காற்றுக்கள் அடித்தன, கடல் கொந்தளித்தது. அவனுக்குப் பிறகு மகா

பலசாலியான கும்பகருணன் பிறந்தான். அவனுடைய உடல் மிகமிகப் பெரியது. அத்துணை பெரிதான உடல் உலகத்தில் வேறொருவருக்கும் கிடையாது. மிக்க காந்தி படைத்த அக்குழந்தைகள் பெருங்காட்டிலே நன்முக வளர்ந்து வந்தார்கள். மதங்கொண்ட கும்பகருணன் அறம் வளர்க்கும் முனிவர்களைத் தின்றுகொண்டு, பசி தீராதவனாய் மூன்று உலகங்களிலும் சுற்றித் திரிந்துவந்தான். இப்படியிருக்கையில் கைகஸி மற்றொரு முறை குபேரனைக் காண நேர்ந்தது. தன் பிள்ளைகளை அழைத்து, 'அவனைப்போல் நீங்களும் செல்வம் படைத்தவர்கள் ஆக வேண்டாமா? தவம் செய்யுங்கள்' என்று தூண்டினுள். அப்படியே அவர்கள் தவம் செய்யத் தொடங்கினார்கள். வெயிற் காலத்தில் ஐந்து நெருப்புக்களின் நடுவிலும், மழைக் காலத்தில் தண்ணீரில் நின்றுகொண்டும் பதினாயிர வருஷ காலம் கும்பகருணன் கடுந் தவம் புரிந்தான். அவ்வாறே இராவணனும் விபீஷணனும் தவம் புரிந்தார்கள். அவர்களுடைய தவத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்த பிரமன் அவர்களின் முன் தோன்றினார். இராவணனுக்கும் விபீஷணனுக்கும் வரம் அளித்தார். கும்பகருணனுக்கு வரமளிக்க இருக்கையில் எல்லாத் தேவர்களுமாக ஒன்று கூடிக் கைகூப்பிப் பிரமனைப் பார்த்து, 'நீங்கள் கும்பகருணனுக்கு யாதொரு வரமும் அளிக்கலாகாது. துர்ப்புத்தியை யுடைய அவன் எல்லா உலகங்களையும் எப்படித் துன்புறுத்தி வருகிறான் என்பது உங்களுக்குத் தெரியுமே. நந்தனம் என்னும் தோட்டத்திலே ஏழு வானர மகளிரையும் இவன் தின்றுவிட்டானே! இந்திரனுடைய ஏவலாட்கள் பதின்மரையும், முனிவர்களையும், மனிதர்களையும் இவன் தின்று வருகிறான். வரம் கிடைப்பதற்கு முன்னமே இப்படி ஒருவன் செய்யத் தலைப்பட்டால், வரம் கிடைத்த பின்பு

மூன்று உலகங்களேயும் ஒரேயடியாய் விழுங்கிவிடமாட்டான? "வரம் கொடுக்கிறேன்" என்ற பெயரை வைத்துக்கொண்டு இவனுக்கு மயக்கத்தை உண்டு பண்ணுங்கள். அப்பொழுது தான் உலகத்துக்கு க்ஷேமம் ஏற்படும். அவனுக்கும் குலப் பெருமை கெடாது இருக்கும்' என்று வேண்டிக்கொண் டார்கள். பிரமன் இதைப் பற்றி ஆலோசிக்கும் பொழுது பக்கத்தில் சரஸ்வதி நிற்கக் கண்டார். 'தேவர்களின் இஷ்டம் நிறைவேறும்படியாக இவனுடைய நாவில் போய் இரு' என்றார். அவளும் அப்படியே செய்தாள். பிறகு அவர் கும்ப கருணனைப் பார்த்து, 'உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்' என்றார். 'பல்லாண்டு பல்லாண்டாக நான் உறங்கிக் கொண்டிருக்க வேண்டும். அதுதான் என் இஷ்டம்' என்று சொல்லவே, பிரமனும் அந்த வரத்தை அவனுக்கு உடனே அளித்தார். பிறகு புத்தி தெளிந்த கும்பகருணனும் 'ஆகா என்ன கேட்டுவிட்டேன்! தேவர்களால் இப்படி மதிமயக்கம் அடைந்துவிட்டேனே!' என்று வருந்தி னன். இராவணன் போர் புரிந்து வெற்றியடைந்தான். அவன் இலங்கையில் பிரவேசித்து மகுடம் சூட்டிக் கொண்டான். அதன் பிறகு அவர்களுக்கு விவாகம் ஆயிற்று. கும்பகருணனுடைய மனைவியின் பெயர் வஜ்ஜிர ஜ்வாலை. பிறகு கும்பகருணனுக்குத் தூக்கம் வந்தது. அவன் தூங்குவதற்கென்று மிகப் பெரியதாயும் அழ காயும் உள்ள மாளிகையொன்று நிருமிக்கப்பட்டது. மிகவும் பலசாலியான கும்பகருணன் தூக்கம் மேலி டப் பல்லாயிர வருஷ காலம் படுத்து உறங்கினன். அவன் தூங்கியபோது இராவணன் யாரையும் துன்புறுத்தி நாசம் செய்துவந்தான். இதுதான் உத்தர காண்டத்தில் கூறப் பட்டிருக்கும் வரலாறு.

முன் பகுதிகளிலே காணப்படும் வரலாற்றை இனிக் கவனிப்போம். வால்மீகி ராமாயணத்திலே ஆரண்ய காண்டத்திலே இராமன் சீதையோடு பஞ்சவடியிலே வசித்துக் கொண்டிருக்கும்பொழுது சூர்ப்பணகை அங்கே வருகிறாள். இராமனைக் கண்டு காமுற்று நெருங்குகிறாள். அவளை யார் என்று அவன் வினவ, தன்னுடைய குலோத்தரத்தை அவள் சொல்லுகிறாள் : 'என் பெயர் சூர்ப்பணகை. நான் ஓர் அரக்கி. நினைத்த உருவம் பெற வல்லவள். இக்காட்டில் திரிந்து அனைவரையும் அச்சுறுத்துபவள். இராவணன் என்பவன் என் தமையன். அவன் பலமுள்ளவன் ; இராக்கதர்களுக்குத் தலைவன் ; வீரன் ; விசிரவஸ்ஸின் புத்திரன். நீ கேள்விப்பட்டிருக்கலாம். எப்பொழுதும் தூங்கத் தூங்க வளரும் நித்திரையையுடையவனும் மிக்க பலசாலியாயும் உள்ள கும்பகருணனும் என் தமையன்தான்,' என்று சொல்லுகிறாள். பிறகு யுத்த காண்டம் வரும் வரையில் கும்பகருணனைப் பற்றிய பேச்சில்லை.

அனுமான் இலங்கையினுள்ளே புகுந்து சாகசச் செயல்களைச் செய்து, ஊரை நெருப்புக்கு இரையாக்கிச் சென்ற பின்பு இராவணன் மந்திராலோசனை சபை கூட்டுகிறான். அதற்குக் கும்பகருணனை அழைக்கவில்லை. அதன் பிறகு இரண்டாம் முறை மந்திர சபை கூடுகிறது. அப்பொழுது இராவணன் சபையோரைப் பார்த்து, 'ஆறு மாத காலம் தூங்கிவிட்டுக் கும்பகருணன் இப்பொழுதுதான் விழித்துக் கொண்டிருக்கிறான். அவனை அழைத்துக்கொண்டு வாருங்கள்!' என்கிறான். கும்பகருணன் சபைக்கு வரவே மந்திராலோசனை நடக்கிறது. இராவணன் தான் சீதையைக் கவர்ந்துகொண்டு வந்ததையும், தனக்கு அவள் மேலுள்ள காதலையும் சொல்லுகிறான். 'மறுகரையில் இருக்கும் சத்துருக்களைக் கொல்ல

வேண்டிய முயற்சிகளைத் தேடவேண்டும்' என்கிறான். அதைக் கேட்ட கும்பகருணன் வெகு கோபம் கொண்டு, 'சீதையைக் கொண்டுவரு முன்னே எங்களோடுகூடி ஆலோசித்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்... தாங்கள் ஆலோசிக்காமல் இப்பெரும் பாவ காரியத்தைச் செய்துவிட்டீர்கள். விஷம் கலந்த மாமிசம் தன்னைப் புசித்தவனை உடனே கொல்வதுபோல் இராமன் தங்களைக் கொல்லாமல் இருப்பது ஆச்சரியம். ஆனால், நான் தங்களுடைய சத்துருக்களைக் கொன்றுவிடுகிறேன். தாங்கள் கவலையற்றிருங்கள். ஓர் அம்பைத் தொடுத்து மற்றோர் அம்பை இராமன் எய்யு முன்னம் அவனை நான் கொன்றுவிடுகிறேன். நீங்கள் எல்லாரும் கலக்கமின்றிச் சுகமாக இருங்கள். நான் இராமனைக் கொன்ற பிறகு சீதை தங்கள் வசமாய்விடுவாள்,' என்கிறான்.

பிறகு அவன் மந்திராலோசனை சபையில் பேசவில்லை. வேறொன்றும் செய்ததாகவும் தெரியவில்லை. மறுபடியும் தூங்கப் போய்விடுகிறான்.

அதன் பிறகு இராமனோடு நடந்த போரிலே இராவணனுக்கு மகுடபங்கம் ஏற்படுகிறது. இராமனுடைய அம்புகளை அவன் நினைத்து நினைத்துத் துக்கப்படுகிறான். பிறகு கும்பகருணனைப் பற்றி நினைவு வருகிறது. 'யுத்தம் தொடங்க ஒன்பது நாளைக்கு முன்பு மந்திராலோசனை சபையில் ஆலோசனை சொல்லிவிட்டுத் தூங்க ஆரம்பித்தான். மகா பலம் பொருந்திய அவனை எழுப்புங்கள். அவன் எழுந்தானயின் நான் இராமனால் தோல்வியடைந்த துக்கம் நீங்கிவிடும்,' என்று கட்டளையிட்டான். அதைக் கேட்ட ஏவலாட்கள் ஆகாரம் முதலியவற்றை எடுத்துக்கொண்டு கும்பகருணனுடைய மாளிகைக்குப் போய் அவனை எழுப்ப முயலுகிறார்கள். அவனை உரக்கத் தோத்திரம் செய்கிறார்கள்; சந்த

னத்தை அவன்மேல் கொட்டிப் பூசுகிறார்கள்; கர்ஜிக்கிறார்கள்; சங்குகளை ஊதுகிறார்கள். அவன் எழுந்திருக்கவில்லை. கோபங் கொண்டு எல்லாரும் ஒன்றாகக் கத்துகிறார்கள் ; கையால் தட்டு கிறார்கள் ; உடம்பைப் புரட்டுகிறார்கள் ; பெருஞ் சத்தம் போடுகிறார்கள் ; பேரிகைகள் முதலியவற்றை அடித்து முழக்குகிறார்கள் ; உலக்கைகளைக் கொண்டு புடைக்கிறார்கள் ; குதிரைகள் முதலியவற்றை அவன்மீது ஓட்டுகிறார்கள் ; பீரங்கிகளை வெடிக்கிறார்கள் ; ஒன்றுக்கும் அவன் எழுந்திருக்க வில்லை. பிறகு ஆயிரம் யானைகளை விட்டு ஓட்டுகிறார்கள். கும்பகருணன் கொஞ்சம் உணர்ச்சி யடைகிறான். தூக்கம் குறையப் பசி தெரிகிறது. கொட்டாவி விட்டுக்கொண்டு எழுந்து உட்காருகிறான். பக்கத்திலுள்ள உணவு வகைகளைப் புசிக்கிறான். பிறகு 'ஏன் என்னை எழுப்பினீர்கள்? அரசர் க்ஷேமமாய் இருக்கிறாரா? அவருடைய சத்துரு யாராகிலும் இருந்தால் அவனை இன்றே ஒழித்துவிடுகிறேன்!' என்கிறான். அரக்கர்கள் நடந்ததைச் சொல்லுகிறார்கள்.

இராவணனைப் பார்க்கச் செல்லுகிறான். வெளியிலுள்ள வானர சைன்யம், அந்தக் காட்சியைக் கண்டு பயந்து ஓடி ஒளிக்கிறது. இராமனும் 'இது யார்?' என்கிறான். விபீஷணன் கும்பகருணனுடைய வரலாற்றை இராமனுக்குச் சொல்லுகிறான். கும்பகருணனுடைய வீரச் செயல்களையும் அவன் இயற்றிய தீமைகளையும் சொல்லுகிறான். 'ஜனங்களைத் தின்று, தேவர்களைக் கொன்றுவருவதைக் கண்ட தேவர்கள் பிரமனிடம் போய் முறையிட்டார்கள். அப்பொழுது பிரமதேவன் அரக்கர்களைத் தம் முன்னே வரவழைத்துக் கும்பகருணனைப் பார்த்தார். அவனைப் பார்த்ததும் அவருக்கே நடுக்கம் உண்டாயிற்று. அவனைக் கிட்ட வரவழைத்து, "நீ இன்று முதல் இறந்தவனைப் போலப் படுத்

துத் தூங்கக்கடவாய்!" என்று சாபமிட்டார். உடனே தூங்கத் தொடங்கினுன் கும்பகருணன். பிறகு இராவணன் வேண்ட, பிரமதேவன் அவனுடைய தூக்கத்தை வரம் பிட்டு, "இவன் ஆறு மாத காலம் தூங்கிவிட்டு, ஒரு நாள் விழித்திருப்பான்" என்ருர்' என்று கதை சொல்லுகிருன். இதனிடையில் கும்பகருணன் இராவணனை வந்து அடைகிருன். அவனைக் கண்ட இராவணன் முதலில் அவன் தூங்கியதை இகழ்கிருன்; பிறகு அவனுடைய வலிமையைப் புகழ்கிருன். 'என்னுடைய சத்துருக்களை அழித்து, இந்த நகரத்தைக் காப்பாற்ற வேண்டும்' என்கிருன்.

அதைக் கேட்ட கும்பகருணன், 'முன்பே நல்லது சொல்வோரின் வார்த்தையைக் கேட்கவில்லை. ஒன்றையும் ஆலோசிக்கவில்லை. இதற்கு முன் தங்களது தம்பியாகிய விபீஷணன் சொன்னபடி செய்வதுதான் நமக்கு நன்மையான காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது. அப்புறம் தங்கள் இஷ்டம் எப்படியோ அப்படிச் செய்யுங்கள்' என்கிருன். உடனே இராவணன் கோபமாகக் கும்பகருணனை இகழ்கிருன்.

கும்பகருணன் அவனைச் சமாதானப்படுத்தி, 'தாங்கள் கவலைப்படவேண்டாம். நான் தங்களுக்குச் சொல்லித் தீரவேண்டிய நன்மையைச் சொன்னேன். உண்மையான பந்து என்ன செய்யவேண்டுமோ அதை இனிமேல் போர்க்களத்தில் செய்வேன். முதலில் என்னைக் கொன்றுவிட்டல்லவோ இராமன் தங்களைக் கொல்லவேண்டும்? என்னை ஒருவன் கொல்வான் என்ற பயமே எனக்கு ஒருபொழுதும் இல்லை. நான் போகிறேன்; உத்தரவு கொடுங்கள். உங்கள் கவலையை விட்டுவிடுங்கள். இராமனை நான் கொன்றதும் சீதை தங்களுக்கு வசம் ஆவாள்' என்று தைரியம் சொல்லுகிருன்.

மகோதரன் அவனைத் தடுத்து வஞ்சனையால் சீதையின் மனத்தைத் திருப்பவேண்டும் என்று உபாயம் சொல்லு கிறான். அதற்குக் கும்பகருணன் இணங்கவில்லை. மகோதர னைப் பழித்துப் பேசி, 'புத்தியற்ற உங்களைப் போன்றவர் களின் புத்தியைக் கேட்டுத்தான் அரசர் இந்த நிலைக்கு வந் திருக்கிறார். போர் புரிவதற்கு அஞ்சியவர்களாய், அரச னுடைய இஷ்டத்துக்குத் தக்கபடி பேசி, அரசன் என்ன செய்தாலும் அதுதான் சரி என்று ஒப்பித் திரியும் உங்களால் சீதையைக் கவர்தலாகிய இந்த இழிவான செயல் நடந்து விட்டது. நீங்கள் செய்த அநியாயங்களைத் திருத்தும் பொருட்டு, சத்துருக்களை வெல்லுமாறு நான் இதோ போர் முகத்துக்குச் செல்லுகிறேன்,' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு, போர்க் கோலம் பூண்டு சண்டைக்குப் போகிறான். அவனுக்கு அநேக துர்நிமித்தங்கள் தோன்று கின்றன. அவன் போரிலே குரங்குகளை வதைக்கிறான். அவை ஓடுகின்றன. அங்கதன் அவற்றைத் தேற்றுகிறான். கும்பகருணன் பல வானர வீரர்களோடு போர் புரிகிறான். எல்லாரையும் முறியடிக்கிறான். ஒரு மலைச் சிகரத்தைச் சுக் ரீவன் மேல் வீசி யெறியவே, சுக்ரீவன் மூர்ச்சையடை கிறான். அப்பொழுது கும்பகருணன் அவனைத் தூக்கிக் கொண்டு இலங்கைக்குப் போகிறான். அங்கே இராக்கதர்கள் கும்பகருணன் மேல் பொரி வீசுகிறார்கள், பன்னீர் தெளிக் கிறார்கள். அவற்றாலும் ராஜவீதியில் வீசிய குளிர்ந்த காற் றாலும் மூர்ச்சை தெளிந்த சுக்ரீவன் கும்பகருணனுடைய காதுகளைக் கிள்ளி யெடுத்துப் பற்களால் மூக்கைக் கடித்து விட்டுத் திரும்ப வந்துவிடுகிறான். அதைக் கண்ட கும்பகரு ணன் மறுபடியும் போர்க் களத்துக்கு வந்து, குரங்குகளைக் கொன்று, லக்ஷ்மணனை விலக்கி, இராமனை நெருங்கி

வந்து எதிர்த்துப் போர்புரிகிறான். இறுதியில் இராமன் அவனுடைய கைகளையும் கால்களையும் வெட்டி யெறிந்து, பிறகு அவனுடைய தலையையும் தன்னுடைய அம்புகளால் வெட்டி விடுகிறான். இதைக் கேட்ட இராவணன் சோகத்தால் மூர்ச்சை யடைகிறான்; சற்றே தெளிந்து புலம்புகிறான்; கும்பகருணனைப் பலவாறாகப் புகழ்கிறான்; தன்னுடைய தம்பியான கும்பகருணன் இறந்த பிறகு தனக்கு உயிர் வாழ்வதில் ஆசையில்லை என்கிறான்; 'ஒரு நொடிப் பொழுதும் அவனை விட்டுப் பிரிந்து உயிருடன் இருக்கப் போறேன்' என்கிறான்; அவனை மந்திரிகள் தேற்ற ஒருவாறு தேறுதலடைகிறான்.

இதுதான் வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கும் விருத்தாந்தம். கும்பகருணன் மிக்க பலமுள்ளவன், பெரிய உடல் படைத்தவன், தவம் செய்தவன், இயற்கையாய்க் கெட்ட குணங்களும் உடையவன், தேவர்களால் வஞ்சிக்கப்பட்டவன், தமையனிடத்து அளவற்ற அன்புள்ளவன், நீதியை உணர்ந்து அஞ்சாது உரைப்பவன், நீதியை உணராத தன் தமையன் பொருட்டுத் தன் உயிரைக் கொடுத்தவன் என்பதுதான் வால்மீகியின் கற்பனை.

எ

இனி, கம்பர் கண்ட கும்பகருணனைப் பார்ப்போம். கம்ப ராமாயணத்திலே உத்தர காண்டத்திலே கும்பகருணன் பிறப்பு முதலியன சொல்லப்படுகின்றன. உத்தர காண்டத்தை எழுதியவன் கம்பனா அன்றா என்ற ஆராய்ச்சியை இப்பொழுது எடுத்துக்கொள்ள வேண்டாம். உத்தர காண்டத்திலே இராவணன் பிறப்புப் படலத்திலே சொல்லப்பட்டிருக்கும் கதை வடமொழியிலுள்ள உத்தர காண்

டத்தையே பின்பற்றியதென்பது தெரிகிறது. கதை வருமாறு:

தன் மகளாகிய கைகஸிக்கு வரன் தேடிச் செல்லும் சுமாலி வழியில் குபேரனைக் காண்கிறான். வலியற்ற அக் குபேரன் சிறப்பாக ஆளுவதைக் குறித்துச் சுமாலி சிந்திக்கிறான். தன் மகளை விசிரவஸ்ஸிற்கு மனைவியாகும்படி தூண்டுகிறான். அவள் அம்முனிவனை அடைந்து, அவன் முன் நிற்க, முனிவன் அவள் வந்த காரணத்தைக் கேட்கிறான். பிறகு அவள் வந்த காலம் தீதாகையால்,

'வந்த குமாரர் குணத்தாலும் வரத்தினுலும் கொடியோராய்
இந்த உலகை இடர்செய்வார்'

என்கிறான். பிறகு அவள் வருத்தமுற்றதைக் கண்டு, 'உன் இளையமகன் நற்குணம் உடையவனு யிருப்பான்' என்கிறான். இராவணன் பிறக்கிறான். பிறகு அவள் வயிற்றிலே பெரிய மலையைப் போன்று நீண்டுயர்ந்த வடிவத்தையும், ஓங்கி உயர்ந்த கைகளையும், வளைந்த கோரப் பற்களையும், குகை போன்ற வாயையும், மிகப் பெரிய விழிகளையும், மேன்மேலும் அதிகரித்து வரும் பசியையும் உடையவனுன கும்பகருணன் பிறக்கிறான்.

நறையார் குழலாள் தன்வயிற்றின்
ஞாலம் அடங்க விழுங்கிடினும்
நிறையா வயிற்றின் நெடுவரைபோல்
நீண்ட உருவ நிமிர்கையன்
பிறையார் எயிற்றுப் பிலவாயன்
பெருத்த விழியன் ஒருகாலும்
குறையா தெழுவெம் பசியினெடு
கும்ப கருணன் பிறந்தனனுல்.

பிறகு மற்றவர்கள் பிறக்கிறார்கள். அவர்களுள்,

குத்து வாதை மிகநலிந்து கும்ப கருணன் குவலயத்தில்
சுத்த ராய முனிவரையே கொன்று தின்னத் தொடங்கினுன்.

பிறகு தாய் ஏவ, அவர்கள் தவம் செய்கிருர்கள்.

கும்ப கன்னன் ஐந்தீயுள்
கொதிக்கும் காலத் திடைநின்றும்
உம்பர் நடுங்கக் கார்காலத்(து)
ஒவ்வா மழையின் உடல்நனேந்தும்
தம்பம் பொருநா ராசத்துச்
சலியா திருந்தும் சயித்தியத்தில்
அம்பின் முழுகிக் கிடந்துழந்தும்
ஆண்டு பதினு யிரங்கழித்தான்.

இவ்வாறு தவஞ் செய்த கும்பகருணனுக்குப் பிரமன் வரமளிக்கப் போகையில் தேவர்கள் தடுக்கிருர்கள். அதன்மேல் கலேமகளே ஏவி, அவன் வரம் வேண்டுங்கால் அவன் துயில் வேண்டும்படி இயற்றவேண்டும் என்ற வஞ்சனே செய்யப்படுகிறது. அவனும் துயில் வேண்டத் துயிலே அருளுகிருன் பிரமன். பிறகு கும்பகருணன் 'அது தேவர் செய்த மாயை' என அறிந்து நொந்துகொள்கிருன். பிறகு கும்பகருணன் வஜ்ஜிர ஜ்வாலேயை மணந்து, கும்பன் நிகும்பன் என்னும் புதல்வர்களேப் பெறுகிருன். அதன் பிறகு அவன் உறங்குவதற்கென்று மண்டபம் கட்டப்படுகிறது. கும்பகருணன் அதிலே படுத்து நெடுங்காலமாகத் துயில்கிருன்.

உத்தர காண்டக் கதை இவ்வாறிருக்க, மற்றக் காண்டங்களில் காணப்படும் விருத்தாந்தங்களேக் கவனிப்போம்.

பஞ்சவடியிலே இராமனேத் தற்செயலாகக் கண்ணுற்ற சூர்ப்பணகை, அவன்மேல் காமங்கொண்டு அவனேத் தன் புறுத்துகிருள். அவனுல் இகழப்பட்டு, சீதையைக் கொல்ல

முயன்று, லக்ஷ்மணனால் மூக்கரியப்படுகிறாள். அப்பொழுது இரத்தம் அருவிபோல் ஒழுக, அவள் ஓவென்று கதறும்போது, 'கூற்றும் உட்கும் தம் குலத்தினோர் பெயரெலாம்' கூறுகிறாள் என்று கம்பர் சொல்லுகிறார். ஆதலால் அவள் குலத்தினருள் ஒருவனாகிய கும்பகருணன் பெயரையும் சொல்லியிருக்கவேண்டும். ஆனாலும் கம்பர் அவனுடைய பெயரை இங்கே குறிப்பிடவில்லை. மறுபடியும் அவள்,

'தேனுடைய நறுந்தெரியல் தேவரையும் தேறும் ஆற்றல்
தானுடைய இராவணற்கும் தம்பியர்க்கும் தவிர்ந்ததோ?'

என்று புலம்பும்போது கும்பகருணனுடைய பெயரைக் கவி நேர்முகமாகச் சொல்லவில்லை. அடுத்து இராவணன் பெயரும் கரன் பெயரும் பலமுறை சொல்லப்படுகின்றன. பிறகு மேன்மேலும் புலம்பும் சூர்ப்பணகை தன்னுடைய குலத்தோரைக் குறிப்பிட்டு அழைத்து, 'நீங்கள் எல்லோரும் கும்பகருணனைப் போல் உறங்குகிறீர்களா? நான் முறையிட்டு அலறுவதை ஒருவரும் கேளாமல் இருக்கிறீர்களே?' என்கிறாள்.

'கல்லீரும் படைத்தடக்கை அடற்கரது டணர் முதலா
அல்லீரும் சுடர்மணிப்பூண் அரக்கர் குலத் தவதரித்தீர்!
கொல்லீரும் படைக்கும்ப கருணனைப் போல் குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ? யான்அழைத்தல் கேவீரோ?'

என்று அவள் கதறும்போதுதான் நாம் முதன் முதலில் கும்பகருணனுடைய பெயரைக் கேட்கிறோம். ஆண்மைக்கும், வீரத்துக்கும், தேகபலத்துக்கும் பெயர்போன கும்பகருணன் அவற்றைக் காட்டிலும் தூக்கத்துக்கே அதிகமாகப் பெயர்போனவன் என்பதைக் காட்டும் பொருட்டோ என்னவோ கும்பகருணனின் பெயரை முதன்முதல் எடுக்கும்

போது அவனுடைய உறக்கத்தையும் சேர்த்தே குறிப்பிடு கிருர் கவி.

பிறகு சுந்தர காண்டம் வரையில் கும்பகருணனைப் பற்றி நமக்குச் சொல்லவேண்டிய சந்தர்ப்பமே இல்லை. கடலைக் கடந்த அநுமன் இலங்கையிலே சீதையைத் தேடியபோது கும்பகருணனுடைய பெயரை நாம் மறுபடியும் கேட்கிரும். இரவிலே இலங்கை நகரிலே சுற்றிய அநுமன் எல்லாரும் தூங்குவதைப் பார்க்கிருன். அவர்கள் தூங்குவார்கள் என்பதுதானே எதிர்பார்க்கக்கூடியது. அவன் கும்பகருணனைப் பார்த்தான் என்று சொல்லவந்த கவி,

. . . . . . . . . மலையின் வைகும்
கயக்கமில் துயிற்சிக் கும்ப கருணனைக் கண்ணிற் கண்டான்

என்கிருர். இங்கும் கும்பகருணனுடைய துயிலைக் கவி நமக்கு நினைப்பூட்டுகிருர். அவனுக்குத் துயில் ஒரு அடைமொழியாக நிற்கிறது. பிறகு உறங்கும் கும்பகருணனைக் கவி வர்ணிக்கிருர். மண்டபத்திலே படுக்கைமீது பாம்பின் அரசைப் போலவும், கடலைப் போலவும், இருள் முழுதும் ஓரிடத்திலே திரண்டாற் போலவும், தீவினைகள் யாவும் ஒரு வடிவெடுத்து வந்தது போலவும் அவன் கிடக்கிருன். அவனையும் அவன் விடும் மூச்சையும் கண்டு அநுமன்கூடக் கூசுகிருன். அவனை முதலில் இராவணன் என்றே நினைக்கிருன்; பிறகு இல்லையென்று தெளிகிருன். அநுமன் வேறிடத்தில் சீதையைத் தேடிச் செல்கிருன். கும்பகருணன் உறங்கிக்கொண்டே யிருக்கிருன்.

இலங்கையில் புகுந்த அநுமன் வனத்தை யழித்து, இராக்கதர்களைக் கொன்று, இலங்கையை நெருப்புக்கு இரையாக்கின போதெல்லாம் கும்பகருணனுடைய நித்திரை

தெளிந்ததாகவோ, கலந்ததாகவோ ஒருவரும் சொல்ல வில்லை. இலங்கையைப் பாழ்படுத்திய நெருப்பும் அவனைக் கண்டு அஞ்சி ஒதுங்கிற்று? அல்லது உறங்கிக்கிடந்த கும்பகருணனை அக்கினி மறந்துவிட்டதா? அல்லது அவனைத் தூங்கவைத்த கவிகள்தாம் அவனை மறந்துவிட்டார்களா? எப்படியாயினும் அவன் எழுந்திருந்ததாக ஒரு கவியும் சொல்லவில்லை.

அனுமன் போனபின்பு இராவணன் மயனை அழைத்து, அழிந்துபோன இலங்கையை மீட்டும் சிறப்புற நிருமிக்கும் படி ஏவுகிறன். மயன் அவ்வாறே செய்கிறன். பிறகு இராவணன் சிம்மாசனமேறி மந்திராலோசனை சபையைக் கூட்டுகிறன். வேண்டாதவர்களை அப்புறப்படுத்தி, 'பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர்' ஆகிய மந்திரிகளை வரவழைக்கிறன். எல்லாரும் கூடுகிறர்கள். அவர்களிடத்திலே அந்தரங்கமாக இராவணன் தன் குறையைத் தெரிவிக்கிறன். 'இதைவிட எனக்கு இழிவாக உள்ளது எது? ஒரு குரங்கு நகரத்தைச் சுட்டுவிட்டது. உறவினர் பலர் அதனல் கொல்லப்பட்டனர். கிணறுகளிலெல்லாம் இரத்தம் ஊறுகிறது. அது வைத்த நெருப்பு இன்றளவும் ஆறி அவியவில்லை. பெண்களின் வாசம் பொருந்திய கூந்தலிலே பொசுங்கிய நாற்றம் நாறுகிறது. அப்படியாவது குரங்கு செத்தொழிந்ததா? அதுவும் இல்லை. ஆட்சியும், அமைவும், அரசும் நன்றுயிருக்கிறது!' என்று வருந்துகிறன் இராவணன். அவனுடைய சேனபதியும், முதன் மந்திரியாகிய மகோதரனும், வச்சிரதந்தனும், துன்முகனும், பெரும்பக்கனும் பிறரும் அவனுடைய வலியை எடுத்துக்கூறி, அவனைப் புகழ்ந்து குரங்கை இகழ்ந்து, 'சத்துருக்களை நாங்களே தொலைத்து விடுகிறேம்,' என்று வீரம் பேசுகிறர்கள்.

அந்தச் சமயத்திலே கும்பகருணன் தன்னுடைய மனத்திலுள்ளவற்றைச் சொல்லுகிறான் : 'பிரமனுடைய குலத்திலே தோன்றி, ஆயிரம் மறைப்பொருளையும் உணர்ந்த நீ கெட்ட காரியத்தின்மேல் ஆசை வைத்தாய். சித்திரம் போல அமைந்த நகரம் தீப்பட்டது. அரச நீதிக்கு விரோத மாய்ப் பிறன் மனைவியைக் கவர்ந்து சிறைப்படுத்தினாய். நீ செய்த காரியம் நன்று? இதனால் பழி ஏற்பட்டால் அது பழியாகுமா? உன் மனைவியர் உன்மேல் அன்போடிருக்க நீ மற்றொருவன் மனைவியைத் தொழுது வேண்டுகிறாய்; அவள் மறுக்கிறாள். இதனால் புகழ் உண்டாகும் என்று நினைத்தாயா? மற்றொருவனுடைய மனைவியைச் சிறையில் வைத்து, "அவள்மேல் காதல் கொள்ளுவேன்; மானத்தைப் பற்றிப் பெரிதாகவும் பேசுவேன்; நடுவிலே காமத்தையும் பாராட்டுவேன்; மனிதரைக் கண்டு பயப்படுவேன்," என் கிறாயே! நம்முடைய அரசாட்சியும் வீரமும் மிகவும் நன்றாக இருக்கிறது.

'ஆசில்பர தாரமவை அஞ்சிறை அடைப்பேம்,
மாசில்புகழ் காதலுறு வேம் வளமை கூரப்
பேசுவது மானம்,இடை பேணுவது காமம்,
கூசுவது மானுடரை: நன்றுநம கொற்றம்!'

என்று பரிகாசம் செய்கிறான். மூவுலகும் கண்டு நடுநடுங் கும் இராவணனைக் கண்டு சிறிதுகூட அஞ்சாது இவ்வாறு அவன் பேசும்போது நமக்கு மெய் சிலிர்க்கிறது. மேலும் அவன் இராவணனைப் பார்த்துச் சொல்லுகிறான் : 'நீ செய் தது நல்லவர்கள் செய்யும் செயல் அன்று. நம்முடைய குலத் துக்கே அது அவமானத்தைத் தருவதாய் இருக்கிறது. ஆகையால் புஷ்பங்களை அணிந்த கூந்தலையுடைய சீதையை



கசு

விட்டுவிடுவது நல்லது. ஆயினும் அப்படிச் செய்தால் நம்மைப் பயந்தவர்களென்று நினைப்பார்கள். எதிரிகளோடு போர் செய்து தோற்றுப்போனாலும் அதுவும் பழியே யாகும்.

'சிட்டர்செயல் செய்திலை, குலச்சிறுமை செய்தாய்,
மட்டவிழ் மலர்க்குழலி னாளையினி, மன்னு,
விட்டிடுது மேல்(ல்)எளிய மாதும்(ம்)! அவர் வெல்லப்
பட்டிடுது மேல்(ல்)அதுவும் நன்றுபழி அன்றோ'

'ஆதலால், "ஊறுபடை ஊறுவதன் முன்னே" அவர்களுடைய சைன்யத்தை எதிர்த்துத் தாக்கிக் குரங்குகள் எல்லாவற்றையும் கொன்றுவிட வேண்டியதுதான் நாம் இப்பொழுது செய்யவேண்டிய காரியம்' என்று முடிக்கிறான். இந்தப் பேச்சிலே இரண்டு வகையான பற்றுக்கள் ஒன்றோடொன்று முரண்படுகின்றன. நீதியில் உள்ள பற்று ஒரு புறம் தூண்டுகிறது: சீதையைக் கொணர்ந்தது தவறு; விடுவதுதான் நியாயம் என்று உறுதியாய்ச் சொல்லுகிறான். தமையனிடத்துள்ள பற்றும் வீரனுக்குள்ள இயற்கைக் குணமும் மற்றொரு புறம் தூண்டுகிறது: 'சத்துருக்களை உடனே தொலைக்க முயல வேண்டும்; முயற்சியின் விளவு என்னவாயினும் சரி' என்கிறான். இந்த மன நிலையே அவனுக்குக் கடைசிவரையில் இருந்துவருகிறது.

புத்திமதி கேட்பவர்களுடைய மனநிலை எல்லாக் காலங்களிலும் ஒரே வகையானதுதான். 'புத்திமதி சொல்' என்று கேட்பார்கள்; சொல்லப்படும் விஷயங்களில் தமக்கு உடன்பாடுள்ளவற்றை ஏற்றுக்கொள்வார்கள்; பிறவற்றை ஒதுக்கி விடுவார்கள். இராவணனும் அப்படியேதான் நடக்கிறான். 'சீதையை விடு' என்று சொன்னது அவன் காதுகளில் ஒரு புறம் நுழைந்து மறுபுறம் போய்விடுகிறது. 'எதிரிகளைத்

தாக்க வேண்டும்' என்று சொன்னதை ஒப்புக்கொள்கிறான். மேன்மேலும் மந்திராலோசனை சபை நடக்கிறது. அதில் கும்பகருணன் சம்பந்தப்படவில்லை; ஆகையால் நாம் அதைக் கவனிக்க வேண்டியதில்லை. கும்பகருணன் மீண்டும் பழைய படியே தூங்கப் போய்விடுகிறான்.

அதன் பிறகு இராவணனுக்குப் புத்திமதி கூறிய விபீஷணன் இராவணனைத் துறந்து இராமனை வந்து சரணமடைகிறான்: இராமனால் அங்கீகரிக்கப்படுகிறான். இலங்கையினுடைய வரலாறு முதலியவற்றைப் பற்றி இராமன் அவனைக் கேட்கிறான். அப்பொழுது இராவணனைப் பற்றியும், அவனுடைய செயல்களைப் பற்றியும், அவனுடைய துணைவரைப் பற்றியும் சொல்லிக்கொண்டு வரும் விபீஷணன் கும்பகருணனைப் பற்றிக் குறிப்பிடுகிறான். 'கும்பகருணன் என்று ஒருவன் இருக்கிறான். அவன் திரியும்போது மகாமேரு மலையானது மதங்கொண்டு திரிகிறதோ என்று தோன்றும்; அவன் முன் காலத்தில் தேவர்களைத் துவைத்து அழித்தவன்,' என்கிறான்.

'செம்பொன் மால்வரை மதம்பட்ட தாமெனத் திரிந்தான்
கும்ப கன்னனென் றுளன்பண்டு தேவரைக் குமைத்தான்.'

இதன் பின்னர், முதற் போரிலே தோற்ற இராவணன் ஆயுதங்களையும் ஆண்மையையும் ஒருங்கே இழந்தவனாய், மனம் நொந்து, நாணித் தலைகுனிந்து இலங்கைக்குத் திரும்புகிறான். தோல்வியையே அறியாத வீரன், தேவரனைவரையும் யமனையும் வென்றவன், எதிர்பாரா வண்ணம் ஒரு மானுடனிடத்தே தோல்வியுற்றபோது அடைந்த நிலையைக் கவி நன்றாகக் காட்டியிருக்கிறார். அவன் வெட்கமடைந்து, தேவர்கள் சிரிப்பார்களே, உலகத்தோர் சிரிப்பார்களே, நான் எனது தோள் வலிமையினாலே இகழ்ந்த பகைவரெல்

லாம் சிரிப்பார்களே என்று நினைத்து வருந்துகிறான். ஆனல் இவற்றையெல்லாம் காட்டிலும் மிகுதியான வருத்தத்தைத் தருகிற ஓர் எண்ணம் அவன் மனத்துள் புகுந்து அவனை வாட்டுகிறது. வேலைப் பழிக்கிற நீண்ட கண்களையும், சிவந்த வாயையும், மென்மையான இயற்கையையும் உடைய சீதை சிரிப்பாளே என்ற நினைவு வரும்போது அவன் மனம் வெட்கத்தால் துடிக்கிறது.

'வான்நகும் மண்ணு மெல்லா(ம்) நகு(ம்)நெடு வயிரத் தோளால்
நான்நகு பகைஞர் எல்லா(ம்) நகுவர்' என்(று) அதற்கு நாணன்,
'வேல்நகு நெடுங்கண் செவ்வாய் மெல்லியல் மிதிலை வந்த
சானகி நகுவள்!' என்றே நாணத்தால் சாம்பு கின்ருன்.

மாலியவான் வருகிருன். இராவணன் இராமனுடைய போர்வலியையும் லக்ஷ்மணனுடைய போர்வலியையும் பாராட்டுகிருன். மாலியவான் புத்தி கூறுகிருன். மகோதரன் அவனைத் தடுக்கிருன். 'மேலும் போர் செய்யவேண்டும்; புல்லின் நுனியிலே உள்ள பனித்துளியை ஒத்த அற்ப வாழ்க்கையையுடைய மனிதரை நீ பெரிதாக மதித்துவிட்டாய். உனக்குத் தம்பியாகிய கும்பகருணனை நீ இகழ்ந்து அவனை நினையாமல் இருக்கிருய்' என்று ஞாபக மூட்டுகிருன்:

'புல்நுனைப் பனிநீர் அன்ன மனிதரைப் பொருளென்(று) உன்னி
என்உனக்(கு) இளைய கும்ப கருணனை இகழ்ந்த(து) எந்தாய்?

'இப்பொழுது அவனை யழைத்து ஏவினையானல் மலை போன்ற அவனுடைய உடலைக் கண்டே எல்லோரும் ஓடி ஒளிப்பார்கள்' என்கிருன். இராவணனும் உடன்பட்டுக் கும்பகருணனை அழைத்துவர ஏவலாட்களை அனுப்புகிருன். உடனே நால்வர் ஓடி யமதூதர்கள் தேடுவதுபோலக் கும்பகருணனைத் தேடிச் செல்லுகிருர்கள்.

..............................நால்வர் சென்றூர்
தென்திசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவர்......

அவர்கள் கும்பகருணன் உறங்கும் மண்டபத்தை யடைந்து, 'உங்களுடைய மாய வாழ்வு முழுவதும் இன்றோடு தீர்ந்துவிட்டது. உன்னுடைய உறக்கத்தைவிட்டு எழுந்திரு. காலதூதர் கையில் அகப்பட்டு மீளாத் தூக்கம் தூங்கவேண்டிய காலம் உனக்கு வந்துவிட்டது.

'உறங்கு கின்ற கும்ப கன்ன
உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற(து) இன்று காண்
எழுந்தி ராய்எ ழுந்திராய்
கறங்கு போல விற்பி டித்த
கால தூதர் கையிலே
உறங்கு வாய்உ றங்கு வாய்
இனிக் கிடந்(து)உ றங்குவாய்!'

என்று கடுமையான சொற்களைச் சொல்லி அவனை அலைத் தலைத்து எழுப்ப முயலுகிறார்கள். மல்லர்களைக் கொண்டு அவனைத் தாக்கியும், குதிரைகளை அவன்மீது ஓட்டியும், அரக்கர்களைக் கொண்டு இருப்புலக்கைகளால் மோதியும், அவனை எழுப்புகிறார்கள். செத்தவன் உயிர்பெற்று எழுந்தது போல் அவன் விழித்தெழுகிறான்.

பொன்றினவன் எழுந்தாற்போல்
புடைபெயர்ந்தங்(கு) எழுந்திருந்தான்.

அப்பொழுது அவனுடைய தலைக் கிரீடமானது வானத்தை மோதுகிறது; ஆகிருதி ஆகாய வெளி முழுவதையும் நிறைக் கிறது; அவன் கண்கள் கடல்களைக் காட்டிலும் பெரியவை;

மனத்தினலும் நினைக்க இயலாத மாட்சிமையை யுடையவ னை இராவணனுடைய தம்பியாகிய அவன் முன்னல் வாமன வதாரம் எடுத்து ஓர் அடியால் உலகத்தை அளந்து நின்ற திருமாலைப் போன்றவனய், மிகப் பெரிய உருவத்தையுடைய வனய்த் தோற்றி நிற்கிருன்.

விண்ணினை யிடறும் மோலி, விசும்பினை நிறைக்கும் மேனி,
கண்ணெனும் அவையி ரண்டும் கடல்களில் பெரிய ஆகும்,
எண்ணினும் பெரிய னை இலங்கையர் வேந்தன் பின்னேன்
மண்ணினை அளந்து நின்ற மாலென வளர்ந்து நின்ருன்.

உறக்கம் தெளிந்ததும் அவனுக்குப் பசி தோன்றுகிறது. உடனே அறுநூறு வண்டிச் சோறு உண்ணுகிருன். குடங் குடமாகப் பதினயிரம் குடம் கள்ளைக் குடிக்கிருன் — குடத் தோடு விழுங்கி விடுகிருன் என்றுகூடச் சொல்லலாம். எவ் வளவு பெருந்தீனி! இதனல் அவனுடைய பசி தீர்ந்ததா? இல்லை என்கிருர் கவி. அதுமட்டுமன்று. இவ்வளவு உண வும் கள்ளுமாகச் சேர்ந்து அவனுக்குப் பசியை உண்டாக்கின வாம். தூக்கக் கலக்கத்தால் அவனுடைய கண்கள் சிவந்து காட்டுகின்றன.

ஆறு நூறு சகடத்(து) அடிசிலும்
நூறு நூறு குடங்களும் நுங்கினுன்
ஏறு கின்ற பசியை எழுப்பினுன்
சீறு கின்ற முகத்திரு செங்கணுன்.

மேன்மேலும் எருமைகளையும், உதிரத்தையும், ஊனையும் எஃகு முதலியவற்ருல் செய்த படைக்கலங்களையும் — நெருப் புக் கோழி சிறு கற்களையும் ஆணிகளையும் விழுங்குவதுபோல் — பரபரப்போடு விழுங்குகிருன்; யானைகளை வாரி வாரி வாயில் போட்டுக் கொள்கிருன்; வரும் உணவை யெல்லாம்

வருமுன் விழுங்கிவிட்டுக் காத்திருக்கிறுன் — என்றெல்லாம் கூறி அவனுடைய கோரத்தன்மையை நமக்கு நன்ருக எடுத்துக் காட்டுகிருர் கவி.

இப்படி அவன் பெருந் தீனி தின்றுகொண்டு மேன் மேலும் தின்ன வாயைத் திறந்து காத்துக்கொண்டிருக்கும் போது ஏவலாட்கள், 'உன்னுடைய தமையன் உன்னைக் கூப்பிட்டான்' என்று அவனுக்குத் தெரிவிக்கிருர்கள். உடனே அவன் உணவையும் மறந்து எழுந்து, ஊரார் பின்செல, விரைந்து சென்று, சந்திர மண்டலம்வரை உயர்ந்துள்ள தன்னுடைய தமையனுடைய மாளிகையை அடைகிருன்.

'கூயினன் உம்முன்' என்றவர் கூறலும்,
போயினன் நகர் பொம்மென்(று) இரைத்தெழ
வாயில் வல்லை நுழைந்து மதிதொடும்
கோயில் எய்தினன் குன்றன கொள்கையான்.

மாளிகையை அடைந்து, இராவணனைக் கண்டு நெடுஞ்சாண் கிடையாய், 'மலை கிடந்தது போல வணங்கினுன்' என்று கவி சொல்லுகிருர். இராவணன் அவனை அன்போடு எடுத்து அணைத்துக்கொள்கிருன். இரண்டு குன்றுகள் ஒன்றையொன்று அணைத்துக் கொண்டதைப் போல் இருந்தது அந்தக் காட்சி என்கிருர் கவி. 'என்னுடைய நகரைக் குரங்குப் படைகளால் மானுடர் வளைந்து சுற்றியிருக்கிருர்கள். அவர்களைத் தின்று உன்னுடைய போஜனத்தை முடித்துக்கொள்' என்று இராவணன் சொல்லுகிருன். ஆலோசனை முடியு முன்னே மந்திராலோசனை சபையைவிட்டு நீங்கி, வீடு போய் உறங்கிய கும்பகருணனுக்கு இடை நிகழ்ந்தது ஒன்றும் தெரியாது. ஆகையால், 'போர் வந்து விட்டதா ? சீதையை விடுவித்து அவள் வருத்தத்தைப் போக்கவில்லையா ? எல்லா

உலகங்களிலும் பரவி வானை அளாவி நின்ற நம்முடைய புகழ் அழிந்து போய்விட்டதா? நாமும் அழிய வேண்டிய காலம் வந்துவிட்டதா? சண்டை நெருங்கி வந்துவிட்டதோ சீதையைக் குறித்து? நான் முன்னமே சொல்லியபடி சீதையை விடவில்லையோ? பார்வையாலே விஷமூட்டிக் கொல்லும் பாம்புக்கு ஒப்பானவளாயிற்றே அவள், அவளுடைய கற்பின் செல்வத்தால்! இப்படி நிகழ்ந்தது விதியினாலன்றி வேறில்லை.

‘ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயரினம் தவிர்ந்த(து) இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே?

‘கிட்டியதோ செரு? கிளர்பொற் சீதையைச்
சுட்டியதோ? முனம் சொன்ன சொற்களால்
திட்டியின் விட(ம்) அன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோ? இது விதியின் வண்ணமே!’

என்று சொல்லி, ‘இராமனை வெல்லலாம் என்பதும் சீதையை அணையலாம் என்பதும் வெறும் மயக்கமே தவிர வேறில்லை. நான் உனக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். கொள்வையாகில் கொள். சீதையை அவனிடம் விட்டுவிட்டு அவனைச் சரணமடைந்து, உன்னுடைய குற்றமற்ற தம்பியாகிய விபீஷணனோடு அளவளாவுதல் நம்முடைய வலிமைக்குப் பொருத்தமாகாது என்கிற எண்ணம் உனக்கு இருக்குமானால், அப்பொழுது நாம் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். பந்தி பந்தியாகத் தனித் தனியாகப் படைகளை அனுப்பி, அவை சாவதைக் கண்டு, இங்கே இருந்து பரிதவித்துக் கொண்டிருத்தல் நல்ல அறிவுச் செயல் அன்று. நம்முடைய

பலம் முழுவதையும் ஒன்ருகத் திரட்டி அவனை ஒரேயடியாக எதிர்ப்பதுதான் சரி' என்கிருன்.

'தய்யலை விட்(டு)அவன் சரணம் தாழ்ந்துநின்
மய்யறு தம்பியோ(டு) அளவ ளாவுதல்
உய்திறம் அன்றெனின் உளது வேறு(ம்)ஓர்
செய்திறம் உண்(டு)அது தெளிந்து கோடியால்.

'பந்தியிற் பந்தியிற் படையை விட்(டு)அவை
சிந்துதல் கண்டுநீ இருந்து தேம்புதல்
மந்திரம் அன்று,நம் வலியெ லாமுடன்
உந்துதல் கரும(ம்)'என்(று) உணரக் கூறினன்.

ஆனல் இராவணன் அவன் சொல்லிய வார்த்தைகளை ஒப்புக்கொள்ளவில்லை. 'வரப்போகும் விஷயத்தைப்பற்றி ஜோசியம் சொல்லுவதற்காக நான் உன்னைக் கூப்பிடவில்லை. மனிதரைக் கொல்லவே கூப்பிட்டேன். நீ அறிவுடைய மந்திரி இல்லை. நீ பயந்தவன். உன்னுடைய வீரம் என்று பேசுவதெல்லாம் வெட்டி வார்த்தை. வேண்டிய அளவு நன்ருக மாமிசத்தைத் தின்று, கள்ளைக் குடித்தாய்விட்டது. இனிப் போய் மறுபடியும் தூங்கு, போ' என்று ஏசுகிருன். 'மானுடர்களுக்குக் கீழ்ப்படிந்து தாழ்ந்து வணங்கி, கூனி வளைந்த குரங்கைக் கும்பிட்டுப் பிழைத்து வாழ்வது உனக்கும் உன் தம்பியாகிய விபீஷணனுக்குமே தகுதியான காரியம். என்னல் அது இயலாது. நீ எழுந்திருந்து போ.

'மானுடர் இருவரை வணங்கி மற்று(ம்)அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்(டு) உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்கு மேகடன்;
யா(ன்)அது முடிக்கிலேன் எழுதி போதியால்!'

என்று கடிந்து கூறி, 'என்னுடைய தேரையும் ஆயுதங்களையும் கொண்டு வாருங்கள்; நான் போருக்குப் புறப்படுகிறேன் என்று பறை சாற்றுங்கள்; இரண்டு கைகளேயுடைய மானுடச் சிறுவருக்குத் துணையாக வானத்திலுள்ளவர்கள் உலகத்திலுள்ளவர்கள் ஆகிய யாவரும் சேர்ந்து கொள்ளட்டும்; என்னோடு போர் புரியட்டும்!' என்று புறப்படுகிறான். உடனே கும்பகருணன் அது கண்டு, அவன் அடியிலே விழுந்து வணங்கி, 'என்னைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்' என்று சொல்லிப் போருக்குத் தயாராகிறான். 'இன்னும் ஒன்றே ஒன்று சொல்லவேண்டும்' என்று சொல்லுகிறான். 'சத்துருக்களை வென்று மீளுவேன் என்று நான் சொல்ல முடியாது. விதி நம்மைப் பிடித்துத் தள்ளுகிறது. ஆகையால் நான் போரில் சாவது உறுதி. நான் இறந்தால், அப்பொழுதாவது பொன்னுபரணங்களை அணிந்த தோளேயுடைய சிதையை உடனே விட்டுவிடுதல் நன்று. என்னை ஒருவன் வென்றால், அவன் உன்னையும் வெல்வான் என்பது உறுதி. ஆதலால் நான் தோல்வியுற்றால் நீ மேன்மேலும் ஆலோசனை செய்வது பிழையாகும். அப்பொழுது அவளை உடனே திரும்பக் கொடுத்துவிடு' என்கிறான்.

'வென்(று)இவன் வருவென்(ன்)என்(று) உரைக்கி லேன்விதி
நின்றது பிடர்பிடித்(து) உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினல் பொலன்கொள் தோளியை
நன்(று)என நாயக விடுதி நன்றரோ.

'என்னைவென்(று) உளர்எனில் இலங்கை காவல
உன்னைவென்(று) உயருதல் உண்மை ஆதலால்
பின்னைநின்(று) எண்ணுதல் பிழைஅப் பெய்வளை
தன்னைநன்(கு) அளிப்பது தவத்தின் பாலதே.'

கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுகிறான். கும்பகருணனுடைய குண உயர்வையும், சகோதர வாஞ்சையையும், உண்மையைத் தெளியத் தெரியும் அறிவையும் அது காட்டி நிற்கின்றது. கோர வடிவம் பெற்ற கும்பகருணன் அருமைத் தம்பியாகி விடுகிறான். 'இன்றுவரை நான் செய்தவற்றில் ஏதாவது பிழைகள் இருந்தால்—(நான் மனமறியக் குற்றம் செய்யவில்லை என்பது கருத்து)—அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும், அரசனே! இனிமேல் நான் உன் முகத்தில் விழிக்க முடியாது (இறந்துபோவது உறுதியாதலால்); பெரியோனே, உன்னிடம் விடை பெற்றுக்கொண்டு போகிறேன்!' என்று புறப்படுகிறான்.

'இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உளஎனில் பொறுத்தி, கொற்றவ!
அற்றதால் முகத்தினில் விழித்தல், ஆரிய,
பெற்றனென் விடை!' எனப் பெயர்ந்து போயினன்.

அப்பொழுது இராவணனுடைய இருபது கண்களும் நீர் சொரிகின்றன. இரத்தம் துளிக்கின்றன. அங்குள்ளவர்கள் எப்பேர்ப்பட்டவர்களும் ஏக்கமுற்று இரங்குகிறார்கள். கும்பகருணனும் அரண்மனை வாயிலை அடைகிறான்.

அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழி நீரொடும் குருதி தேக்கினன்;
எவ்வழி யோர்களும் இரங்கி ஏங்கினர்;
இவ்வழி அவனும்போய் வாயில் எய்தினன்.

கம்பனைப் படிக்கும்போது நமது கண்களிலும் நீர் துளிக்கிறது, கும்பகருணனுடைய வாஞ்சையை நினைத்து. பயங்காக் கும்பகருணன் எங்கேயோ மாயமாய் மறைந்துவிட்

டான். நம்மை இரங்கச் செய்யும் கும்பகருணனைக் கம்பர் சிருஷ்டித்துவிட்டார்.

போர்க்கோலம் பூண்டு கும்பகருணன் போர்க்களத்துக் குச் செல்லுகிறான். அவனை இராமன் கண்டு, 'இவன் யார்?' என்கிறான். அவனுடைய திறங்கள் அனைத்தையும் விபீஷணன் எடுத்துச் சொல்லுகிறான்.

'ஊனு யர்ந்த உரத்தினன்,
மேல்நி மிர்ந்த மிடுக்கினன்,
நான்உ யர்ந்த தவத்தினன்,
வான்உ யர்ந்த வரத்தினன்,'

என்றுசொல்லி, 'இவனுக்குச் சாகும் காலம் கிட்டியதாலேயே இன்று இங்கே வந்திருக்கிறான்' என்று முடிக்கிறான். பிறகு ஓர் எண்ணம் விபீஷணனுக்குத் தோன்றுகிறது. முன்னமேயே சீதையை விடுதல் நன்று என்று சொல்லிய அவனைத் தனியாகக் கண்டு பேசினால் ஒருகால் இவனும் இராமனோடு சேர உடன்படலாமோ என்று நினைக்கிறான். தன் எண்ணத்தை இராமனிடம் சொல்ல, அவனும் ஒப்புக்கொள்கிறான். விபீஷணன் கும்பகருணனிடம் சென்று அவனை வணங்குகிறான். அவனை மார்புறத் தழுவி, 'நம்முடைய குலத்துள் நீ ஒருவனே வாழ்ந்தாய் என்று எண்ணி மகிழ்ந்திருந்தேனே! இப்பொழுது மனம் மாறிவிட்டவனைப் போலத் திரும்ப வருகிறாயே? இதன் காரணம் என்ன?' என்று கண்ணீர் வடித்துக்கொண்டு கேட்கிறான் கும்பகருணன்.

முந்திவந்(து) இறைஞ்சி னானை
முகந்(து)உயிர் மூழ்கப் புல்லி,
'உய்ந்தனை ஒருவன் போனாய்
எனமனம் உவக்கின் றேன், என்

சிந்தனை முழுதும் சிந்தத்
தெளிவிலார் போல மீள
வந்த(து)என் தனியே ?' என்றுன்
மழையினீர் வழங்கு கண்ணுன்.

'நீ விரைவிலே திரும்ப இராமனிடமே போ' என்று வற்புறுத்துகிறுன். அப்பொழுது விபீஷணன் தான் வந்த காரியத்தைச் சொல்லுகிறுன். 'நீ இராமனிடம் வந்து அடைக்கலம் புகுந்துவிடு. எனக்கு அவன் கொடுத்த இலங்கை அரசை உனக்கே கொடுத்துவிடுகிறேன். என்னுடைய மனக் கவலையை நீக்குவாயாக. நம்முடைய குலமும் உன்னுல் சிறப்படையும்' என்று மன்றுடுகிறுன். இராக்கதர்களுக்குள்ளே இருக்கும் சகோதர வாஞ்சையைப் பார்த்தீர்களா? குலத்திலே ஒருவன் தீயவை செய்தால் மற்றவர்கள் தாய் தந்தை என்ற உறவைப் பாராட்டலாகாது. தர்மத்தைப் பாராட்டுகிறவர்கள் அப்படிப் பார்க்கமாட்டார்கள். ஒருவன் தீவினை செய்தால் அதற்காக மற்றவர்கள் யாவரும் அழிந்துபோகலாகாது என்கிறுன் விபீஷணன். உறவைக்காட்டிலும், சகோதர வாஞ்சையைக் காட்டிலும், தர்மத்திலுள்ள பற்றே சிறந்ததாகத் தோற்றுகிறது விபீஷணனுக்கு.

அவன் சொல்லியவற்றைக் கேட்ட கும்பகருணன், 'நீரிலிட்ட கோலம் போல எழுதும்போதே மறையும் உயிர் வாழ்வின் மேலுள்ள ஆசையின் பொருட்டு, என்னை வளர்த்துப் போர்க்கோலம் செய்தனுப்பிய என் தமையனைக் கைவிட மாட்டேன். அவன் பொருட்டு உயிரையும் விடுவேன். என் துயரம் நீங்கவேண்டுமானுல் நீ உடனே திரும்ப இராமனிடம் போய்ச் சேர்.

'நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்

போர்க்கோலம் செய்து விட்டாற்(கு)
உயிர்கொடா(து) அங்குப் போகேன்;
தார்க்கோல மேனி மைந்த!
என்துயர் தவிர்த்தி யாயின்
கார்க்கோல மேனி யானைக்
கூடுதி கடிதின்' என்றான்.

'நீ அப்படித் திரும்பப் போவதுதான் உன்னுடைய உயர்வான குணத்துக்கு ஏற்றது; நான் போரில் மடிவதுதான் எனக்கு ஏற்றது' என்கிறான்.

'தலைவ(ன்)நீ உலகுக்(கு) எல்லாம் உனக்கது தக்க தேயால்
புலையுறு மரணம் எய்தல் எனக்கது புகழ தேயால்.'

அண்ணன் தம்பி ஆகிய இருவரிடத்தும் பற்றுடைய கும்பகருணன் தன்னுடைய மனநிலையை மேலும் விளக்குகிறான். 'ஒருவனுடைய அரசன் அறிவிழந்து தீமை செய்ய எண்ணினால் அதைத் திருத்துதல் நன்று. அவனைத் திருத்த இயலாதாகில் வேறொன்றும் செய்வதற்கில்லை. போர்க்கோலம் பூண்டு, நமக்கு அன்னமிட்டவனுடைய சண்டையை நாமே ஏற்றுக்கொண்டு, அவன் சாவதற்குமுன் நம்முடைய உயிரை விடுவதே தக்கது' என்கிறான்.

'கருத்திலா இறைவன் தீமை
கருதினால் அதனைக் காத்துத்
திருத்தலா மாகில் நன்றே;
திருத்துதல் தீரா தாயின்
பொருத்துறு பொருளுண் டாமோ
பொருதொழிற்(கு) உரிய ராகி
ஒருத்தரின் முன்னம் சாதல்
உண்டவர்க்(கு) உரிய தம்மா.'

பிறகு இதையே வற்புறுத்தி, 'செம்பினால் செய்த மதில்களை

யுடைய செல்வம் பொருந்திய நகரத்தினுடைய சிறப்பின் மேலுள்ள ஆசையினாலே, மாலையணிந்த என்னுடைய தமையனுடைய உயிரைக் கொன்ற சத்துருவை வாழ்த்தி, அம்பினால் துளைக்கப்பட்டுக் கிழிந்து தைக்கப்பட்ட நெஞ்சோடு பகைவனைக் கும்பிட்டு வாழமாட்டேன், யமனையும் ஆட்டி வைத்தவனாகிய நான்!' என்று சொல்கிறான்.

'செம்பிட்டுச் செய்த இஞ்சித்
திருநகர்ச் செல்வம் தேறி,
வம்பிட்ட தெரியல் எம்முன்
உயிர்கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பிட்டுத் துன்னங் கொண்ட
புண்ணுடை நெஞ்சோ(டு), ஐய,
கும்பிட்டு வாழ்கிலேன் யான்
கூற்றையும் ஆடல் கொண்டேன்!'

என்று சொல்லி, பிறகு, 'நீ திரும்பப் போ. எங்கள் எல்லோருக்கும் பிதிர்க்கடன் இயற்று' என்று விபீஷணனை மார்போடு அணைத்து, இரங்கி ஏங்கி, கண்ணீர் நிறைந்த கண்களால் நெடுநேரம் பார்த்து, 'இன்றோடு உடன் பிறப்பு என்பது நீங்கிவிட்டது!' என்று சொல்லவும், விபீஷணன் அவனடித் தலத்திலே விழுகிறான். பிறகு, 'இனிப் பேசிப் பயனில்லை, வருந்தியும் பயனில்லை' என்று திரும்புகிறான். இந்தக் காட்சியைப் பார்த்தவர்கள் எல்லோரும் கைகூப்பி வணங்குகிறார்கள்.

திரும்பி வந்த விபீஷணன் இராமனிடம் நடந்ததைக் கூறுகிறான். 'விதியை யாரால் தீர்க்க முடியும்?' என்கிறான் இராமன்.

அதன் பிறகு போர் நிகழ்கிறது; கும்பகருணன் குரங்குகளை வதைக்கிறான்; லக்ஷ்மணனோடு பொருகிறான்; சுக்ரீவனோடு சண்டை செய்து, அவனை மயக்கமுறச் செய்

கிறுன்; அவனைத் தூக்கிக்கொண்டு இலங்கைக்குப் போகிறுன்; மற்றவர்கள் இன்ன செய்வதென்று தெரியாமல் திகைக்கும் போது இராமன் சரக்கூடம் கட்டி அவனைத் தடுக்கிறுன்; கும்பகருணன் இராமனைப் பார்க்கிறுன்; வீரம் பேசுகிறுன்; இராமனும் பதில் வீரம் பேசி அம்பு எய்கிறுன். அவன் மேலே பட்ட அம்புகளால் இரத்தம் பெருகி வழிகிறது; அது சுக்ரீவன் மேலே பட அவன் மயக்கம் தெளிகிறுன்; தெளிந்து கும்பகருணனுடைய மூக்கையும் காதையும் அடியோடு கடித்து விடுகிறுன்; பிறகு கும்பகருணனுக்கும் இராமனுக்கும் போர் நிகழ்கிறது; தனித் தனியே கைகளையும் கால்களையும் துணித் தெறிகிறுன் இராமன்; குறைவுபட்ட அந்த உடலோடும் வீரத்தன்மை நிறைந்த கும்பகருணன் போர் செய்வதை நிறுத்தவில்லை ; பிறகு இராமன் அவன் மீது மேன்மேலும் அம்புகளை எய்கிறுன்; தன்னுடைய காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்த கும்பகருணன் இராமனை ஒன்று வேண்டிக்கொள்கிறுன். 'என்னுடைய தமையனுன இராவணன் இரக்கமற்றவன். விபீஷணனைக் கண்டால் தம்பி என்று இரங்கமாட்டான். அவனைக் கொன்றேவிடுவான். ஆகையால் லக்ஷ்மணனுவது, நீயாவது, அனுமனுவது, யாராவது ஒருவர், இவனேடு கூடவே இருந்து இவனைக் காக்க வேண்டும்' என்கிறுன். இன்னென்றும் வேண்டிக்கொள் கிறுன்: 'என்னுடைய முகத்திலே மூக்கில்லை என்று என்னைப் பார்த்து முனிவர்களும் தேவர்களும் சிரிப்பார்கள். ஆதலால் ஒருவரும் என் முகத்தைக் காணுதபடி என் தலையை வெட்டிக் கடலினுள்ளே உன்னுடைய பாணங்களால் போட்டு விடு' என்கிறுன். இராமனும் அவ்வாறே செய்கிறுன்: கும்பகருணன் மேல் அன்பே பிறந்துவிடுகிறது. அவன் மரணத்தைக் குறித்து நாமும் கண்ணீர் வடிக்கிறேம்.

பிறகு சீதையை வஞ்சித்து, வசப்படுத்த முயன்று கொண்டிருக்கும் இராவணனிடம் தூதர் பறந்து போய், பையக் கிட்டே சென்று, 'குரங்குக் கடலைச் சிந்திய உன்னுடைய தம்பி இறந்தான்!' என்று தெரிவிக்கிறார்கள். காந்தி பொருந்தியவனும் சொலிக்கின்ற கிரணங்களை யுடையவனு யுமுள்ள சூரியனைப் போன்ற பொன் மாலை யணிந்த கிரீடங்கள் யாவும் தரையிலே கிடந்து புரளும்படி, பூமியிலே வேரூன்றி உயர்ந்து நின்ற பெரிய மரமானது கிளைகளோடும் வேரோடும் மண்மேல் சாய்வது போல இராவணன் மூர்ச்சித்து விழுந்தான் என்கிறார் கவி.

ஊரொடும் பொருந்தித் தோன்றும்
ஒளியவன் என்ன ஒண்பொன்
தாரொடும் புனைந்த மோலி
தரையொடும் பொருந்தத் தள்ளப்
பாரொடும் பொருந்தி நின்ற
மராமரம் பணைக ளோடும்
வேரொடும் பறித்து மண்மேல்
வீழ்வதே போல வீழ்ந்தான்.

பிறகு நினைவு தெளிந்து பலவாறாக இரங்குகிறான் இராவணன். 'ஒருத்தியின் மேலுள்ள ஆசையால் எத்தனை கேடுகள் விளைந்துவிட்டன' என்று எண்ணுகிறான். 'நீ இறந்து விட்டாய்: இனிமேல் நான் இங்கே உன்னைப் பிரிந்து உயிர் வாழமாட்டேன். உன் பின்னோடே நானும் வந்து விடுகிறேன், இதோ வந்துவிட்டேன்!' என்கிறான்.

'நொந்தேன், பிரியேன், தனிப்போகத் தாழ்க்கிலேன்,
வந்தேன் தொடர, மதக்களிறே, வந்தேனால்.'

இராவணனுடைய இவ்வளவு அன்புக்கும் உரியவனாகவே இருந்திருக்கிறான் கும்பகருணன்.

உருள

கம்பர் படைத்த கும்பகருணன் ஆண்மை மிக்கவன், அன்பும் மிக்கவன்; தீனியில் மிக்கவனாய், கட்குடியனாய், எப்பொழுதும் உறக்கம் கொண்டவனாய், தேவர் முனிவர் மானுடர் முதல் எருமைகள் ஈறாக யாவரையும் |உண்பவனாய் அவன் இருந்தபோதிலும், அவன் தவத்தில் மிக்கவனாயும் அறிவில் சிறந்தவனாயும் அஞ்சாத நெஞ்சு பெற்றவனாயும் விளங்குகிறான். தான் தீங்கு செய்யாத காலத்தும், தீங்கு செய்த தன் அரசன் பொருட்டுத், தன் தமையன் பொருட்டுத் தன் உயிரையே கொடுக்கிறான். தீமை செய்த இராவணன் மாட்டும் அறத்திலே நின்ற விபீஷணன்மாட்டும் ஒன்றுபோல அன்பு பாராட்டுகிறான். இது மிகச் சிறந்த தெய்விகத் தன்மையன்றோ? தர்மமும் அதர்மமும், பகைமையும் அன்பும், இராக்கதக் குணமும் தெய்விக இயல்பும் கலந்தவனாகக் கும்பகருணன் தோன்றுகிறான். நம்முடைய வெறுப்புக்கு அவன் இலக்காவதில்லை; நம்முடைய அன்புக்கே அவன் பாத்திரனாகி, நம்மை மிகவும் குழப்பமுறச் செய்கிறான். நம்முடைய மனத்தைக் கவர்ந்து, நம்மை யறியாமலே நம் முடைய நன்மதிப்பைப் பெறும் இவன் கம்பர் இயற்றிய அற்புத சிருஷ்டிகளுள் ஒன்று.

---

## கஎ. மாயா சனகன்

[ அ. நா. மகரபூஷணம், பி. ஏ., பி. எல். ]

கும்பகருணன் போர்க்களத்தில் பல வீரச் செயல்கள் புரிந்து, இராவணனுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்து கொண்டிருக்கிறான்.

அவ்வழிக் கருணன் செய்த
பேரெழில் ஆண்மை எல்லாம்

என்று கம்பர் அவன் வீர சௌந்தர்யத்தைப் பாராட்டுகிறார். ஆசை இழுத்துச் செல்லும் வழி யெல்லாம் மனம் செல்ல, எத்தகைய கொடிய மாயம் செய்தாவது சீதையை அடைய வேண்டுமென்று அதே சமயத்தில் இராவணன் எண்ணமிட்டுக்கொண் டிருக்கிறான். அரசன் இஷ்டப்படியே ஆலோசனை சொல்லுபவன் மகோதரன்; 'மாயைகள் பலவும் வல்ல' வன். 'சீதை தானாகவே உன்னை மணம் செய்துகொள்ள வல்ல மாயம் செய்வேன். மிகவும் நன்றாக நடிக்கவல்ல மருத்தன் என்பவனைச் சனகன் போல உருவம் மாறச் செய்து, கட்டி, சீதையின் முன்னால் கொண்டுபோனால் காரியம் நிறைவேறிவிடும்' என்று மகோதரன் யோசனை சொன்னதும், இராவணன் சீதையை அடைந்ததாகவே எண்ணம் கொள்ளுகிறான்.

இராவணன் தன்னை வெகுவாக அலங்காரம் செய்து கொண்டு, மிக அழகிய தேவ ஸ்திரீகள் கைகளிலே தீபங்கள் தாங்கித் தன்னைச் சுற்றிவர, மிகுந்த ஆடம்பரத்துடன்,

வினைகளைக் கற்பின் வென்ற
விளக்கினை வெருவல் காண்பான்

[ வினைகள் - (மாயச்) செயல்கள். கற்பின் - கற்பினுல். விளக்கு - மாதர் குல விளக்கான சீதை. வெருவல் காண்பான் - பயப்படுத்தும் பொருட்டு. ]

அசோக வனத்துக்கு வருகிறுன். வேறு யாதொரு உதவியும் இன்றித், தன் கற்பின் பெரும் பலத்திஞல் அரக்கர் மாயைகளை யெல்லாம் வெல்ல வல்ல சீதையை, மாயா சனகனைக் கொண்டு பயமுறுத்திவிடலாம் என்று எண்ணுகிறுன்.

காமப் பெரும் பித்துத் தலைக்கேறிய இராவணன் தன் ஆசையைச் சீதையிடம் தெரிவித்துக்கொள்ளும் கட்டங்களைக் கம்பர் சிறிதும் செயிர்ப்பின்றி மிருந்த அடக்கத்துடனும், அபாரமான கலைத் திறமையுடனும் அமைத்திருக்கிறுர்.

'என்றுதான் அடியனேனுக்(கு) இரங்குவது ?'

என்று இராவணன் தன் காதலைச் சீதையிடம் விண்ணப்பித்துக் கொள்கிறுன். சூரியனும்கூட அஞ்சும் இராவணனைச் சந்திரன் வெயில்போலக் காய்கிறுனும்.

'தன்னை எரித்த சிவனையும் வெற்றிகொண்ட என்னை அந்த மன்மதன் எளிய இலக்கமாகக் கொண்டு அம்பு எய்து புண் செய்கிறுனே! இவை யெல்லாம் நீங்கும்படி என்று நீர் அருள்செய்யப் போகிறீர் ?' என்று இராவணன் கெஞ்சுகிறுன்.

'இவ்வுலகில் என்னை வஞ்சகம்செய்து வெல்பவர் ஒருவரும் இல்லை. எனக்கு வஞ்சனை நானே செய்துகொண்டேன். நீர் பெண் வடிவுகொண்ட ஆலகால விஷம் என்று தெரிந்திருந்தும் உம்மை விரும்பினேன். உம்மை நான் பார்த்தபின் பல நாட்கள் கழிந்துவிட்டன. என் நெஞ்சிலே நிரந்தரமாக வீற்றிருக்கும் உம்மை மறப்பது சாத்திய

மாகுமா? பல நாட்களுக்கு முன்னமேயே என் உயிர் போயிருக்கும். இறந்தால் உம்முடைய நினைவு என் மனத்தை விட்டுப் போய்விடுமே என்ற பயத்தினாலேயே உயிரை அரிதில் பிடித்துவைத்துக்கொண் டிருக்கிறேன். அமுதத் தோடு பிறந்த மகாலக்ஷ்மியாகிய நீர் உயிர் அளித்துக் காப்பாற்ற வேண்டியிருக்கக் கொல்லலாமா? அழித்தாலும் ஆதரித்தாலும் அடியேனுடைய உயிரை உம்மிடம் அடைக் கலமாக ஒப்புவித்தேன்,' என்று இராவணன் சீதையைச் சரணமடைகிறான். இது ஒரு அற்புதக் கவியாக வெளிப் படுகின்றது.

'வஞ்சனேன் எனக்கு நானே !
மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுநோய் அமுதம் உண்பான்
நச்சினேன் ; நாளும் தேய்ந்த ;
நெஞ்சுநே ரான உம்மை
நினைப்புவிட்(டு), ஆவி நீக்க
அஞ்சினேன் ! அடிய னே(ன்)உம்
அடைக்கலம், அமுதின் வந்தீர் !'

[ நச்சினேன் - விரும்பினேன். ]

இராவணனுடைய கண்ணுக்கும் கருத்துக்கும் சீதை யைத் தவிர மற்றப் பெண்கள் ஒருவரும் பெண்ணாகத் தோன்றவில்லை! எதை அழைப்பதாயினும் சீதை என்ற ஒரே பெயரிட்டு அழைக்கிறான்! சீதையின் கண்களைத் தவிர அவனுக்கு 'விழிக்கும் கண் வேறு' இல்லை. மன் மதனுக்கு இராவணனை நோக்கி அம்பு எய்யத் தைரியம் வந் ததும், இராவணனுக்கும் ஆசை நிறைவேறாது அவஸ்தைப் படும்படி ஏற்பட்டதும் சீதையினால் வந்த விபரீதச் செயல் கள் அல்லவா! இராவணனுடைய இந்தப் புலப்பத்தைக்

கவிஞன் மிக உயர்ந்த காதல் கவி ஒன்றில் வெகு அற்புதமாகச் சித்திரித்துக் காட்டுகிறான் :

'பெண்ணெலாம் நீரே ஆக்கிப், பேரெலாம் உமதே ஆக்கிக்,
கண்ணெலாம் நும்கண் ஆக்கிக், காமவேள் என்னும் நாமத்(து)
அண்ணல் எய்வானும் ஆக்கி, ஐங்கணை அரியத் தக்க
புண்ணெலாம் எனக்கே ஆக்கி, விபரீதம் புணர்த்தி விட்டீர் !'

[ காமவேள் - மன்மதன். ஐங்கணை - (மன்மதனுடைய) ஐந்து (புஷ்ப) பாணங்கள். ]

சிறையிடத்தில் தன் காதலை விண்ணப்பித்துக்கொள்வதில் இராவணனுக்கு யாதொரு தவறும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்த இடத்தில் கவி வெகு சாதுரியமாக இராவணன் மூலம் அகலிகைக் கதையை நமக்கு நினைப்பூட்டுகிறார். அகலிகை காதல் கொண்டு இந்திரனை அடைந்தாள் என்றும், அதனால் அவளுக்கு யாதொரு குற்றமும் நேராதது மட்டுமன்றி அவள் சிறப்பையே அடைந்தாள் என்றும், இது அக்கதையை நடுவு நிலைமையில் நின்று ஆராய்பவருக்குத் தெரியும் என்றும் இராவணன் கதை சொல்லுகிறான். அகலிகைக்கு இராமனாலேயே சாப விமோசனம் ஏற்பட்டதென்பது தொனிப்பொருளாக அமைந்து கிடக்கின்றது.

'அந்தரம் உணரின், மேல்நாள்
அகலிகை என்பாள், காதல்
இந்திரன் உரத்தைப் புல்கி
எய்தினள் ; இழுக்(கு)உற் றாளோ ?'

[ அந்தரம் - நடுவுநிலைமை. உரம் - மார்பு. புல்கி - தழுவி. இழுக்கு - குற்றம். ]

அகலிகைக் கதையைத் தன்னிஷ்டப்படி திருத்தி அமைத்து, அகலிகையையும் தன்னையும் காதல் தெய்வத்தின்

அடியார்களாகப் பாவித்துக் கூறும் இராவணன், காதல் நோய்க்கு, காதலி வாய் திறந்து தன் சம்மதத்தைச் சிறி தாவது தெரிவிப்பதைத் தவிர வேறு மருந்தாவது மந்திர மாவது இல்லை, என்று கூறுகிறான். இதைக் கவிஞன் காமுகனாகிய இராவணன் சொல்வதாகக் காட்டுகையிலும் எவ்வளவு நயத்துடனும் அடக்கத்துடனும் சித்திரித்திருக் கிறான் !

'மந்திரம் இல்லை, வேறோர்
மருந்(து)இல்லை மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வாய்
அமு(து)அலால், அமுதச் சொல்லீர் !'

[ சுந்தரக் குமுதம் - அழகிய குமுத மலர். ]

இவ்வாறு இராவணன் தன் காதலைச் சீதையின் பாதங் களில் சமர்ப்பித்து, 'மகளிர் ஊடல் நாளினும் வணங்காத' தன் பத்துத் தலைகளையும் பல சூரியர்கள் போல் பிரகாசிக்கிற கிரீடங்களுடன் சீதையின் அடிகளிலே வைத்துச் சாஷ் டாங்கமாக வணங்குகிறான்.

சீதை இராவணனுக்குச் சொல்லும் பதில் உணர்ச்சித் திறம் மிகுந்த கவிதையின் உன்னத சிகரமாகும். புலியைத் தன் சமீபத்திலே திடீரென்று கண்ட மான்போலச் சீதை நடுங்கிக் கலக்கமுற்றுப், பின்பு ஒருவாறு தன்னைத் திடப் படுத்திக்கொண்டு, 'என் மனத்தில் இவனைப்பற்றி நினைப் பவைகளை அப்படியே சொல்வேன். அதனால் இவன் என்னைக் கொன்று விடுவதானாலும் சரி' என்று தீர்மானம் செய்கிறாள். 'இது பழி, இது பாவம் என்றும், இது முறையில்லை என்றும், இன்ன வார்த்தைகள்தாம் என்முன் சொல்லத்தக்கவை என்றும் நீ இன்னும் அறிந்துகொண்டா

யில்லை' என்று இடித்து உரைக்கத் தொடங்கும் சீதை, 'நீ இத்தகைய வார்த்தைகளை என்முன் சொன்ன பின்பும் உன் நெஞ்சம் பிளந்துவிடவில்லை. அரக்கர் குலத்துடனே நீ இன்னும் நிர்மூலமாக அழிந்துபோகவில்லை. என் கற்பு நன்றாக இருக்கிறது! தருமம் என்றும் ஒன்று இருக்கிறதா?' என்று சீதை தன்னையும் தருமத்தையும் பழிக்கிறாள்.

'கிழிகிலை நெஞ்சம், வஞ்சக்
கிளையொடும் இன்று காறும்
அழிகிலை என்றபோ(து) என்
கற்(பு)என்ஆம் ? அறம்தான் என்ஆம் ?'

[கிளை - சுற்றத்தார்.]

இராவணன் தேவர்களையும் மும்மூர்த்திகளையும் கூடத் துச்சமாகக் கருதியதைச் சீதை அறிவாள். அவர்களை யெல்லாம் வென்றதாகச் சொல்லிக்கொள்ளும் இராவணனைச் சீதை, 'நீ ஏதோ போர்க்களம் சென்றதாகவும், போர் புரிந்ததாகவும்கூடச் சொன்னாய். நீ போர்க்களத்தில் என் பிராண நாயகனைப் பார்க்கவும் பயந்து உயிர்மேல் ஆசை கொண்டு ஓடிவந்துவிட்டாய்போலும்!' என்று பரிகசிக்கிறாள்.

'"பூசலின் எதிர்ந்தேன்" என்றாய் ;
போர்க்களம் புக்க போ(து)என்
ஆசையின் கனியைக் கண்ணில்
கண்டிலை போலும் அஞ்சி !'

[ பூசல் - போர். ]

'நாம் இவ்வாறெல்லாம் சொல்லியும் சீதை இறந்துபட வில்லை. உயிரோடுதான் இருக்கிறாள்' என்று இராவணன் தப்பிதமாக அர்த்தம் செய்துகொள்ளுவான் என்று நினைக் கிற சீதை அவனை நோக்கி, 'உடனே உயிர் துறந்து பெரும்

புகழை அடையாது பட்டினி கிடந்துகொண்டும், நாணம் சிறிதும் இன்றி உன்முன்னே இருந்து உயிர் வைத்திருக்கும் உண்மைக் காரணத்தை அறிய விரும்புகிருயா? சகல நற் குணங்களும் நிறைந்த புண்ணிய மூர்த்தியான என் நாயக னுடைய திருமேனியை இன்னும் ஒரு முறையாவது காண லாம் என்னும் காதலாலேயே நான் உயிர் சுமந்துகொண் டிருக்கிறேன்' என்று தன் உண்மைக் காதலையும் உள்ளக் கருத்தையும் வெளியிடுகிருள். இந்தக் கருத்தை வெளி யிடும் கவியில் உண்மைக் காதலின் பெருமிதத்தையும் உறுதியையும், ஏக்கத்தையும் பார்க்கலாம்:

'ஊண்இலா யாக்கை பேணி,
உயிர்புகழ் சூடா(து) உன்முன்
நான்இலா(து) இருந்தேன் அல்லேன்:
நவைஅறு குணங்கள் என்னும்
பூண்எலாம் பொறுத்த மேனிப்
புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும்
காதலால் இருந்தேன், கண்டாய்!'

[ஊண் - உணவு. யாக்கை - உடம்பு. பேணி - காப்பாற்றி. நவை - குற்றம். பூண் - ஆபரணங்கள். பொறுத்த - பூண்ட.]

சீதையின் உள்ளத்திலே வெகு நாளாக ஒரு ஆசை ஊறிக் கிடக்கிறதாம். அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே, போகும் உயிரைப் பிடித்துவைத்திருக் கிருளாம். யுத்த களத்தில லக்ஷ்மணன், இராவணன் புறங் காட்டி ஓடிவிடாதபடி தடுத்து நிற்க, அவன் பத்துத் தலைகளை யும் கொன்று குவித்து அரக்கர் குலம் முழுவதையும் அழித்து வெற்றிகொண்டு நின்று உலகுக்கு அருள்செய்யும் இராமனின் திருக்கோலத்தைப் பார்க்கவேண்டிய ஆசையே

அது! இத்தகைய சீதையின் உள்ளக்கிடக்கை எவ்வளவு ஜீவ வேகத்துடன் வருணிக்கப்பெறுகின்றது!

'சென்றுசென்(று) அழியும் ஆவி
திரிக்குமால்; செருவில், செம்பொன்
குன்றுநின்(று) அனைய தம்பி
புறக்கொடை காத்து நிற்பக்,
கொன்றுநின் தலைகள் சிந்தி
அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின்(று) அருளும் கோலம்
காணிய கிடந்த வேட்கை!'

[ திரிக்கும் - திரும்பக் கொண்டுவரும். செரு - போர். புறக்கொடை - புறங்கொடுத்து ஓடுகை. காத்து - தடுத்து. ]

இவ்வாறு சீதை பதில் கூறியதும் இராவணனை மானம் கொல்கிறது. அவன் மிகுந்த கோபம் கொள்கிறான். 'என்னை இராமன் வெல்வதும், உன்னை அவன் மீட்பதும் சிறிதும் இயலாத காரியங்கள். தசரதன் சிறுவனைத் திருமால் என்று நீ மனப்பால் குடிக்கிறாய். அவன் திருமாலே ஆயினும், உன் மனத்திலே அவன் புகுந்து ஒளிந்து கொள்ளினும் அவனைக் கொன்று தீர்வேன். அவனுடன் வாழலாம் என்ற எண்ணத்தை அறவே ஒழிப்பாய்' என்று கூறுகிறான். சமுத்திரத்தை அணைகட்டிக் கடந்து, இலங்கையின் மதில்களைச் சூழ்ந்து, குரங்குகள் பல தடவை வளையிட்டது கொண்டு சீதை மகிழ்ச்சி கொள்வது வீண்; குரங்குகளை வெற்றி கொள்வது மிகவும் எளிதான காரியம் என்ற இராவணன் பெருமைப் பேச்சில் முன் 'நிந்தனைப் படல'த்தில் கண்ட மிடுக்கையும் வெற்றி உணர்ச்சியையும் இப்பொழுது நாம் காணவில்லை. முதல் நாள் போரில் தான்

அடைந்த பெருந் தோல்வியை அவன் எவ்வாறு மறக்க முடியும்?

இராவணன் பேச்சோடு பேச்சாகச் சொல்வது போல் அயோத்தியிலுள்ள இராமனுடைய சுற்றத்தார்களைப் பிடித்து வரும்படி ஆட்களை ஏவி யிருப்பதாகச் சொல்கிறான். அத்துடன் சனகனைக் கொண்டுவருமாறும் ஆட்களை அனுப்பி யிருப்பதாகவும் கூறுகிறான். அப்படி மிதிலைக்கு அனுப்பப் பட்ட ஆட்கள் நிச்சயமாக வென்றுவரக் கூடியவர்கள் என்பதைக் குறிப்பிக்க அவர்களுக்கு 'வெற்றியர்' என்று அடைமொழி கொடுக்கிறான். கவி இவ்வளவு சாமர்த்தியமாக மாயா சனக நாடகத்துக்குத் தோற்றுவாய் செய்கிறார். இதைவிட முக்கியமாக, மாயா சனகன் நாடக அரங்கில் பிரவேசிப்பதன் முன், சீதையின் மன நிலைமையைக் கம்பர் மிகவும் அற்புதமாக, மனோதத்துவ அறிஞர்கள் வியக்கும்படி விளக்குகிறார். 'என் நாயகனுடனும் லக்ஷ்மணனுடனும் இருந்த என்னையே கொண்டுவந்துவிட்ட இந்த அரக்கனுக்கு அயோத்தியிலுள்ளவர்களையும், என் தகப்பனையும் கொண்டு வருவது கஷ்டமா!' என்று எண்ணி நடுங்கினாள்; பெருமூச்செறிந்தாள்; மனம் கொதித்தாள். நெருப்பைத் தின்று தின்று உமிழ்கின்றவள்போலத் துன்பத்துக்கே இருப்பிடமானாள். 'என்னை இங்கு வந்து சிறையிருக்குமாறு செய்த விதி, அயோத்தியிலும் மிதிலையிலும் உள்ள என் சுற்றத்தாரும் இவன் கையில் சிக்கும்படி செய்ய என் வினை செய்யாது?' என்று சீதை எண்ணிக் கண்ணீர் சொரிகின்றாள். 'அதருமமே இனி தருமம் போலும்!' என்று எண்ணிச் சீதை வெறுப்படைந்து மனம் கசந்தாள். இத்தகைய மனநிலைமையுடன் சீதை இருக்கும்போதுதான் மாயா சனகன் சீதையின் முன்னே தோன்றும்படி கவி கட்டத்தை

மிகவும் நுண்ணிய மனோதத்துவ அறிவுடன் அமைத்திருக்கிறார்.

மாயா சனக நாடகம் ஆரம்பமாகிறது. சனகன் வாய் திறந்து அரற்ற, மகோதரன் அவனைக் கட்டி இராவணன் முன்னே கொண்டுவருகிறான். 'ஐயோ, என்ன அவமானம்! சீதையின் கண்காணச் சனகன் இராவணனை வணங்குகிறான்! தாய்ப் பறவை நெருப்பில் விழக் கண்ட அநாதையான குஞ்சு அடையும் அளவில்லாத துயரத்தைச் சீதை அடைந்தாள். சீதை கைகளை ஒடித்துக்கொண்டாள்; கண்களில் மோதிக்கொண்டாள்; நெருப்பை மிதித்தன போல் சீதையின் கால்கள் தரையில் தரிக்காமல் துடித்தன. உடம்பு போல் மனமும் எரிந்தது; ஏங்கி அழுதாள்; உடல் நடுங்கிப் புழுதியில் விழுந்து புரண்டாள்; கதறினாள். தகப்பனிடத்திலே அவள் கொண்ட அன்பு அவள் சிறிதும் சந்தேகியாதபடி அவள் கண்களை மயக்குகின்றது. அவள் அடைந்த மெய்ப்பாட்டை வருணிக்கும் பாட்டில் உணர்ச்சிப் பெருக்கு மிகுந்து காணப்படுகின்றது:

கைகளை நெரித்தாள்; கண்ணில் மோதினாள்; கமலக் கால்கள்
நெய்எரி மிதித்தால் என்ன நிலத்திடைப் பதைத்தாள்; நெஞ்சம்
மெய்எனஎரிந்தாள்; ஏங்கி விம்மினாள்; நடுங்கி வீழ்ந்தாள்;
பொய்என உணராள் அன்பால்; புரண்டனள்; பூசலிட்டாள்.

[பூசல் - சப்தம்.]

தகப்பனைக் குறித்துப் பிரலாபிக்கும் சீதையின் பெண்மை உள்ளத்திலே தோன்றும் புலப்பத்தைக் கேளுங்கள். பெண்ணுக்குப் பிறந்த வீட்டார் செய்ய வேண்டிய கடமைகளை அயோத்தியில் வந்திருந்து செய்யச் சனகனுக்குக் கொடுத்துவைக்கவில்லையாம். நாடிழந்து காட்டில் புருஷனை

யும் பிரிந்து சிறையில் வசிக்கும் மகளைப் பார்க்கத் தானும் சிறையில் அகப்பட்டு வரும்படி ஆயிற்றே! வேத நெறி சிறிதும் தவறாத ராஜ ரிஷியான சனகனுக்கா இந்தக் கதி நேர வேண்டும்! பெண் பெற்றுப் புண் பெற்றான் சனகன் என்று சீதை வருந்திப் புலம்புகிறாள். தன் தகப்பன் கதி இதுவாக, தாய்மார், தமக்கைமார், சிறிய தகப்பன் முதலிய வர்கள் கதி என்ன ஆயிற்றோ என்று ஏங்குகிறாள். 'என் தகப்பனுக்கே இவ்வாறானால் தவத்தையே பெருக்கி, உடல் வலி குன்றிய பரதனை வெல்வது இவ் அரக்கருக்கு அரிய செயலா? பரதனை இராவணன் சிறைக் கொண்டான் என்று கேள்வியுற்றால் இராமன் உயிர் தரியான்; லக்ஷ்மணனும் உயிர் விடுவான். ஐயோ, தருமத்தை நம்பி இருப்பவர்களுக்குக் கிடைக்கக்கூடிய பலன் இதுவா?' என்று சீதை அலறு கிறாள். சீதையின் மனக்கோட்டை எப்படித் தகர்ந்துவிட் டது! இராமனுடைய சேனை சமுத்திரத்தில் அணை கட்டி யாய்விட்டது; இலங்கையின் மதில்புறம் வந்து சூழ்ந்தாய் விட்டது; அரக்கரை அழித்தது என்று திரிசடை முத லானவர்கள் சொல்லக் கேட்கும்போ தெல்லாம் தான் அடைந்த பெருஞ் சந்தோஷத்தை மாய விதி திடீரென்று சதி செய்து சிதற அடித்துவிட்டதே என்று சீதை மனம் வருந்திப் பெருஞ் சோர்வடைகிறாள்.

மாயா சனக நாடகத்தின் முதல் அங்கம் வெற்றிகரமாக நடந்துகொண்டிருப்பதைக் கண்டு மிகவும் மனம் மகிழ்ந்து பார்த்துக்கொண்டிருந்த இராவணன், 'சீதை இப்பெருந் துயரத்தை இனித் தாங்காள். இதுதான் ஏற்ற சமயம்' என்று கனவு காண்கிறான். 'உன்னை அடையும்பொருட்டு, உன்னிடம் கொண்ட பெருங் காதலாலேயே, உன் தகப்பனை இவ்வாறு பிழைசெய்து அபசாரம் செய்தேன். என் பிழை

யைப் பொறுப்பாய்' என்று இராவணன் சீதையிடம் மன்னிப் புக் கேட்கிறான். திரிலோகாதிபத்தியத்தையும், தன் செல் வங்கள் அனைத்தையும், மிகவும் கொடிய தவம் செய்து பரம சிவனிடத்தில் தான் பெற்ற வாளையும்கூடச் சனகனுக்கே கொடுத்துவிட்டுச், சீதையைத் தொழுதுகொண்டிருப்ப தையே தனக்கு வாழ்வாகக் கொண்டு வாழ்வானும்! 'சுந்த ரப் பவள வாயால் ஒரு மொழி சிறிது' சொல்லும்படி இராவணன் சீதையை வேண்டுகிறான். தன் முப்பாட்டனான பிரமதேவன் தானாகவே வந்து சனகன் விரும்பும் எல்லா வரங்களையும் கொடுப்பானும். சீதையே திருமகளின் அவ தாரம் இல்லாவிடில், திருமகளையே சீதைக்கு ஏவல் செய்யும் சேடியாக நியமிப்பானும்: இவ்வாறு கூறும் இராவணன் பெருமைப் பேச்சில் சீதையின் பேரழகில் மயங்கிய அவன் பெரு மயக்கமும் காணப்படுகின்றது:

'. . . . . . . . . . . . . . அமிழ்தின் வந்த
செந்திரு நீரல் லீரேல் அவளும்வந்(து) ஏவல் செய்யும்!'

இராவணனுடைய காதல் பைத்தியத்துக்குச் சீதை சொல்லும் பதில் வார்த்தைகள் வருணிக்கும் தரத்ததல்ல: 'சொல் நலம்' கடந்தவை. இக்கவிகள் வீரச் சுவையின் பேரிலக்கியமாவன. 'உனக்குச் சிறிதும் பாத்தியதை இல் லாத திரிலோகாதிபத்தியத்தையா சனகனுக்குக் கொடுக்கப் போகிறாய்? நீ அக்கிரமமாக அபகரித்த உன் இலங்கை அரசே உனக்குத் தங்காதே! பேரறிஞனான விபீஷணன் அல்லவா அதை அடையப்போகிறான்!' என்று சீதை பதில் சொல்லத் தொடங்குகிறாள். 'என் நாயகனுடைய பயங்கர மான அம்புகளே உன்னுடன் சிரித்து விளையாடப் போகின் றன. அவ் வம்புகள் உன் கொடிய மார்பைப் பிளந்து சல்ல

டைக் கண்களாகத் துளைத்துப் புண் செய்யப்போகின்றன. மலைகளும் உடைந்து விழும்படி பிறக்கும் கோதண்டத்தின் நாண் ஒலிகளே உன்னோடு தக்கபடி கொஞ்சி உரையாடும் இனிய வார்த்தைகள்!' என்று சீதை பெருஞ்சீற்றம் கொள்கிறாள். சீதையின் சீற்றம் அளவு கடந்து பெருகுகின் றது. 'நீ யுத்த களத்தில் என் நாயகனால் கொல்லப்பட்டுப் பிரேதமாகக் கிடக்கும்போது உன் கண்களைத் தோண்டும் காக்கைகளே உன்னுடன் சல்லாப வார்த்தைகள் பேசப் போகின்றன. அவன் வில்லிலிருந்து பொழிகின்ற அம்பு களே உன்னைக் கூடப்போகின்றன. உன்னை மகிழ்ச்சியுடன் மார்புறத் தழுவிக்கொள்ளப் போவன எவை தெரியுமா? போர்க்களத்தில் உன் பிரேதத்தைத் தேடிவரும் பிணம் தின்னிப் பேய்களே!' என்று கூறும் சீதையின் வீர மொழிகள் நம்மைப் பீதி யடையச் செய்கின்றன:

'சொல்லுவ மதுர மாற்றம் துண்டத்தால் உண்டுன் கண்ணைக்
கல்லுவ காகம்; வந்து கலப்பன கமலக் கண்ணன்
வில்உமிழ் பகழி; பின்னர் விலங்(கு)எழில் அலங்கல் மார்பம்
புல்லுவ களிப்புக் கூர்ந்து புலவுநா(று) அலகை எல்லாம்!'

[மாற்றம் - சொற்கள். துண்டம் - மூக்கு. கல்லுவ - தோண்டுவன. பகழி - அம்புகள். விலங்கு - விளங்குகின்ற. எழில் - அழகை உடைய. அலங்கல் - மாலை. புலவு - புலால். அலகை - பேய்கள்.]

இவ்வளவும் சொன்னதோடு சீதை திருப்தி யடைய வில்லை. இராவணனைப் பற்றிய வார்த்தை ஒன்றைக் கேட்கச் சீதை பெரு விருப்பம் கொண்டிருக்கிறாளாம். அது என்ன? இராமனுடைய தவறாத அம்புகள் இராவணனுடைய பத்துத் தலைகளையும் அறுத்துக் குவிக்க, அவன் உயிர் துறந்தான்

என்று அநுமான் வந்து அந்தச் செய்தியைச் சிதையிடம் தெரியப்படுத்த வேண்டுமாம்! இவ்வாறு மேன்மேலும் அதி கரித்து வந்த சிதையின் கோபம் மிகவும் உச்ச நிலையையும் பெரும வேகத்தையும் அடைவது இந்தக் கட்டத்தின் கடைசிக் கவியிலேயே. 'அல்பனே, கேள்! என் வாயால் இனிய மொழி சொல்லும்படி கேட்டாய் அல்லவா? சொல்கிறேன். யுத்தத்தில் உன் அருமை மகன் இந்திரசித்தன் உயிரை லக்ஷ்மணனுடைய அம்புகள் பருக, இந்திரசித்தன் பிரேதத்தை நாய்கள் தின்ன, "என் மகன் இறந்தான்" என்று நீ கதறி அலறுவதைக் கேட்க விரும்புகிறேன் என்பதே நான் உன்னிடம் சொல்லும் இனிய வார்த்தை!' என்று சீதை கூறி முடிக்கிறாள். இது கவிஞனுடைய சிருஷ்டியில் மிக உயர்ந்த கவிதையாக வெளிவருகிறது.

'புன்மக! கேட்டி, கேட்டற்(கு) இனியன! புகுந்த போரின்
உன்மகன் உயிரை எம்மோய் சுமித்திரை உய்ய ஈன்ற
நன்மகன் வாளி நக்க, நாய்அவன் உடலை நக்க,
"என்மகன் இறந்தான்" என்று நீஎடுத்(து) அரற்றல்!' என்றாள்.

[ புன்மக - அற்பத்தன்மை உள்ளவனே. எம்மோய் - எமது தாய். உய்ய - (யாவரும்) ஈடேறும் பொருட்டு. நல்மகன் - சிறந்த லக்ஷ்மணன். எடுத்து - குரல் எடுத்து. ]

லக்ஷ்மணன் இந்திரசித்தனைக் கொல்வதும் இராவணன் புத்திர சோகத்தினால் துடிப்பதும் எதிர்கால சம்பவங்களாகச் சிதையின் மனக் கண்ணின் முன்னே தோன்றுகின்றனவா? அல்லது அவை சிதையின் சாபத்தின் விளைவாகவே நேர்ந்தனவா?

சிதையின் பதிலைக் கேட்ட இராவணன் கடுஞ் சீற்றம் கொண்டு, தான் கொண்ட அளவு கடந்த காதலையும் ஒரு

க்ஷணம் மறந்து, சீதையைக் கொல்ல ஓடுகிறான். சனக நாடகத்தின் சூத்திரதாரனான மகோதரன் தடுக்கிறான். 'நீ வேண்ட இசையாத சீதை, பெற்ற தகப்பன் வேண்டினால் இணங்குவாள்,' என்று மிகவும் தந்திரமாக மாயா சனகனைக் குறித்து நினைப்பூட்டுகிறான். இராவணனை ஆசை மறுபடியும் மூடிக்கொள்கிறது. இப்பொழுது இந்த மாய நாடகத்தின் இரண்டாம் அங்கம் தொடங்குகிறது. மருத்தன் தன் திறமை முழுமையும் காட்டி நடிக்கிறான். திரிலோகாதிபதியான இராவணேச்வரனை ஏற்றுக்கொள்ளும்படி மாயா சனகன் சீதையின் கால்களில் விழுந்து மன்றாடுகிறான்.

சீதையின் கோபம் மிகவும் உச்ச நிலையை அடைகிறது. 'இவ்வுரை எந்தை கூறான்!' என்று சீறுகிறாள். 'தந்தையும் பிழை செய்வானாயின் அவன் வயிற்றில் பிறந்திலேன்' என்று சீதை உயர்ந்த நீதி தருமத்தை எடுத்துக் கூறுகிறாள். 'வமிச நாசம் நேரிடுவதாயினும் நல் வாழ்வு நாசமடைவதாயினும் ஒழுக்கம் தவறி ஒரு நாளும் வாழேன்!' என்று சீதை தன் நிச்சயத்தை வெளியிடுகிறாள். சனகனும், அவன் சுற்றத்தார் யாவரும், இந்தப் பூமி முழுவதுமே அழிவதாயினும் அவளுக்குக் கவலையில்லை. அன்னையரையும் தமக்கையரையும் நினைத்துக் கதறிய சீதைக்கு அவர்கள் அழிவும் ஒரு பொருளாகப் புலப்படவில்லை. சனகனை எப்படித் 'தந்தை அல்லன்' என்றாளோ அவ்வாறே அவன் சுற்றத்தாரை 'நின் கிளைஞர்' என்று வேறுபடுத்திக் கூறுகிறாள். 'பரம்பொருளை நாயகனாக அடைந்து அடிமை செய்யும் பாக்கியம் படைத்த நான், நாணத்தை விட்டு, உயிர் மேல் ஆசைகொண்டு, ஒரு நாயைக் கண்ணெடுத்தும் பார்ப்பேனா?' என்று நெஞ்சம் குமுறுகிறாள். இவ்வீர உரை மிக உயர்ந்த ஒரு கவியாக வெளிப்படுகின்றது:

‘நீயும்நின் கிளையும் மற்(று)இந் நெடுநில வரைப்பும் நேரே
மாயினும், முறைமை குன்ற வாழ்வனோ! வயிரத் திண்தோள்
ஆயிரம் நாமத்(து) ஆழி அரியினுக்(கு) அடிமை செய்வேன்
நாயினை நோக்கு வேனோ, நான்துறந்(து) ஆவி நச்சி!’

[நெடுநில வரைப்பும் - பூமி முழுதும். ஆழி - சக்கராயுதம். அரி - திருமால். நச்சி - விரும்பி.]

சீதையின் கடைசி வார்த்தை இன்னும் அற்புதமானது. ‘என் வீர நாயகனின் வெற்றி வில்லையே வாழ்த்திக்கொண்டிருந்து அவன் மீட்பானாயின் மீளுவோம். அவன் மீளாமல் போனால் சந்தோஷத்தோடு உயிர் துறப்போம். இப்படித் துணிவு கொள்ளாமல் சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொல்லி நிரந்தரமான பழியைச் சூட்டிக்கொண்டாய்’ என்று சனகனை நோக்கி வீர கர்ஜனை செய்வதாக வெளிப்படும் பாட்டின் உணர்ச்சிப் பெருக்கும் கவிதா சன்னதமும் வெகு அற்புதமாக அமைந்து கிடக்கின்றன :

‘. . . . . . . . . . . . . வீரன்
வில்லையே வாழ்த்தி, மீட்கின் மீள்வது; மீட்சி என்பது
இல்லையேல் இறந்து தீர்தும்; இதுஅலால் இயம்பலாகாச்
சொல்லையே உரைத்தாய்! என்றும் பழிகொண்டாய்!’
என்னச் சொன்னாள்.

சீதையின் மனத்தை இன்னும் அறிந்துகொள்ளாமல் ஆசை வாய்ப்பட்டுழலும் அரக்கனுக்கு, மாயா சனகன் என்று சீதை சந்தேகிப்பதாகவே தோன்றுகிறது. ‘உன் சந்தேகம் ஒழிய உன் கண் முன்னே உன் தந்தையை இதோ கொன்றுவிடுகிறேன்!’ என்று சொல்லி இராவணன் வாளை உருவிக் கொள்கிறான். சீதை சிறிதும் கலங்கவில்லை. ஆனால் மகோதரனுக்கு நடுக்கம் ஏற்படுகிறது, மருத்தனை எங்கே இராவணன் தன் காதலுக்குப் பலியாகக் கொடுத்து விடு

வானே என்று. 'சனகனைக் கொல்வதில் யாதொரு பொருளு மில்லை. சீதையை இணங்கும்படி அவன் மனமார வேண்ட வில்லையா? இராமனை நீ நிச்சயமாய் வெல்லப்போகிறாய். அப்பொழுது சீதை உன்னை அடைவதில் சந்தேகமில்லை. அக்காலத்தில் "என் தந்தையை இவன் கொன்றானே!" என்று எண்ணும்போதெல்லாம் சீதையின் மனம் என்ன பாடு படும்!' என்று சாமர்த்தியமாகச் சொல்லி மகோதரன் மருத்த - சனகனுக்கு உயிர்ப்பிச்சை பெறுகிறான். (இந்தக் கட்டத்தில் மருத்தன் எப்படி நடித்திருக்கவேண்டும்!)

அப்பொழுது கும்பகருண வதத்தினால் வானர சேனை செயயும் ஆரவாரம் தேவர்கள் வாழ்த்தொலியுடன் கலந்து இராவணன் செவிகளிலே விழுகின்றது. இராம லக்ஷ்மணர்கள் செய்த நாணொலி எல்லாவற்றுக்கும் மேலே இராவணன் காதைத் தொளைக்கிறது. 'தம்பியைப் போர்க்களத்தில் தனி யாக விட்டுவிட்டு இங்கு எத்தகைய காரியம் செய்துகொண் டிருக்கிறேன்?' என்று இராவணன் திடுக்கிடுகிறான். அதே சமயத்தில் போர்க்களத்திலிருந்து செய்தி கொண்டுவந்த தூதர், ஓடோடியும் வந்து, சீதைக்குக் கேட்காதபடி, இராவ ணன் காதருகில் சென்று, மெதுவாக, 'கூட்டம் கூட்டமான வானரர்களை வதம் செய்து, உன் தம்பி இராமன் அம்பினால் இறந்தான்' என்று செய்தி தெரிவிக்கின்றனர். பூமியின் ஆழத்திலே வேரூன்றி நெடுங்காலமாக அசைவின்றி நின்ற மகா விருட்சம் ஒன்று திடீரென்று தன் ஆயிரம் கிளைகளு டனும் வேரற்று விழுவதே போல, இராவணன் மண்மேல் விழுகிறான். சீதையையும், மாயா சனகனையும், யாவரையும் மறக்கிறான். பெருஞ் சோகத்தினால் தம்பியைக் குறித்துப் புலம்புகிறான். தான் சீதையினிடத்துக் கொண்ட காதலே தனக்கு நேர்ந்த அனர்த்த பரம்பரைகளுக்குக் காரண

மாயிற்று என்றும், அவ் ஆசை காரணமாகவே கும்பகருணனை இழந்தும் இன்னும் உயிர் சுமந்துகொண்டு திரிவதாகவும் இராவணனுக்குச் சிறிது பூர்வஞானம் பிறக்கிறது.

இராவணன் அழுகை சீதையின் உள்ளத்தில் பெரு மகிழ்ச்சியை விளைவிக்கிறது. இந்த இடத்தில் கம்பரின் கவிதை மிகவும் உயர்ந்து மாயா சனகப் படலத்தின் சிகரமாக விளங்குகிறது. ஒரு க்ஷணம் சீதை தன்னை மறக்கிறாள். 'ஐயோ! யுத்தகளத்தில் பிரம்மாண்டமான உருவத்துடன் மகா பயங்கரமாகத் தோன்றுகிற இந்த ராக்ஷஸன்தானா கும்பகருணன்! அவனை எதிர்த்து நிற்கிறான் சுந்தரவில்லியான தன் உயிர் நாயகன்! போரின் முடிவைப்பற்றிச் சீதைக்குத் திடீரென்று சிறிது அச்சம் ஏற்படுகிறது. அப்பொழுது இராமன் அம்பினால் கும்பகருணன் இறந்தானென்று இராவணன் அலறும் வார்த்தை சீதைக்குக் கேட்கிறது. இராமனுடைய அம்பு சிறிதும் தவறியதுண்டா? இராமனுடைய ஜயத்துக்கு எப்பொழுதாவது குறைவுண்டாகுமா? இராமன் கும்பகருணனைக் கொன்ற வார்த்தையைச் சீதை கேட்டாளா? பல நாளாக ஊண் துறந்திருந்த சீதை ஆகாரம் அனைத்தையும் உடனே அருந்தியவள் போல் அவ் வார்த்தையை உண்டாள். இளைத்திருந்த சீதை, மெலிவு அகல, உடல் பூரித்தாள். 'இது சீதைதானா? இன்னொருத்தியா?' என்று சந்தேகப்படும்படி அந்த மந்திர வார்த்தை அவளை மகிழ்ச்சியினால் மாற்றிவிடுகின்றது. இந்தக் கட்டத்தைக் கம்பர் சிருஷ்டித்திருக்கும் அற்புதத்தை வேறெங்கும் காண முடியாது.

கண்டாள் கருணனை! தன் கண்கடந்த தோளானை!
கொண்டாள் ஒருதுணுக்கம்! அன்னவனைக் கொற்றவனார்
தண்டாத வாளி தடிந்த தனிவார்த்தை
உண்டாள்! உடல்தடித்தாள் வேறொருத்தி ஒக்கின்றாள்!

[ கண்கடந்த தோளானை - (தன்) கண்களுக்கு அடங்காத பேரழகு படைத்த, வீரத் தோள்களையுடைய இராமனை. துணுக்கம்-நடுக்கம். கொற்றவனார் - வெற்றி பொருந்திய இராமன். தண்டாத-தவறாத. வாளி - அம்பு. தடிந்த - வெட்டித் தள்ளிய. தனிவார்த்தை—ஒப்பற்ற செய்தி. ]

சனக நாடகத்தைச் சீதையும் மறந்தாள்; இராவணனும் மறந்தான். ஆனால் மகோதரன்மட்டும் மறக்கவில்லை. 'இச் சனகனைக் கொண்டுபோய்ச் சிறையில் அடையுங்கள்!' என்று ஏவிவிட்டு, மகோதரன் நாடக அரங்கிலிருந்தும் வெளியேறுகிறான். மருத்தனும் கடைசிவரை நடித்துவிடுகிறான். மாயா சனக நாடகம் இத்துடன் அரைகுறையாக முடிந்துவிடுகிறது. விபீஷணனுடைய புதல்வியும் அசோகவனத்தில் சீதைக்கு அருந்துணையாக வாய்த்தவளுமான திரிசடை மாயா சனகனைப் பற்றிய உண்மையைச் சொல்லிச் சீதையைத் துயர் நீக்குகிறாள்.

மாயா சனகன் கதை கம்பருடைய சிருஷ்டி; வால்மீகி முனிவரால் சொல்லப்படவில்லை. மாயா சீதையைக் காட்டி இராம லக்ஷ்மணர்களைத் துன்புறுத்தும் கதையை இரண்டு மகா கவிகளும் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் வால்மீகி மாயா இராமன் கதை ஒன்று சொல்லுகிறார். மகா மாயாவியான ஒரு அரக்கனைக்கொண்டு வெட்டப்பட்ட இராமன் தலை ஒன்றும் நாணேற்றின கோதண்டம் ஒன்றும் நிருமிக்கச் செய்து, அவற்றைச் சீதைக்குக் காட்டி, சீதையை மாயம் செய்ய இராவணன் முயற்சிக்கிறான் என்றும், அவசரமாக மந்திரிகளால் அழைக்கப்பட்டு இராவணன் சென்றதும் மாயத் தலையும் வில்லும் மறைந்தன என்றும், விபீஷணன் மனைவி சீதையைத் தேற்றுகிறாள் என்றும் இவ்வாறாறு சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரசித்தன் விட்ட பிரம்மாஸ்திரத்தால்

இறந்தவர் போலவே கட்டுண்டு கிடக்கும் லக்ஷ்மணனையும், வானர வீரர்களையும், லக்ஷ்மணன் நிலையைக் கண்டு இறந்தது போல் மூர்ச்சித்துக் கிடக்கும் இராமனையும் காட்டிச் சீதைக்குப் பெருந் துக்கத்தை விளைத்த வரலாற்றை வால்மீகியும் கம்பரும் வருணித்திருக்கிறார்கள். உண்மையான இராமனைச் சீதை இறந்ததாகக் கண்டு அடைந்த சோகத்தை வருணிக்கும் கம்பர், 'மாயா ராமன்' கதையைக் கையாள விரும்பவில்லை. அதற்குப் பதிலாக மாயா சனகன் கதையைச் சிருஷ்டித்துக் கொண்டார் என்று ஊகிக்கலாம். இக் கதையை இயற்றிக் கும்பகருண வதத்தின் போது இம்மாயா சனகக் கதையை இடை யமைத்த கலைத் திறமை விசேஷமானது. கதை விவரங்களில் வால்மீகத்திலிருந்து பல இடங்களிலும் கம்பர் மாறுபட்டிருக்கிறார். தம் காலத்தில் வழங்கிவந்த வேறு ராம கதைகளையும் கம்பர் தெரிந்து,தமக்குப் பொருத்தமாகத் தோன்றியவற்றைத் தம் இராமாயணத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறார் என்பதும் உண்மையே. ஆயினும், வால்மீகியிலிருந்து வேறுபட்ட முக்கியமான இடங்களில் எல்லாம் கம்பர் தம் கலை உணர்ச்சியையே துணையாகக் கொண்டு கதை விவரங்களை மாற்றி அமைத்திருக்க வேண்டும். கும்பகருணன் வதையை வால்மீகியில் இல்லாத விவரங்களுடன் சித்திரித்த கம்பர் அதற்குச் சமாதானமாகவும் மாயா சனகப் படலத்துக்குத் தோற்றுவாயாகவும்,

'செவ்வழி உணர்வு தோன்றச் செப்பினம்'

என்று கூறியிருப்பதும் உய்த்துணரத் தக்கது.

மாயா சனகன் கம்பனின் அற்புத சிருஷ்டி! கற்பனை சக்தியின் எல்லையை, கலைத் திறமையின் உச்ச ஸ்தானத்தை, கவிதா சன்னதத்தின் சிகரத்தை இப்படலத்திலே காண்கிறோம்.

---

அநுபந்தம் :

## ‘சிறையின் எய்திய செல்வி’

இலங்கையிலே சீதை சிறைப்பட்டிருக்கிறாள். உலகு ஈன்ற அம்மனாகிய ஜானகி - லோக மாதா - ‘மூவுலகுக்கும் கங்குல்’ விடிவதற்காகத் தானே எல்லாத் துன்பங்களையும் மேற்கொள்ளுகிறாள். மலர்மேல் நின்றும் இந்த உலகத்தில் அவள் அவதரிக்கத் தருமமே தவம் செய்ததாம். ஆனால் உலகம் உய்வதற்காக அவளே தவம் செய்ய நேரிட்டது.

அறம் புகாத இலங்கையினுள்ளே அனுமன் இரவில் புகுந்து நாலா பக்கங்களிலும் சுற்றி, சீதையைத் தேடுகிறான். எங்கு பார்த்தாலும் பொன்மயமான மாளிகைகள், ஆனந்தமாய் உறங்கும் அரக்கர்கள், பல கேளிக்கைகளில் களிக்கின்றவர்கள் — இத்தகைய களிக்கின்றாரையே யன்றிக் கவல்கின்றாரை - கவலைப்படுகின்றவரைக் காணவே முடியவில்லை. இலங்கையே பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி யிருக்கின்றது. இந்த இன்ப சாகரத்தின் நடுவேதான் சோகமே உருவெடுத்த சீதை சிறையுற்றிருக்கிறாள்.

இந்நூலின் மேல் உறையிலே கொடுக்கப் பெற்றிருக்கும் ‘சிறையின் எய்திய செல்வி’யின் படம் திரு. ‘ஆரியா’ வரைந்தது. கம்பனுடைய கவிகளைச் சிலமுறை கேட்டு அவன் கருத்தைத் தழுவியே இதை எழுதியுள்ளார். கம்பன் கொடுக்கும் கவிச் சித்திரம் வருமாறு :

முரட்டு அரக்கியர் சூழ்ந்திருந்து துன்புறுத்த அவள் வாடி மெலிந்திருப்பது, பாறையின் மேல்

முளேத்த ஓர் அரிய பச்சிலேச் செடி வெகு நாளாய் மழை முகமே காணுமல் வாடிச் சுருண்டு கிடப்பதை ஒத்திருக்கிறது. முன்னெல்லாம் அவள் இடைதான் சிற்றிடையா யிருந்தது; இப்பொழுது அவள் உடலே சிற்றுடலாகப் போய்விட்டது.

தூக்கமின்றிக் கண்கள் மூடுவதையும், இமைப்ப தையும் விட்டு நெடுநாளாயிற்று. 'சதகோடி மின் சேவிப்ப மின்னரசு என்னும்படி' மிதிலேயிலே வாழ்ந்த ஜனகன் பெற்ற அன்னம், இலங்கையிலே, 'வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யா' ளாக, புலிக் கூட்டத்தின் மத்தியிலே அகப்பட்ட இள மான்போல் இருக்கிருள்.

அசோக வனத்தில் அவள் அல்லும், பகலும், அறுபது நாழிகையும் விழுந்து, விம்மி, வெருவி, எழுந்து, ஏங்கி, இரங்கி, இராமனே எண்ணித் தொழுது, சோர்ந்து, தளங்கி, துயருழந்து, வற்ருமல் நிரந்தர மாகக் கண்ணீர் பொழிந்து அழுதுகொண்டே யிருக் கிருள்.

எப்படியாவது வேதநாயகனுன இராமன் வரு வான், வருவான் என்கிற துணிவால் அவள், 'கருதி மாதிரம் அனேத்தையும் அளக்கின்ற கண்ணு'ளாகி யிருக்கிருள்.

அவளுடைய குழல் திரண்டு ஒரே ஜடையாகத் தொங்குகின்றது. வானத்தை விட்டு நிலத்திலே வந்து கிடக்கிற ஒரு சந்திரனே ராகு கவ்விச் சிறிது உமிழ்ந் திருப்பது போல், அவளுடைய ஜடையும் முகமும் அரவும் மதியும் போல் விளங்குகின்றன.

சிறைப்பட்ட நாள்முதல் நீரிலே தோயாத சீதை யின் உடல், மன்மதன் ஆதரவோடு அமிழ்தத்தால் செய்த ஓர் 'ஓவியம் புகையுண்டதே' போல் ஒளி யில்லாம லிருக்கிறது.